உ

ஸ்ரீராமகிருஷ்ணஜெயம்

# ஆத்ம ஞான இரத்தினம்

என்னும்

# 1004 உபதேச மொழிகள்

(ஸ்ரீ ஸ்வாமி விவேகாநந்தர்
அருளிச்செய்தது)

ஆசிரியர் :—

ஸ்ரீஜத் சுப்பிரமணிய சிவம்

ஸ்ரீ சாது இரத்தின சற்குரு புத்தகசாலை
நெ. 4/34 சவினியப்ப நாயக்கன் தெரு
பார்க்டவுன் (P. O.) சென்னை

 [விலை ரூபாய் 2

உ

ஸ்ரீராமகிருஷ்ணயநம:

# ஸ்ரீ ஸ்வாமி விவேகாநந்தர்

அருளிச்செய்த

# ஆத்மஞானரத்தினம்

என்னும்

## 1004 உபதேச மொழிகள்.

---


'சச்சிதானந்த சிவம்' நூலாசிரியர்

ஸ்ரீஜத் சுப்பிரமணிய சிவம்

இயற்றியது


---


பிரசுரித்தவர்:

சை. ந. பாலசுந்தரம்,

ஸ்ரீ சாது இரத்தின சற்குரு புஸ்தகசாலை,

பார்க் டவுன், (P. O.) சென்னை.

இந்நூலாசிரியர் - ஸ்ரீஜத் சுப்பிரமணிய சிவம்

## இயற்றிய வேறு தமிழ் நூல்கள்

| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீஜத் சுப்பிரமணிய சிவம் ஜீவிய சரித்ரம் | 0 | 6 | 0 |
| "சச்சிதானந்த சிவம்" சிறைச்சாலைக்குள் எழுதிய சிறந்த குரு சிஷ்ய சம்பாஷணையான வேதாந்தபொக்கிஷம் (3-ம்பதிப்பு) | 1 | 2 | 0 |
| மோக்ஷ சாதன ரகசியம் ... | 1 | 8 | 0 |
| ஞானரத்னம் ... ... | 0 | 4 | 0 |
| பகவத்கீதா சங்கிரகம் ... ... | 0 | 2 | 0 |
| ஸ்ரீபரமஹம்ஸ இராமகிருஷ்ணர் விஜயம் | 1 | 4 | 0 |
| ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்ஸர் விரிவான சரித்திரம் 703 பக்கம் 41 அத்தியாயம் | 2 | 0 | 0 |
| ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸர் சரித்திரங்களும் உபதேசங்களும் ... | 1 | 12 | 0 |
| ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸர் பிரஹ்மானந்த சம்பாஷணை | 2 | 4 | 0 |

## ஸ்ரீ ஸ்வாமி விவேகாநந்தர் தமிழ் நூல்கள்

| | | | |
|---|---|---|---|
| வேதாந்தரகஸ்யம் 1 8 0 எதிரொலிகள் | 0 | 8 | 0 |
| கிழக்கும் மேற்கும் 0 8 0 தற்காலஇந்தியா | 0 | 10 | 0 |
| ஆத்மஞானரத்னம் ... ... | 2 | 0 | 0 |
| கடிதங்கள் 1, 2, 3-பாகங்கள் தனித்தனி | 0 | 8 | 0 |
| ஸ்வாமிகள் பல நண்பருடன் செய்த சம்பாஷணைகள் ... ... | 2 | 0 | 0 |
| நளின சுந்தரி நாகரீக தடபுடல் (நாவல்) | 0 | 8 | 0 |
| வீரத்ந பாஜிப்ரபு தேஷ்பாண்டே | 0 | 3 | 0 |

இந்நூல்கள் கிடைக்குமிடம் :—

ஸ்ரீ சாது இரத்தின சற்குரு புஸ்தகசாலை,
நெ. 4/34 நயினியப்ப நாயக்கன் வீதி,
பார்க் டவுன், (P. O. சென்னை.

# முகவுரை

ஜடநாகரிகத்திலே நிர்த்தனம் செய்து கொண்டிருந்த மேனுட்டாருக்கும் அம்மேனுட்டாருடைய மினுமினுப்பு மாயையிலே விழுந்து தங்களுடைய ஆர்யதர்மங்களை மறந்து அநுசாரங்களிலே மூழ்க ஆரம்பித்த இப்பரத கண்டத்தவர்க்கும் அநாதி வேத உபதேசங்களை யெல்லாம் அழுக்கற எடுத்துப் போதித்த அவதார புருஷர் ஸ்ரீ விவேகாநந்த ஸ்வாமிகளுடைய பேச்சுக்களும் எழுத்துக்களுமாகிய விலை மதிப்பிட முடியாத சுரங்கத்திலிருந்து முக்கியமான விஷயங்களை யெல்லாம் ஆங்காங்கு பொறுக்கியெடுத்து, "ஆத்மஞானரத்தினம்" என இப் பெயருடன் உலகுக்கு அளிக்கின்றேன். ஸ்வாமிகளுடைய ஆழ்ந்த ஆராய்ச்சியிலே அவர் அநுபவ பூர்வமாகக் கண்டறிந்த அநேக உண்மைகள் இந்தப் புத்தகத்திலே நிறைந்து கிடக்கின்றன. ஆத்மாவே தோற்றல் மாத்திரமாயிருக்கின்ற இவ்வுலகனைத்துக்கும் அஸ்திவாரமாயிருத்தலால், இவ்வுலகிலே ஆத்மஞானத்தைத் தவிர வேறு ஞானமில்லை யென்பதே என்னுடைய சித்தாந்தம். ஆனல் ஆத்மஞானத்துக்கும் உலக அறிவுக்கும் ஒத்துப்போக முடியாத வித்தியாசங்கள் இருக்கின்றனவே யென்ருல், அந்த வித்தியாசம், ஸ்வாமிகள் சொல்கிறமாதிரி, அளவிலேயேயுள்ளது, மாதிரியிலல்ல. அஞ்ஞானம் என்பது என்ன ? பேதஞானமே அஞ்ஞானம் ; ஒன்றை மற்றென்ருகக் கருதுவதே பேத ஞானமாகும். கருத்திலேலே ஞானம் வேறுபட்டதேயன்றி உண்மையிலில்லை. ஆகையினுலே ஆத்மஞானமே

பேத ஞானமாக விளங்குகிறது. உலக அறிவுக்கும் ஆத்ம ஞானமே காரணமாகும். ஆதலால், ஸ்வாமிகளுடைய கூற்றுக் களிலே, ஆத்மஞானத்தைத் தவிர வேறொன்றுமேயில்லை. ஆகையினுல் அவர் பேசியதெல்லாம் ஆத்மஞானமே. பலவகைப் பட்ட பார்வையையுடைய உலகினர்களுக்கு அவருடைய கூற் றுக்களில் சில பலவிதமாய் விளங்கலாம்; அது அவர்களுடைய பார்வையினுலேயே ஒழியவேறில்லை. ஆதலால், இந்த "ஆத்ம ஞானரத்தின"த்தைத் தமிழ்நாட்டினர் அனைவரும் ஆவலு டன் அணிந்து கொள்வார்களானுல், தமிழ்நாடு சீக்கிரம் ஒளி பெற்று அழகு வாய்ந்து உன்னத ஸ்திதியையடையும் என்ற திட நம்பிக்கைகொண்டே, நான் இப்புத்தகத்தை வெளியே அனுப்பு கின்றேன். ஸ்வாமிகளுடைய ஜீவித பல்லவியாயிருந்த பலம், சக்தி, தன்னம்பிக்கை இக்கொள்கைகளையும் இக்கொள்கை களுக்கு அஸ்திவாரமான "நான் அவனே, நான் அவனே" என்ற அத்வைத முடிபையும் இதில் சிதறிக் கிடக்கக் காண லாம். திண்ணை வேதாந்தம் பேசி, சோம்பேறி மடங்களிலே காலம் கழிக்கும் காலம் போய்விட்டது; வேதாந்தமானது நம் முடைய தினசரியநுபவத்திலே கொண்டுவரப்பட வேண்டிய காலம் இது ஆனுல்தான் நமது தேசம் மேன்மையடையும். அதற்கு இந்த "ஆத்மஞானரத்தினம்" அனுகூலமாயிருக்குமாறு ராஜராஜேஸ்வரியாம் மகாசக்தி கிருபைபுரிவாளாக.

திருவல்லிக்கேணி,
சென்னை,
20-6-22.

சுப்பிரமணிய சிவம்.

The Sadhu Press, Madras.

ஓம்

"எழுமின்! விழிமின்!

கருதிய கருமம் கைகூடும் வரை

உழைமின்! அறிமின்!"



ஸ்ரீ இராமகிருஷ்ணாயநம:

# ஸ்ரீ ஸ்வாமி விவேகாநந்தர்

அருளிய

# ஆத்மஞான ரத்தினம்

1. மிக மிகச் சமீப காலத்தில் கண்டுபிடிக்கப்பட்ட சாஸ்திரமும் எதனுடைய எதிரொலிகளாகத் தோன்றுகின்றனவோ அந்த வேதாந்த தத்துவ ஞானத்தின் சிரேஷ்டமான ஆத்மீக சோபானங்கள்முதல் பல்வித வேறுபாடுகளையுடைய புராணக்கதைகளுடன்கூடிய மிகமிகத் தாழ்ந்த வடிவ பூஜைக் கருத்துக்கள், பௌத்தர்களுடைய சம்சயவாதம், சமணர்களுடைய நாஸ்திகம் இவைவரையில் ஒவ்வொன்றுக்கும் ஹிந்துவினுடைய மதத்தில் ஒரு இடம் உண்டு.

2. சோதனையே ஒரு கொள்கைக்குப் பரிபூரணப் பிரமாணம்.

3. சகோதரர்களே! அமிருதாநந்தத்துக் குரியவர்கள் என்ற அவ்வழகிய பெயரால் உங்களைக் கூப்பிடுவதற்கு எனக்கு அநுமதி கொடுங்கள்! ஆம், ஹிந்துவானவன் உங்களைப் பாபிகளென்று அழைப்பதற்கு மறுக்கிறான். நீங்கள் ஈசுவரனுடைய புத்திரர்கள்; அமிர்தாநந்தத்துக்குப் பங்காளிகள்; பரிசுத்தமும் பரிபூரணத் தன்மையும் வாய்ந்த ராசிகள். பூவுலகில் தெய்வங்களாயுள்ள நீங்கள் பாபிகளா? மனிதனை யப்படி அழைப்பது ஒரு பாபமேயாம். அது மனுஷ்ய இயற்கையின்மீதே ஏற்பட்ட ஒரு நிலைத்த நிந்தனையாய்விடும். ஏ, சிம்ஹங்களே! வாருங்கள்! நீங்கள் ஆடுகளென்று நினைத்துக்கொண்டிருக்கும் பிரமையை உதறிவிடுங்கள்! நீங்கள் அழிவற்ற ஆத்மாக்கள்; முக்தாத்மாக்கள்; பாக்கியவந்தர்கள்; நித்தியர்கள்; நீங்கள் ஜடமல்லர்; நீங்கள் சரீரமல்லர்; ஜடமானது உங்களது பணியாளன்; நீங்கள் ஜடத்துக்குப் பணியாள ரல்லர்.

4. இந்தப் பந்தமானது ஈசுவர கிருபையினாலேயே நீங்கவேண்டும்; இந்தக் கிருபையானது பரிசுத்த புருஷர்கள் மீதே உண்டாகிறது. ஆகையால், பரிசுத்தத் தன்மையே அவருடைய கிருபையை யடைதற்கு ஒரு நிபந்தனை.

5. சாஸ்திர மென்பது, ஒற்றுமையைக் கண்டு பிடித்தலைத் தவிர வேறொன்று மில்லை.

6. மூடபக்தியானது மனிதனுக்கு ஒரு பெரிய சத்துரு; ஆனால், மூடப் பிடிவாதமானது அதனினும் தீயது.

7. ஒரு மனிதன் தனது தெய்வீகத் தன்மையை ஒரு பிம்பத்தின் உதவியினால் அநுபவத்தில் அறிந்துகொள்ளமுடியுமானால், அதைப் பாபமென்று கூறுவது நியாய மாகுமா? அவன் அந்த நிலைமையைக் கடந்த பின்னரும்கூட, அவன் அதைத் தப்பிதமென்று கூறுதல் கூடாது. ஹிந்துவினுடைய அபிப்பிராயத்திலே மனிதன் தப்பிதத்திலிருந்து உண்மையை நோக்கிச் செல்கிறதில்லை. ஆனால், உண்மையிலிருந்து உண்மைக்கு, தாழ்ந்த உண்மையிலிருந்து உயர்ந்த உண்மைக்குச் செல்கிறான்.

8. பிரபஞ்சம் முழுவதுக்கும் பொதுவாக ஒருமதம் இருக்கவேண்டுமானால் அது இடத்தையாவது, காலத்தையாவது ஆதாரமாகக் கொண்டில்லாததாக இருக்கவேண்டும்; அது, போதிக்கும் கடவுளைப்போல அகண்டமா யிருக்கவேண்டும்; அதன் ஒளி கிருஷ்ணனுடைய சிஷ்யர்கள்மீதும், கிறிஸ்துவினுடைய சிஷ்யர்கள்மீதும், சாதுக்கள்மீதும், சண்டாளர்கள்மீதும் ஒரே மாதிரியாக வீசும்; அது பிராஹ்மணர்களுடையதாய், அல்லது பௌத்தர்களுடையதாய், அல்லது கிறிஸ்தவர்களுடையதாய், அல்லது மகம்மதியர்களுடையதாய் இராது; ஆனால், இவ்வெல்லாம் சேர்ந்ததா யிருக்கும்; இன்னும் அபிவிருத்திக்கு எல்லையற்ற இடம் பெற்றதாயிருக்கும்; அது அதனுடைய தாராளத் தன்மையிலே, மிருகத்தினின்றும் அதிகம் வேறுபடாத மிகமிகத் தாழ்ந்த காட்டுமிராண்டியிலிருந்து, அறிவு அன்பு ஆகிற குணங்களினால் அநேகமாக மனுஷ்ய வர்க்கத்துக்கு மேலே சிறந்து நிற்கும்

மிகமிகச் சிரேஷ்டமான புருஷன் வரையில் ஒவ்வொரு மனுஷ்ய ராசிக்கும் தனது அகண்டமான கைகளினுள்ளே அணைத்துக் கட்டி இடங் கொடுத்து, அந்த சிரேஷ்டமான புருஷனைக் கண்டு ஜனசமூகம் பயந்து நின்று, அவனுடைய மனுஷ்ய ஸ்வபாவத்தைக்கூடச் சந்தேகிக்கும்படிச் செய்யும். கொரேத்துக்காவது பொறுமை யின்மைக்காவது அதில் இடமிராது; அது ஒவ்வொரு புருஷனிலும் ஸ்திரீயிலும் தெய்வீகத் தன்மையை அறிந்துகொள்ளும். அதன் சக்தி முழுதும் மனுஷ்ய வர்க்கமானது தன்னுடைய சொந்த, உண்மையான தெய்வீகத் தன்மையை அநுபவத்தில் அறிந்துகொள்ளும் விஷயத்தில் உதவி செய்வதற்கே செலுத்தப்படும்.

9. பசித்துக் கிடக்கும் ஜனங்களுக்கு மதோபதேசம் செய்வது அவர்களை நிந்திப்பதுபோ லாகும்; பசித்துக் கிடக்கும் ஒரு மனிதனுக்குத் தத்துவ ஞானத்தை உபதேசிப்பது அவனை நிந்திப்பதாகும்.

10. யூதர்கள் இயேசுகிறிஸ்துவைப் புறக்கணித்தார்கள்; அதுமாத்திரமன்று; அவரைச் சிலுவையிலும் அறைந்தார்கள். ஹிந்துக்கள் ஸாக்கியமுனியை ஈசுவரனென்று ஒப்புக்கொண்டு அவரைப் பூஜிக்கின்றார்கள்.

11. குருமூர்த்தியினு (புத்தரு)டைய உத்கிருஷ்டமான மகிமையானது அவர் ஒவ்வொருவரிடத்தும், முக்கியமாக அறிவீனர்களிடத்தும் எளியவர்களிடத்தும் காண்பித்த ஆச்சரியமான அனுதாபத்தில் அடங்கிக் கிடந்தது. அவருடைய

சிஷ்யர்களிற் சிலர் பிராஹ்மணர்களாயிருந்தார்கள். புத்தர் உபதேசித்த காலத்தில் சம்ஸ்கிருதமானது இந்தியாவில் பேசும் பாஷையா யில்லாமல் ஆய்விட்டது. புத்தருடைய பிராஹ்மண சிஷ்யர்களிற் சிலர் அவருடைய உபதேசங்களை ஸம்ஸ்கிருதத்தில் மொழிபெயர்க்க விரும்பினார்கள்; ஆனால் அவர், அவர்களிடத்தில் தெளிவாக, 'நான் எளியவர்களுக்காகப், பொது ஜனங்களுக்காக இருக்கிறேன்; நான் பொது ஜனங்களுடைய பாஷையிலேயே பேசட்டும்,' என்று சொல்லிவிட்டார். ஆகையால், இன்றுவரை அவருடைய உபதேசங்களிற் பெரும்பான்மையும் இந்தியாவில் அக்காலத்தில் இருந்த பொதுஜன பாஷையிலேயே இருக்கிறது.

12. தத்துவஞானத்தின் நிலைமையாதாயிருந்தாலும் சரி; ஜடாதீத ஞானத்தின் நிலைமை யாதாயிருந்தாலும் சரி; உலகில் மரணமென்று ஒரு விஷயம் உள்ளவரையில், மனுஷ்ய ஹிருதயத்திலே பலஹீனமென்று ஒரு விஷயம் உள்ளவரையில், மனுஷ்யனுடைய ஹிருதயத்திலிருந்து அவனுடைய பலஹீனம் காரணமாக ஒரு கூச்சல் வெளியே கிளம்பிக்கொண்டிருக்கிறவரையில், ஈசுவரன் ஒருவன் உளனென்ற நம்பிக்கை யொன்று இருக்கத்தான் செய்யும்.

13. ஹிந்து மதமானது புத்தமத மில்லாமலிருக்க முடியாது; புத்த மதமும் ஹிந்துமத மில்லாம லிருக்கமுடியாது. அப்படியாயின், பிரிவு நமக்கு எதை நிரூபித்திருக்கிறதென்பதைப், புத்தர்கள் பிராஹ்மணர்களுடைய அறிவும் ஞானமும் இல்லாமல் இருக்க முடியாதென்பதை, அதே மாதிரி

பிராஹ்மணனும் புத்தனுடைய ஹிருதயமில்லாமல் இருக்க முடியாதென்பதை அறிந்துகொள்ளுங்கள்! புத்தர்களுக்கும் பிராஹ்மணர்களுக்கும் உண்டான இந்தப் பிரிவே இந்தியாவின் வீழ்ச்சிக்குக் காரணம். அதனால்தான் இந்தியா முப்பது கோடி பிச்சைக்காரர்களால் வசிக்கப்பெற்றிருக்கிறது; அதனால்தான் இந்தியா சென்ற ஆயிரம் வருஷங்களாக ஜயிப்பவர்களுக்கு அடிமையாயிருந்து வருகிறது. அப்படியாயின், நாம் பிராஹ்மணனுடைய அற்புதமான புத்தி சக்தியையும், உத்தமகுருமூர்த்தியின (புத்தரு)டைய ஹிருதயத்தையும், சிறந்த ஆத்மாவையும், அற்புதமான உயிர்ப்பிக்கும் சக்தியையும் ஒன்று சேர்ப்போம்.

14. மனிதன் எங்கிருந்தாலும் சரி; அவன் ஒரு நம்பிக்கையை விருத்தி செய்துகொள்ள வேண்டும்; அவன் தனது மத இயற்கையை விருத்தி செய்துகொள்ள வேண்டும்.

15. உனது சரீரம் மரணமடையலாம்; ஆனால், உனது ஆத்மா ஒருபொழுதும் மரணமடைவதில்லை.

16. புநர்ஜனனக் கொள்கையானது ஆத்மாவின் ஸ்வதந்திரத்தன்மையை வற்புறுத்துகிறது. முதல் முதல் ஆதியொன்று இருந்ததாக வைத்துக்கொள்வோம். அப்படியாயின், மனிதனிடத்துள்ள அசுத்தத்தன்மையாகிற சுமை முழுதும் ஈசுவரனுடைய புஜங்களின்மீது விழுகிறது? சர்வ கிருபாநிதியாகிய பிதா, உலகத்துப் பாபங்களுக்குப் பொறுப்பாளி. இம்மாதிரி பாபம் ஏற்படுகிறதானால் ஒருவன் இன்னொருவனைவிட ஏன் அதிகம் கஷ்டமுறவேண்டும்? சர்வ கிருபா

மிதியாகிய கடவுளிடமிருந்து பாபம் வருவதானல், ஏன் அத்தனைப் பட்சபாதம்? லக்ஷக்கணக்கான ஜனங்கள் ஏன் கால்களின் கீழ்ப் போட்டு மிதிக்கப்படுகிறார்கள்? தாங்கள் பட்டினி கிடக்கும்படியாக எக்காரணத்தையும் எப்பொழுதும் செய்யாத ஜனங்கள் ஏன் பட்டினி கிடக்கிறார்கள்? எவர் பொறுப்பாளி? அதற்கு அவர்கள் காரணமாகாவிட்டால், கடவுளே பொறுப்பாளியாகவேண்டுமென்பது நிச்சயம். ஆகையால், மிகவும் நல்ல நியாயம் யாதெனில், ஒருவர் அநுபவிக்கிற துக்கங்கட்கு அவரே பொறுப்பாளி யென்பதே. நான் சக்கரத்தைச் சலனத்துக்கு உட்படுத்தினல், பலன்களுக்கு நானே பொறுப்பாளி. என்றால், துக்கத்தைக் கொண்டுவர முடியுமானல், என்னல் அதை நிறுத்தவும் முடியும்.

17. ஹிருதய சுத்த முள்ளவர்களே பாக்கியவான்கள்; ஏனெனில், அவர்கள் கடவுளைத் தரிசிப்பார்கள். "நாம் கடவுளைக் காண முடியுமா? முடியாதென்பது உண்மையே. நாம் கடவுளை யறிய முடியுமா? முடியாதென்பது உண்மையே. கடவுள் அறியப்படத் தக்கவரானல், அதற்குமேல் அவர் கடவுளாகமாட்டார். அறிவு என்பது எல்லைக்கு உட்பட்டதே.

18. ஒரு மனிதன் உலகிலேயே மிகமிகப் பெரிய தத்துவ சாஸ்திரியா யிருக்கலாம்; ஆனல், மத விஷயத்திலே குழந்தையா யிருக்கலாம்.

19. புத்தகங்கள் ஒருபொழுதும் தங்களை யுண்டாக்கியதில்லை; ஆனல், மதங்களே புத்தகங்களை யுண்டாக்குகின்றன.

20. ஒரு மனிதன் உலகிலுள்ள எல்லாக் கோவில்களி லும் நம்பிக்கை வைத்திருக்கலாம்; இதுவரை எழுதப்பட் டுள்ள பரிசுத்த கிரந்தங்களை யெல்லாம் அவன் தன் தலையின் ன்மீது சுமந்து செல்லலாம்; அவன், உலகிலுள்ள எல்லா நதிகளிலும் ஸ்நானஞ் செய்யலாம்; ஆயினும், அவன் ஈசுவர தரிசன முடையவனா யில்லாவிட்டால், நான் அவனை மிகமிகத் தடித்த நாஸ்திகன் என்றே கூறுவேன். ஒரு மனிதன் ஒரு கோவிலுக்குள்ளாவது, அல்லது ஒரு பள்ளிவாசலுக்குள்ளா வது ஒருபொழுதும் நுழைந்திருக்கமாட்டான்; எவ்வித காரி யமும் செய்திருக்கமாட்டான். ஆனால், அவன் தன்னுள்ளே ஈஸ்வரனை யுணர்ந்துகொண்டு, அதனால், உலக வினைத்தனங் களுக்கு மேலே கிளம்பிவிடுவானானால், அவனை நீ எப்படி யழைத்தாலும் சரி; அந்த மனிதன் ஒரு பரிசுத்த புரு ஷன்; ஒரு மகாத்மா.

21. மனுஷ்ய வர்க்கம் முழுவதினிடத்தும் அன்பும் தயாளத்துவமும், அதுவே உண்மையான மதச் சிரத்தைக் குச் சோதனையாம்.

22. ஒரு கோவிலில் பிறப்பது நன்மையே; ஆனால், அங்கு இறப்பது தியதாம்.

23. அநேக வருஷங்களுக்குமுன்னர் நான் எங்கள் தே சத்து மஹான் ஒருவரை, மிகவும் பரிசுத்த புருஷர் ஒரு வரைப் பேசிப் பார்த்தேன். நாங்கள் எங்களுடைய வேதங் களைப்பற்றியும், உங்களுடைய பைபிளைப் பற்றியும், கொரா னைப்பற்றியும், பொதுவாக அத்தகைய கிரந்தங்களைப்

பற்றியும் பேசிக்கொண்டிருந்தோம். எங்கள் பேச்சு முடியும் சமயத்தில் இந்த நல்ல மனிதர் என்னை மேஜையண்டை சென்று ஒரு புத்தகத்தை யெடுக்கும்படி என்னிடம் சொன்னார். வேறு விஷயங்கள் உள்பட, அந்த வருஷத்தில் இவ்வளவு மழை பெய்யும் என்ற விஷயமும் குறிப்பிடப்பட்டிருந்த புத்தகம் அது அந்த மகாத்மா "அதைப்படி" என்றார். நான், பெய்யவேண்டிய மழை இவ்வளவென்று வாசித்தேன். அவர், "இப்பொழுது புத்தகத்தை யெடுத்து அதைப் பிழி?" என்றார். நான் அப்படியே செய்தேன்; அவர் "எனது பையனே! ஏன் ஒரு துளி ஜலம் கூட வரவில்லை? ஜலம் வருகிற வரையில்; அது எல்லாம் புத்தகமே, புத்தகமே. ஆகையால், உனது மதமானது நீ ஈசுவரனை யநுபவத்தில் அறியும்படி செய்கிறவரையில், அது பயனற்றதே. மதத்தின் பொருட்டே கிரந்தங்களைப் படிக்கின்றவன், தனது முதுகில் ஒரு பெறும் சர்க்கரை மூட்டையைச் சுமந்து சென்றும் அதன் இனிமையை அறியாத கழுதையின் கதையை ஞாபகப்படுத்துகின்றான்.

24. அறை இருட்டாயிருந்தால், நீ மாரடித்துக்கொண்டும், இருட்டு, இருட்டு, இருட்டு என்று கூவிக்கொண்டும் நீ சுற்றுகிறாயா? இல்லை. வெளிச்சம் அடைவதற்குள்ள ஒரே வழியாதெனில், விளக்கேற்றுதலேயாம். அப்பொழுது இருள் போய்விடுகிறது. உனக்கு மேலுள்ள ஒளியை அனுபவத்தில் அறிதற்கு ஒரே வழி யாதெனில், உன்னுள் உள்ள ஆத்ம

திபத்தை ஏற்றுதலாம்; பிறகு பாபமாகிற அந்தகாரமும் அசுத்தமும் பறந்துவிடும்.

25. ஸ்வதந்திரமா யுள்ளது யாது? நமது சரீரமன்று. ஏனெனில், அது வெளியேயுள்ள நிலைமைகளைச் சார்ந்திருக்கிறது. நம் திமனமும் ஸ்வதந்திரமா யில்லை: ஏனெனில், அது ஆக்கப்பட்ட நினைப்புக்கள் காரணங்களையுடையவைகளாயிருக்கின்றன. அதுதான் (ஸ்வதந்திரமாயுள்ளதுதான்) ஆத்மா. உலகு முழுதும் ஸ்வதந்திரமும் சார்பும், ஸ்வதந்திரமும் அடிமைத்தனமும் சேர்ந்த ஒரு கலப்பாகும் என்று வேதங்கள் கூறுகின்றன. ஆனால், அதனூடெல்லாம் ஆத்மாவானது ஸ்வதந்திரமாய், மரணமற்றதாய்ப், பரிசுத்தமானதாய்ப், பரிபூர்ணமானதாய், மேன்மை மிக்கதாய்ப் பிரகாசிக்கிறது. ஏனெனில், அது ஸ்வதந்திர முள்ளதானால், அது மரிக்க முடியாது, மரணமானது ஒரு மாறுதலேயாயும் நிலைமைகளைச் சார்ந்ததாயும் உள்ளதனால்; அது ஸ்வதந்திர முள்ளதானால், அது பரிபூர்ணமானதா யிருத்தல் வேண்டும். ஏனெனில், பரிபூர்ணக் குறைவும் ஒரு நிலைமையே; ஆகையால், சார்புள்ளது.

26. மதமென்பது விரிவே யாகும்; விரிவு என்பது அநுபவ ஞானமாகும்.

27. சுகம் மனுஷ்யனுடைய லக்ஷியமன்று; ஆனால், ஞானமே யாகும்.

28. லௌகிக அல்லது வைதிக அறிவெல்லாம் மனுஷ்ய மனத்திலேயே யுள்ளது.

29. ஒரு துண்டு சக்கிமுக்கிக் கல்லில் நெருப்பு உள்ளதுபோல, ஞானமும் மனத்திலே யுள்ளது; ஆலோசனையே அதை வெளியே கொண்டுவருதற்குச் செய்யப்படும் உராய்தலாம்.

30. ஒரு மனிதனுடைய ஒழுக்கத்தைப்பற்றி நீ உண்மையில் நியாயம்கூற விரும்பினால், அவனுடைய பெரும் செய்கைகளைக் கவனியாதே. ஒவ்வொரு மூடனும் ஏதேனும் ஒரு சமயத்தில் வீரனாய்விடலாம். ஒரு மனிதன் அவனுடைய மிகமிகச் சாதாரணமான செய்கைகள் செய்வதைக் கவனித்துப் பார். ஒரு மனிதனுடைய உண்மையான ஒழுக்கத்தைப்பற்றி உங்களுக்குக் கூறும் விஷயங்கள் உண்மையில் அவையேயாம். மிகமிகத் தாழ்ந்த மனுஷ்யாசிகளையும் ஏதோ ஒருவிதப் பெருமைக்குப் பொருத்த சந்தர்ப்பங்கள் கிளப்புகின்றன. ஆனால், எவனுடைய ஒழுக்கமானது எப்பொழுதும் பெருமையுடையதாகவும், அவன் எங்கிருந்தாலும், ஒரே மாதிரியானதாகவும் இருக்கின்றதோ அவனே உண்மையில் பெரியோன்.

31. உலகில் நாம் பார்க்கின்ற செய்கைகளெல்லாம், மனுஷ்ய சமூகத்திலுள்ள சலனங்களெல்லாம், நம்மைச் சுற்றிலுமுள்ள வேலைப்பாடுகளெல்லாம், நினைப்பின் பிரகாசமேயாம்; மனுஷ்ய சங்கற்பத்தின் வெளிப்பாடேயாம்.

32. எவனும் எதையேனும் சம்பாதித்தாலொழிய, அதை யடைய முடியாது. இது ஒரு நித்திய நியதி; அப்படியன்றென்று நாம் சில சமயங்களில் நினைக்கலாம்; ஆனால்

கடைசியில் நாம் அது உண்மையேயென்று தெளிவடைகின்றோம்.

33. எவ்விதமான ஸ்வயநல நோக்கமு மில்லாமல், பிற் காலத்தைப்பற்றியாவது, மோக்ஷத்தைப்பற்றியாவது, தண்டனையைப் பற்றியாவது, அல்லது அம்மாதிரியான எதையேனும்பற்றியாவது கொஞ்சமும் நினைக்காமல் ஐந்து நாட்களுக்காவது, அல்லது ஐந்து நிமிஷங்கட்காவது வேலை செய்யக்கூடிய ஒரு மனிதன் சக்திமிகுந்த சன்மார்க்க ராக்ஷதனுவதற்குள்ள சக்தியைத் தன்னிடத்தில் உடைந்தாயிருக்கிறான்.

34. மூட ஜனங்களுக்கு இரகஸ்யம் தெரிகிறதில்லை. ஆயினும், அவர்கள் மனுஷ்ய வர்க்கத்தை ஆக்ஷி செய்ய விரும்புகிறார்கள். அவன் வேலை செய்துகொண்டு காத்திருப்பானுனல் மூடனும் உலகு முழுதையும் ஆட்சி புரியலாம். அவன் ஒரு சில வருஷங்கள் ஆட்சி புரியவேண்டுமென்ற அந்த மூட எண்ணத்தை அடக்கிகொண்டு காத்திருக்கட்டும்; அந்த எண்ணமானது முழுதும் போய்விட்டால், அவன் உலகில் ஒருசக்தி யாவான்.

35. எவனொருவன் மிகமிகப் பெரிய மௌனத்தினிடையிலும், ஏகாந்தத்தி னிடையிலும் மிகமிக ஆத்திரமுள்ள சுறு சுறுப்பைக் காண்கிறானே, மிகமிக ஆத்திரமுள்ள சுறுசுறுப்பின் இடையில் பாலைவனத்தில் ஏற்படக்கூடிய மௌனத்தையும் ஏகாந்தத்தையும் காண்கிறானே, அவனே மாதிரி மனிதன்.

36. ஒவ்வொரு மனிதனிடத்தும் மூன்று சக்திகளுண்டு. சில சமயங்களில் தமோகுணம் விளங்குகிறது; நாம் சோம்பேறிகளாகிறோம்; நாம் அசையமுடியவில்லை; சில எண்ணங்களினாலோ அல்லது வெறும் மந்தத்தன்மையினாலோ கட்டுப்பட்டவர்களாகி, நாம் சுறுசுறுப்பற்றவர்களா யிருக்கிறோம். வேறுசமயங்களில் சுறுசுறுப்பு விளங்குகிறது; இன்னும் வேறு சமயங்களில் இரண்டினுடையவும் அமைதியான சமத்துவம் ஏற்படுகிறது. இன்னும் வெவ்வேறு மனிதர்களிடத்து, இச்சக்திகளி லொன்று சாதாரணமாகப் பிரதானமாக இருக்கிறது. ஒருவனுடைய லக்ஷணம்: சுறுசுறுப்பற்ற தன்மையும், மந்த புத்தியும், சோம்பலுமாயிருக்கிறது. இன்னொருவனுடைய லக்ஷணம்: சுறுசுறுப்பு, சக்தி, சமர்த்தின் வெளிப்பாடு, இவையா யிருக்கிறது. இன்னும் வேறொருவனிடத்தில் நாம் செய்கை, எதிர்ச்செய்கை இரண்டையும் சமத்துவமாக்கியதினா லுண்டாகும் இனிமை, அமைதி, ருசிகரத்துவம் இவற்றைக் காண்கிறோம். அப்படியே, சிருஷ்டி யெல்லாவற்றிலும்—மிருகங்களினிடத்தும், செடிகளினிடத்தும், மனிதர்களிடத்தும் நாம் இவ்வேறுபட்ட சக்திகளெல்லாவற்றினுடையவும் மாதிரி வெளிப்பாட்டை அநேகமாகப் பார்க்கிறோம்.

37. நமது முதற்கடமை நம்மையே நாம் பகைத்துக் கொள்ளாம லிருப்பதே; ஏனெனில், முன்னேற வேண்டுமானால் நமக்கு முதலில் நம்மிடத்திலும் பின்னர் ஈசுவரனிடத்திலும் நம்பிக்கை யிருக்கவேண்டும். தன்னிடத்திலேதானே

நம்பிக்கையில்லாதவனுக்கு ஈசுவரனிடத்தில் ஒருபொழுதும் நம்பிக்கை யுண்டாக முடியாது.

38. புத்தர் தமது சிம்ஹாசனத்தைத் துறந்து, தமது அந்தஸ்தைத் தியாகம் செய்தார். அதுதான் உண்மையான தியாகம். ஆனால், தியாகம் செய்வதற்கு ஒன்றுமே யுடைத்தாயிராத ஒரு பிச்சைக்காரன் விஷயத்திலே தியாகத்தைப் பற்றிய எவ்வித கேள்வியும் ஏற்பட முடியாது.

39. மிகமிகச் சிரேஷ்டமான லக்ஷியமானது எதிர்க்காமலிருத்தலே என்பதை யறிந்துகொள்கிறவனும், இந்த எதிர்க்காமலிருத்தல் என்பது சக்தியின் மிகமிக உயர்ந்த வெளிப்பாட்டை உண்மையில் உடைத்தாயிருத்தலே யென்பதையும், தீமையை எதிர்க்க லெனப்படுவது எதிர்க்காமலிருத்தலாகிய இந்த மிகமிகப் பெரிய சக்தியின் வெளிப்பாட்டை நோக்கிச் செல்லும் மார்க்கத்தில் ஒரு படியேயாமென்பதையும் அறிகிறவனுமே கர்மயோகியாவான். இந்த மிகமிக உயர்ந்த லக்ஷியத்தை அடைவதற்குமுன் மனிதனுடைய கடமையாவது தீமையை எதிர்க்க வேண்டியதேயாம்; அவன் வேலை செய்யட்டும்; அவன் போராடட்டும்; புஜத்திலிருந்து நேரே குறிவைத்து அடிக்கட்டும்; அப்பொழுதுதான், எதிர்ப்பதற்குள்ள சக்தியை அவன் அடைந்தபொழுதுதான், எதிர்க்காமலிருத்தல் ஒரு புண்ணியமாகும்.

40. இந்த வேற்றுமைகளெல்லாம் என்றும் இருக்கட்டும்; அதுவே ஜீவிதத்தின் சாராம்சம். நாம் எல்லோரும் இவ்விதமாக என்றும் விளையாடுவோம். நீ தனவந்தனாயிருப்

பாய், நான் ஏழையா யிருப்பேன்; நீ பலவானு யிருப்பாய், நான் பலஹீனனு யிருப்பேன்; நீ கற்றவனு யிருப்பாய், நான் மூடனுயிருப்பேன்; நீ மிகவும் ஆத்மஞான முள்ளவனு யிருப்பாய், நான் அந்த விஷயத்தில் குறைந்தவனு யிருப்பேன். ஆனால், அதனால் என்ன? நாம் அப்படியே இருப்போம்; ஆனால், நீ என்னிலும் சரீரத்திலோ, அல்லது புத்தி சக்தியிலோ பலம் அதிக முடையவனு யிருக்கிறுயென்ற காரணத்தினாலே, என்னிலும் உனக்கு அதிக பாத்தியங்கள் இருக்கக் கூடாது; உனக்கு ஐசுவர்யம் அதிகம் இருக்கிறதென்பது என்னிலும் நீ பெரியோனெனக் கருதப்படுதற்கு காரண மாகாது; ஏனெனில், வெவ்வேறு நிலைமைகளிருந்த பொழுதிலும் அதே ஒரே தன்மைதான் இங்கு உள்ளது.

41. தெருவில் குப்பை பெருக்குபவன் சிம்ஹாசனத்திலே வீற்று அரசு புரியும் அரசனளவு பெருமையும் மேன்மையும் உள்ளவனே. அவனைச் சிம்ஹாசனத்திலிருந்து எடுத்துவிட்டுக் குப்பை பெருக்குபவனுடைய வேலையை அவன் செய்யும்படிச் செய்யுங்கள்! அவன் எப்படி வேலை செய்கிறு னென்பதைப் பாருங்கள்! தெருப் பெருக்குபவனை மேலே கிளப்பி, அவன் எப்படி அரசு புரிவானென்பதைப் பாருங்கள். உலகினின்றும் நீங்கி வசிப்பவன் உலகில் வசிப்பவனிலும் பெரியோன் என்று சொல்வதில் பயனில்லை; உலகை விட்டுவிட்டு ஸ்வதந்திரமான, சுலபமான வாழ்க்கை வாழ்வதைப் பார்க்கிலும் உலகில் வசித்துக்கொண்டே ஈசுவரனைத் தியானிப்பது மிகவும் கஷ்டம்.

42. ஜனசமூகம் ஒருவனைப் புகழ்கிற பொழுது மூடனுலும் வீரச் செயல்களைச் செய்ய முடியும்; ஆனால், தனது சகோதரர்களுடைய புகழ்ச்சியைச் சற்றும் லக்ஷியம் செய்யாது மனிதன் இடைவிடாது நன்மை செய்தலே உண்மையில் அவன் செய்யக்கூடிய மிகமிக உத்தமமான தியாகமாம்.

43. பெற்றோரை நோக்கி யொருபொழுதும் கடுமொழிகள் புகலாத குழந்தை உண்மையில் நல்ல குழந்தை.

44. மனிதன் மிகமிகப் பெரிய கஷ்டங்களிலும் தொந்தரவுகளிலும் அகப்பட்டுக்கொண்டிருந்தாலும் கூட அவன் தனது மனைவியிடத்துக் கோபத்தைக் காண்பிக்கக் கூடாது.

45. ஒருவன் கிறிஸ்தவனாயிருந்தாலும் சரி, யூதனாயிருந்தாலும் சரி, வேறு எவனாயிருந்தாலும் சரி, அதனால் பாதகமில்லை. நீ ஸ்வயநல மற்றிருக்கிறாயா? அதுதான் கேள்வி.

46. விஷயங்களை யறிவதற்கு வேலை செய்யும்படி உள்ளேயுள்ள உபாத்தியாயரைக் கிளப்புகிற ஆலோசனையை மாத்திரம் வெளியே யுள்ள உபாத்தியாயர் அளிக்கிறார்.

47. நாம் பிரபஞ்சத்தின் ஒரு பாகத்தையே பார்க்கிறது போல, நாம் கடவுளைப் பார்ப்பதெல்லாம் ஒரு பாகமேயாம்; மற்றவை யெல்லாம் மனுஷ்ய அறிவுக்கு அப்பாலுள்ளவை.

48. அவரையும் பிரபஞ்சத்தையும் அறிதற்கு ஒரே வழி யுக்தியைக் கடந்து, அறிவைக் கடந்து அப்பால் செல்ல வேண்டியதே.

49. ஒரு மனிதன் எழுந்து நின்று, "நான் பாபி" என்று சொல்வானானால், அவன் பொய்மொழி புகல்கிறான்; ஏனெனில், அவன் தன்னைத் தான் அறிந்துகொள்கிறதில்லை.

50. ஜயத்தின் இரகஸ்யமெல்லாம் இங்கு உள்ளது - பலனிடத்தில் எவ்வளவு கவனம் செலுத்த வேண்டுமோ அவ்வளவு கவனம் அப் பலனை யடையச் செய்யும் வுபாயத்தினிடத்தும் செலுத்தவேண்டு மென்பதே.

51. பூமியைப்பற்றித் தியானம் செய். பூமியைப் பற்றி நினைக்கும்பொழுதே, பூமியிலுள்ள அது நம்மிட முள்ளது என்பதை யறிந்துகொள்! இரண்டும் ஒன்றே யென்று அறிந்துகொள்! சரீரத்தைப் பூமியுடனும், ஆத்மாவை ஆத்மாவுடனும் ஒற்றுமைப்படுத்து.

52. பிரகிருதியின் பொது மாறுதல்களுக்கு அப்பால் உள்ள இந்தப் பரமாத்மாவே ஈசுவரன், ஜகந்நாதன், கடவுள் எனப்படுவது.

53. நாம் அறிகின்ற பிரபஞ்சமானது, எல்லைக்குட்பட்ட இவ்விருப்பானது ஆத்மாவின் லக்ஷணமாய அவ் வுண்மை யிருப்பின் பிரதிபலனமேயாம்.

54. புருஷன் மணமுமன்று, ஜடமுமன்று. நாம் அறிந்துகொள்வ தெல்லாம் அதனுடைய பிரதிபலனமே. அது சர்வவியாபகமானதானால் அதற்கு மரணமுமில்லை, ஜனனமுமில்லை யென்பது நமக்கு நிச்சயமாகத் தெரியும். பிரகிருதி அதன்மீது தனது சாயை

யை, ஜனனமரணச் சாயையை வீசிக்கொண்டிருக்கிறது; ஆனால், அது இயற்கையில் பரிசுத்தமானது.

55. நான் ஒருகத் தேசத்துக்கு (அமெரிக்காவுக்கு வந்து சிகாகோ சந்தையினூடே சென்றுகொண்டிருந்த பொழுது பின்னாலிருந்து ஒரு மனிதன் எனது தலைப்பாகையைப் பிடித்திழுத்தான். நான் திரும்பிப் பார்க்க அவன் நேர்த்தியாக உடையுடுத்தி நாகரிகமுள்ளவனாகக் காணப்பட்டான். நான் அவனிடம் பேசினேன்; எனக்கு ஆங்கிலம் தெரியுமென்று அவன் கண்டுகொண்டவுடனே, அவனுக்கு மிகுந்த வெட்கம் உண்டாய்விட்டது. இன்னொரு சந்தர்ப்பத்தில், அதே சந்தையில் இன்னொருவன் என்னைப் பிடித்துத் தள்ளினான். நான் அவனிடத்தில் காரணம் கேட்டபொழுது, அவனும் வெட்கமடைந்து, "நீ என் அம்மாதிரி உடுக்கிறாய்?" என்று சொல்லிக்கொண்டே, மன்னிப்புக் கேட்டுக்கொண்டான். இந்த மனிதர்களுடைய அனுதாபங்கள் அவர்கள் சொந்த பாஷையினுடையவும், அவர்களுடைய சொந்த உடைமாதிரியினுடையவும் எல்லைக்குள் கட்டுப்பட்டது.

56. தனக்குத் தகுதியில்லாத ஒரு அந்தஸ்தை எவனும் திருப்திகரமாக நெடுநாள் வைத்துக்கொண்டிருக்க முடியாது.

57. கடமைக்கு முன்னிலே விளக்கம் அளிப்பது சாத்தியமல்லாத காரியம். ஆயினும், தன்மை

பக்ஷத்தி லிருந்து பார்த்தால், கடமையென்ப தொன் றுண்டு.

58. நம்மை, ஈசுவரனை நோக்கிச் செல்லச் செய்கிற எந்தச் செய்கையும் நற்செய்கையே; அது நமது கடமையே. நம்மைக் கீழே நோக்கிச் செல்லச் செய்கின்ற எந்தச் செய்கையும் தீமையே; அது நமது கடமையாகாது.

59. வாழ்க்கையிலும் சமுதாயத்திலும் பிறப்பும் அந்தஸ்துமே, ஜீவிதத்தில் பலவித முயற்சிகள் விஷயத்தில் தனி மனிதர்களுடைய மானசீகத் தன்மையையும் நல்லொழுக்கத்தன்மையையும் தீர்மானிக்கின்றன. ஆகையால், நாம் பிறந்துள்ள ஜன சமுதாயத்தின் லக்ஷியங்களுக்கும் முயற்சிகளுக்கும் ஏற்ப, நம்மை உயர்த்திச் சிறப்பிக்கும்படியான வேலை எதுவோ அதைச் செய்வதே நமது கடமை.

60. இரண்டு விஷயங்கள் மனிதனுடைய நடத்தைக்குக் காரணமாகின்றன; அவை, பலமும் இரக்கமும். பலத்தை உபயோகித்தல் ஸ்வய நலத்தை உபயோகித்தலேயாம்.

61. இரக்கம் மோக்ஷமே யாகின்றது; நாம், எல்லோரும் நல்லவர்களா யிருக்கவேண்டு மென்றால், இரக்க முள்ளவர்களா யிருக்கவேண்டும். நியாயமும் உரிமையும் கூட இரக்கத்தின்மீது நிற்கவேண்டும்.

62. தானும் பிரபஞ்சமும் ஒன்றே யென்று ஒவ்வொரு மனிதனும் உணர்கின்ற நேரங்களும்

உண்டு; அவன் அதைத் தெரிந்தோ, தெரியாமலோ வெளிப்படுத்த வெளிவருகிறான்.

63. ஒற்றுமையின் இந்த வெளிப்பாட்டையே நாம் அன்பென்றும், அநுதாப மென்றும் கூறுகிறோம்.

64. தெரிந்தோ தெரியாமலோ ஒவ்வொரு மனிதனும் அந்தத் தெய்விகத் தன்மையை வெளிப்படுத்தவே முயற்சிக்கிறான்.

65. மிகமிக ஜீவகாருண்யமான எண்ணங்கள் எங்கெல்லாம் சாதாரணப் பொது ஜனங்களுடைய கைகளுக்குள் விழுகின்றனவோ, அங்கெல்லாம் தாழ்மையுறுதலே முதலாவது பலன் என்பதை நீங்கள் கவனிக்கலாம். விஷயங்களை புறதிப்படுத்தி வைக்கின்றவை கல்வியும் புத்தியுமேயாம்.

66. ஆகையால், "பற்றற்று" இரு; விஷயங்கள் வேலை செய்யட்டும்; மூளை மத்திரயங்கள் வேலை செய்யட்டும்; இடைவிடாது வேலை செய்யுங்கள்! ஆனால், ஒரு சிவலையேனும் மனதை ஜயிக்க வேண்டாம். இந்தப் பூமியில் நீ ஒரு அன்னியன் போலத், தங்கி யிருப்பவன்போல, நினைத்துக்கொண்டு வேலை செய்; இடை விடாது வேலை செய்; ஆனால், உங்களை நீங்களே பந்தப்படுத்திக் கொள்ளாதீர்கள். பந்தமானது பயங்கரமானது.

67. இவ் உபதேசத்தின் கருத்து முழுதும் யாதெனில், நீ எஜமானனைப் போன்று வேலை செய்ய

வேண்டும் ; அடிமையைப் போன்றி வேலை செய்யக் கூடாது ; இடைவிடாது வேலை செய் ; ஆனால், அடிமையினுடைய வேலையைச் செய்யாதே.

68. ஸ்வதந்திரம் உண்டாகிறவரையில், அன்பு ஒருபொழுதும் உண்டாகிறதில்லை. அடிமையினிடத்தில் உண்மையான அன்பு சாத்திய மில்லை.

69. நாம் பார்க்கின்ற, துக்க மெல்லாவற்றுக்கும், தீமை யெல்லாவற்றுக்கும் தாயா யுள்ளது அஞ்ஞானமேயாம். மனிதர் ஒளியை யடையட்டும்; அவர்கள் பரிசுத்தமாயும், ஆத்மீக பல முள்ளவர்களாயும், படித்தவர்களாயும் ஆகட்டும் ; அப்பொழுது தான் உலகில் துக்கம் நீங்கும் ; அதற்கு முன்னா அன்று.

70. எங்கேனும் ஏதேனும் நன்மையைச் செய்யாத எந்த வேலையையும் நாம் செய்யாமலிருக்க முடியாது ; எங்கேனும் ஏதேனும் தீமையை உண்டுபண்ணாத எந்த வேலையும் இருக்க முடியாது.

71. தனது கால்களையும் தலையையும் ஓட்டினுள் இழுத்து மறைத்துக்கொண்டுவிட்ட ஆமையை நீ கொல்லலாம்; துண்டு துண்டாக உடைத்தெரியலாம்; ஆயினும், அது வெளியே வருவதில்லை ; அது போலவே, தனது நோக்கங்களையும் இந்திரியங்களையும் அடக்கியுள்ளவனுடைய நடத்தையானது மாறுதலற்று ஸ்திரமாய்விட்டது. அவன் தனது ஆந்தரீய சக்திகளை யடக்கிக் கொள்ளுகிறான். அவற்றை அவ்

னுடைய மனத்திற்கு விரோதமாக எதுவும் இருக்க முடியாது.

72. இந்தக் கர்மயோக உபதேசத்தில் அநுபவத்தில் அனுஷ்டித்துக் காட்டிய ஒருவரைப்பற்றி ஒரு சில வார்த்தைகள் நான் முடிவில் கூறுகிறேன். அவர் தான் புத்தர். இதைப் பரிபூரணமாக அனுஷ்டானத்தில் கொண்டுவந்தவர் அவர் ஒருவரே. புத்தரைத் தவிர், உலகின் தீர்க்கதரிசிக ளனைவரும் ஸ்வயநல மற்ற செய்கைக்குத் தங்களைத் தூண்டுவதற்குப் பகிர்முகமான நோக்கங்களை யுடைத்தாயிருந்தார்கள்.

73. இவ்வொருவரைத் தவிர உலகத்துத் தீர்க்கதரிசிக ளனைவரும் இரண்டு கட்சிகளாகப் பிரிக்கப் படலாம்; ஒரு கட்சியார், தாங்கள் ஈசுவராவதாரங்களாகப் பூவுலகில் இறங்கி வந்தவர்களென்று கருதினர்; மற்ற கட்சியினர், தாங்கள் ஈசுவரனிடமிருந்து வந்த தூதர்களே யென்று கருதினர்.

74. நாம் எந்த உத்தேசமு மின்றிச் செய்யும் ஒவ்வொரு வேலையும், ஒரு புதிய விலங்கைப் பூட்டுவதற்குப் பதிலாக, உள்ள சங்கிலிகளில் ஒரு தொடரை யறுத்தெறியும். பிரதி பிரயோசனத்தை நினையாமல் நாம் உலகுக்கு அனுப்புகின்ற ஒவ்வொரு நல்ல நினைப்பும் அங்கு சேர்த்து வைக்கப்பட்டுச், சங்கிலியிலுள்ள ஒரு தொடரை யறுத்தெறிவது மல்லாமல், நாம் மிருதத் தன்மை யுள்ளவர்களுக்குள்

மிகமிகப் பரிசுத்தமானவர்களாகும்வரையில், நம்மை மேன்மேலும் பரிசுத்த மாக்குகிறது.

75. பயமென்பது பலஹீனத்துக்கு அடையாளமாம். உலகினுடைய கேலியையும் பரிகாசத்தையும் கவனியாமல் மனிதன் தனது கடமைகளைச் செய்ய வேண்டும்.

76. பணம் சம்பாதிப்பதற்குக் கடின முயற்சி செய்யாத கிரகஸ்தன் ஒழுக்க மற்றவனாவான். அவன் சோம்பேறியாயிருந்து, சோம்பேறி வாழ்க்கை வாழ்வதிலே திருப்தியுள்ளவனானால், அவன் ஒழுக்க மற்றவனாகிறான்; ஏனெனில், அவனை நூற்றுக்கணக்கானவர்கள் சார்ந்திருக்கிறார்கள்.

77. இந்த நகரத்திலே தனவந்தர்களாக முயற்சித்தும் தனவந்தர்களாயும் உள்ள நூற்றுக்கணக்கானவர்கள் இல்லாவிட்டால், இந்த நாகரிகமும், சத்திர விடுதிகளும், பெரிய வீடுகளும் எங்கே யிருக்கும்?

78. மரண முனையில்கூடக் கேள்விகள் கேட்காமல் எவருக்கும் உதவி செய். இலக்ஷக்கணக்கான தடவைகள் ஏமாற்றப்பட்டாலும், ஒரு கேள்வியும் கேட்காதே. நீ செய்வதைப்பற்றி யொருபொழுதும் நினையாதே. நீ எளியவர்களுக்குச் செய்யும் தான தர்மங்களைப்பற்றி யொருபொழுதும் புகழ்ந்துகொள்ளாதே; அல்லது, அவர்களுடைய நன்றியறிதலை எதிர்பாராதே; ஆனால், அவர்களுக்கு நீ தர்மம் செய்

யும்படியான சந்தர்ப்பத்தை உனக்கு அளித்ததற்காக அவர்களிடம் நன்றியறிதலுள்ளவனயிரு.

79. "நான் பாபியை விரோதிக்கவில்லை; நான் பாபத்தை விரோதிக்கிறேன்" என்று மூடப் பிடிவாதமுள்ளவர்கள் லகுவாகச் சொல்வதை நீங்கள் கேட்கிறீர்கள். ஆனால், பாபத்துக்கும் பாபிக்கும் உள்ள வித்தியாசத்தை உண்மையில் காண்பிக்கக் கூடிய மனிதனுடைய முகத்தைப் பார்ப்பதற்காக நான் எவ்வளவு தூரமும் செல்லத் தயாராயிருக்கிறேன். அப்படிச் சொல்வது சுலபமே. குணத்துக்கும் பொருளுக்குமுள்ள வித்தியாசத்தை நாம் நன்றாகக் காணக் கூடுமானால், நாம் பரிபூர்ண புருஷர்களாய்விடலாம். இப்படிச் செய்வது சுலபமன்று.

80. இந்த உலகமானது ஒரு நாயின் சுருண்ட வால் போன்றது. நூற்றுக் கணக்கான வருஷங்களாக ஜனங்கள் அதை நீட்டி நேர்படுத்த முயன்று வருகிறார்கள்; ஆனால், அவர்கள் அதை விட்டுவிடுகிற பொழுது, அது மறுபடியும் சுருண்டுவிடுகிறது.

81. தீமை செய்வதினால் நாம் நம்மையும் பிறரையும் துன்புறுத்திக்கொள்கிறோம். நன்மை செய்வதினால் நாம் நமக்கும் பிறருக்கும் நன்மையைச் செய்து கொள்கிறோம். மனிதனிடத்துள்ள மற்றெல்லாச் சக்திகளையும் போல, நன்மையும் தீமையுமாகிற இச் சக்திகளும் வெளியேயிருந்து பலம் ஒன்று சேர்க்கின்றன.

82. நல்ல செய்கையில் ஏதேனும் தீமையுள்ள தாகவும், தீமையின் மத்தியில் எங்கேனும் ஏதேனும் நன்மை யுள்ளதாகவும் எவனொருவன் காண்கிறனே அவனே கர்ம ரகஸ்யம் தெரிந்தவனுகிறன்.

83. பரிபூர்ண வாழ்க்கை யென்பது வார்த்தை களில் நேர் மாருபாடேயாம். வாழ்க்கையே நமக்கும், வெளியே யுள்ள ஒவ்வொன்றுக்கும் இடைவிடாது நடைபெற்று வரும் ஒரு போராட்ட நிலைமை யாகும்.

84. வாழ்க்கை யென்பது சாதாரணமாய்ச் சுகமாய் ஓடும் ஒரு விஷயம் அன்று; ஆனல், அது ஒரு சேர்க்கைப் பயனும், உள்ளேயுள்ள ஏதோ ஒன்றுக்கும், வெளி யுலகத்துக்கும் ஏற்படும் இந்தக் குழப்பமான போராட்டமே நாம் வாழ்க்கை யென்பது.

85. நீ பார்க்கின்ற இதெல்லாம், துன்பங்களும் துக்கங்களும் இவ்வுலகத்தின் அவசியமான நிபந்தனைகளாம; வறுமையும், ஐஸ்வர்யமும், சுகமும் க்ஷிமிஷ நேரத்தவையாம்; அவை நம்முடைய உண்மையான லக்ஷணத்தைச் சேர்ந்தவையே யல்ல.

86. பற்றற்றிருத்தலே எல்லா யோகங்களுக்கும் அஸ்திவாரமா யுள்ளது. வீடுகளில் வசிப்பதையும், நேர்த்தியான உடை யுடுப்பதையும், நல்ல ஆகார முண்பதையும் துறந்து பாலை வனத்தினுள் சென்று விடுகின்றவன் மிகமிகப் பற்றுதலுள்ளவனு யிருக்கலாம்.

87. பற்றற்றிருத்த லென்பதினல் நமது ஸ்தூல சரீர சம்பந்தமாக நாம் செய்யக்கூடிய எதுவும் பொருள் படவில்லை; அதெல்லாம் மனத்திலே யுள்ளது.

88. ஈசுவரனிடத்தில் நம்பிக்கை யுள்ளவர்களுக்கு, அவ்வளவு கஷ்ட மல்லாத இன்னொரு வழியுண்டு. அவர்கள், கர்மத்தின் பலன்களை ஈசுவரனிடம் சமர்ப்பித்து விடுகிறார்கள். அவர்கள் வேலை செய்தாலும், பலன்களிடத்தில் பற்றுள்ளவர்களாய் ஒருபொழுதும் இருக்கிறதில்லை. அவர்கள் பார்க்கின்ற, உணர்கின்ற, கேட்கின்ற, அல்லது செய்கின்ற எல்லாம் அவருக்கேயாம். நாம் என்ன நல்ல வேலை செய்தாலும், நாம் புகழையாவது, பிரதிப் பிரயோசனத்தையாவது, எதிர் பார்க்க வேண்டாம். அது ஈசுவரனுடையதே; அவருக்கே பலன்களைத் தியாகம் செய்துவிடு.

89. மனிதர் உலகிலே புறப்பட்டு, அவர்களுக்குப் பற்றுதல் மிகுந்திருக்கிற பணத்துக்கோ அல்லது வேறெதற்கேனுமோ போராடிச் சண்டையிடுகிறார்கள். அவர்கள் ஏன் அப்படிச் செய்கிறார்களென்று அவர்களைக் கேளுங்கள். "அது ஒரு கடமை" என்று அவர்கள் சொல்லுகிறார்கள். பணத்துக்கும் லாபத்துக்கு முள்ள மூட ஆசையே காரணம்; அவர்கள் அதைஒரு சில புஷ்பங்களினல் மூட முயற்சிக்கிறார்கள்.

90. கடமை யென்பதுதான் என்ன? அது உண்மையில் சரீரத்தின், நம்முடைய பற்றுதலின் தூண்டுதலேயாம்; ஒரு பற்றுதல் உறுதி பெற்று விட்டால், அதை நாம் கடமை யென்கிறோம்.

91. கட்டாயப்படுத்தப்படாதே. நீ ஏன் கட்டாயப்படுத்தப்படவேண்டும்? கட்டாயத்தின் மேல் நீ செய்கின்ற ஒவ்வொன்றும் பற்றுதலைக் கட்டவே செய்கின்றது.

92. உலகில் மிகமிகச் சிறந்த புருஷர்கள், எவருக்கும் தெரியாமலே சென்றிருக்கிறார்கள். நாம் அறிகின்ற புத்தர்களும் கிறிஸ்துக்களும் உலக மறியாத மிகமிகப் பெரிய புருஷர்களுடனே ஒத்திட்டுப் பார்த்தால் இரண்டாந்தர வீரர்களே யாவார்கள். எவருக்கும் தெரியாமல் சென்றுவிட்ட இந்த வீரர்களில் நூற்றுக் கணக்கானவர்கள் ஒவ்வொரு தேசத்திலும் மௌனமாக வேலை செய்துகொண்டு வாழ்ந்திருக்கிறார்கள்.

93. எவருடைய மனம் முழுதும் ஆத்மாவினுள்ளே சென்று ஐக்கியமாய்விட்டதோ, எவருடைய இச்சைகள் ஆத்மாவில் அடக்கப்படுகின்றனவோ, எவர் யாண்டும் ஆத்மாவுடனே கலந்திருப்பார்களோ அவர்களுக்குக் கர்மமே யில்லை.

94. கர்மத்தின் பலன்களெல்லாவற்றையும் விட்டுவிடுங்கள்! நன்மையை நன்மையின் பொருட்டுச்

செய்யுங்கள்: அப்பொழுதுதான் பரிபூரணமாய்ப் பற்றற் றிருத்தல் என்னும் தன்மை யுண்டாகும்.

95. மனுஷ்ய மனத்தின் சக்திக்கு எல்லையே யில்லை. அது எவ்வளவுக் கெவ்வளவு அதிகமாக ஒருமுகப்படுத்தப்படுகிறதோ, அவ்வளவுக் கவ்வளவு, அதிகமான சக்தி யொரு விஷயத்தில் செலுத்தப் படுகிறது.

96. மனமானது சரீரத்தின் ஒரு சூக்ஷ்ம பாகமே யென்றும், மனமானது சரீரத்தைப் பாதிக்கிறதென்றும் நாம் நம்பினால், சரீரமானது மனத்தை யும் திரும்பிப் பாதிக்கவேண்டு மென்பது நியாய மாகவே யிருக்கிறது. சரீரம் வியாதியாய்விட்டால் மனமும் வியாதி யடைகிறது. மனிதனுக்குக் கோப முண்டாகிறபொழுது, மனம் குழப்ப மடைகிறது. அது போலவே, மனம் குழப்ப மடைகிறபொழுது, சரீரமும் குழப்ப மடைகிறது.

97. காரணம் எப்பொழுதும் சூக்ஷ்மமாகவே யுள்ளது. காரியம் ஸ்தூலமா யுள்ளது.

98. வாழ்க்கையில் மிகமிகச் சிறந்த வழி காட்டி பலமே யாகும். மற்றெல்லா விஷயங்களிலும் போல மதத்திலும், உன்னைப் பலஹீனப்படுத்துகின்ற எல்லாவற்றையும் நீக்கிவிடு. பலஹீனத்துக்கும் உனக்கும் ஒரு சம்பந்தமும் வேண்டாம். இரகஸ்யத்தின் பின்னே யோடுதல் மனுஷ்ய மூளையைப் பலஹீனப் படுத்துகின்றது.

99. தாழ்ந்த சிருஷ்டியாகிய மிருகம் மந்தமாயுள்ளது. மிருகியும் தமோகுணத்திலிருந்து ஆக்கப்படுகிறது. மிருகங்களுக்கு உயர் நினைப்புக்கள் உண்டாக முடியாது. தேவதூதர்கள், அல்லது தேவர்கள் மனுஷ்ய ஜன்மம் எடுக்காமல் நேரே முக்தியையடையவும் முடியாது. அது போலவே, மனுஷ்ய சமுதாயத்திலும் அளவுக்கு மிஞ்சிய ஐசுவர்யம், அல்லது அளவுக்கு மிஞ்சிய தரித்திரம் ஆத்மாவின் உயர்ந்த அபிவிருத்திக்கு ஒரு பெருந்தடையாயுள்ளது. மத்திய வகுப்புகளிலிருந்தே உலகத்துப் பெரியோர்கள் உண்டாகின்றனர்.

100. நீங்கள் பிறரால் பாதிக்கப்படுதற்கு எவ்வளவு சம்மதிக்கிறீர்கள் என்ற விஷயத்தில் ஜாக்கிரதையாயிருங்கள். உங்களுக்குத் தெரியாமலே நீங்கள் இன்னொருவனை எப்படி அழிவுக்குக் கொண்டு வருகிறீர்கள் என்ற விஷயத்திலே ஜாக்கிரதையாயிருங்கள். சிலர், தங்களுடைய உணர்ச்சிகளுக்கு ஒரு புதிய போக்கைக் கொடுத்துக் கொஞ்சக் காலத்துக்கு அநேகருக்கு நன்மை செய்வதில் ஜய மடைகிறார்கள்; ஆனால், அதே சமயத்தில் அவர்கள் தங்களுக்குத் தெரியாமலே பரப்புகின்ற ஆலோசனைகளினால் புருஷர்களிடத்தும் ஸ்திரீகளிடத்தும் கடைசியாக அவர்களை அநேகமாக ஆத்மாவற்றவர்களாகச் செய்துவிடக்கூடிய அந்த மந்தமான, அமைதியான, மாயா நிலைமையைக் கிளப்பி, லக்ஷக்கணக்கானு

ஜனங்களை யழித்து விடுகிறார்கள். ஆகையால், மூடத்தனமாகத் தம்மைப் பின்பற்றும்படி கூறுபவர், அல்லது தமது மேலான சித்தத்தின் ஆட்சிச் சக்தியினால் தம் பின்னே ஜனங்களை வரும்படி இருக்கின்றவர் எவரேயாயினும், அவர், தாம் கருதாவிட்டாலும், மனுஷ்யவர்க்கத்துக்கு ஒரு தீமையையே செய்தவராவார்.

101. வெறும் பேச்சை யெல்லாம் விட்டுவிடு! ஸ்வானுபூதி பெற்ற புருஷர்களால் எழுதப்பட்டுள்ள கிரந்தங்களையே படி! முதலில் சிரவணம் செய்! பின்னர்த் தெரிந்துகொள்! பின்னர்ச் சஞ்சலங்களெல்லாவற்றையும் விட்டுவிட்டுப் பகிர்முகச் செல்வாக்குகளுக்கு நமது மனங்களைக் கீழ்ப்படியவிடாதபடி, நமது மனங்களை மூடிக்கொண்டு, நம்முள்ளேயுள்ள உண்மையை அபிவிருத்தி செய்வதிலே, நமது காலம் முழுமையும் கழிக்கவேண்டும்.

102. எவனொருவனால் ஒரு எண்ணத்திலே பைத்தியம் பிடித்துவிடக் கூடுமோ, அவனே ஒளியைப் பார்க்கிறான் இங்குக் கொஞ்சம், அங்குக் கொஞ்சம் எடுத்துக்கொள்ளுகிறவர்கள் ஒன்றையும் ஒருபொழுதும் அடையார்கள்.

103. நீ தைரியமுள்ளவனாயிருந்தால், நீ யொரு பரிபூரண யோகியாய்விடுவாய்.

104. ஜயமடைய வேண்டுமானால் உனக்கு அபாரமான விடாமுயற்சியும், அபாரமான திடசக்தி

யும் வேண்டும். விடாமுயற்சியுள்ள புருஷன், "நான் சமுத்திரத்தைக் குடிப்பேன். என்னுடைய சங்கற்ப மாத்திரத்திலே மலைகளெல்லாம் தூளாகும்" என்று கூறுகிறான்.

105. ஒரு எண்ணத்தை யெடுத்துக்கொள்; ஒவ்வொரு எண்ணத்தை உனது வாழ்க்கையாக்கிக் கொள்; அதையே நினை; அதைப்பற்றிக் கனவு காண்; அவ்வெண்ணத்திலேயே வாழ்.

106. ஜீவிதத்தின் பொருளைப்பற்றியும் ரகஸ்யத்தைப்பற்றியும் கேட்கப்படும் கேள்வியைத் தவிர, மனமென்றால் என்ன?

107. "ஸ்வதந்திரமே! ஏ, ஸ்வதந்திரமே! ஸ்வதந்திரமே! ஏ, ஸ்வதந்திரமே!" இதுதான் ஆத்மாவின் கீதம். அந்தோ! சிருஷ்டியி லேற்பட்ட பந்தமே அதன் தலைவிதி போலத் தோன்றுகிறது.

108. ஈசுவரனே எப்பொழுதும் பற்றற்றவராயிருந்துகொண்டு இடைவிடாமல் வேலை செய்து கொண்டிருக்கிறார்.

109. நீ எந்த வேலையையேனும் செய்யும் பொழுது, அதற்குமேல் எதைப்பற்றியும் நினையாதே; அதைப் பூஜையென, மிகமிகச் சிரேஷ்டமான பூஜையெனக் கொண்டு செய்; அந்தச் சமயத்தில் உனது மனம் முழுதையும் அதனிடத்தே செலுத்து.

110. ஈசுவரனிடத்தில் பக்தி செலுத்த விரும்புகிறவன் மிருந்த ஆசைகளை விட்டுவிடவேண்டும்; ஈசுவரனைத் தவிர எதையும் விரும்பலாகாது.

111. பரிசுத்தமான ஆகாரம் எடுத்துக்கொள்ளப்பட்டால், மனமானது விஷயங்களை யுள்ளே எடுத்துக்கொண்டு அவற்றைப்பற்றிப் பற்றுதலோ, பொறுமையோ, அல்லது மயக்கமோ இல்லாமல் நினைப்பதற்கு வல்லதாகிறது. பின்னர், மனமானது பரிசுத்தமாகிறது. அப்பொழுது அந்த மனத்தில் ஈசுவரனைப் பற்றி இடைவிடாத தியானம் உண்டாகிறது.

112. மனிதர்களில் இரண்டு வகையார் ஈசுவரனை மனிதனைகப் பூஜிக்கிறதில்லை—மதமேயில்லாத மனுஷ்ய மிருகமும், மனுஷ்ய வர்க்கத்துக்கு அப்பால் சென்றுவிட்ட, மனத்தையும் சரீரத்தையும் உதறிவிட்டுச் சிருஷ்டியின் எல்லைகளைக் கடந்துவிட்ட பரமஹம்சனும். சிருஷ்டி முழுதும் அவருடைய ஆத்மாவாய்விட்டது. அவருக்கு மனமுமில்லை; சரீரமுமில்லை; அவர் ஒரு இயேசுவைப் போல, அல்லது புத்தரைப்போல, ஈசுவரனை ஈசுவரனைகவே பூஜிக்க முடியும். அவர்கள் ஈசுவரனை மனிதன் போன்று பூஜிக்கவில்லை, மறு கடைசி மனுஷ்ய மிருகம்.

113. கல்வி யென்றால் என்ன? அது புத்தகப் படிப்பா? இல்லை. பலவிதமான அறிவா? அதுகூட இல்லை. மனத்தின் போக்கும் வெளிப்பாடும் அடக்

கப்பட்டுப் பலன் அடையுமாறு செய்யும் பயிற்சி எதுவோ அதுவே கல்வியாம்.

114. தீரனே — அவன் ஒருவனே தன்னை மறுத்துக்கொள்ளக் கூடும்.

115. ஆசையுடன் செய்யும் கர்மமே ஆசையற்றுச் செய்யும் கர்மத்துக்கு இட்டுச் செல்கிறது. இச்சையானது ஆதியில் இல்லாவிட்டால், இச்சையின் தியாகமானது சாத்தியமா?

116. ஏ, இந்தியாவே! இப்படிப் பிறரை நிந்தித்துக்கொண்டு, பிறரை இவ்வளவு இழி தன்மையாய்ப் பின்பற்றிக்கொண்டு, இப்படிப் பிறர்மீது சார்ந்துகொண்டு, இந்த அடிமைத்தனமான பலஹீனத்தை வைத்துக்கொண்டு, இந்த இழிந்த, வெறுக்கத்தக்க கொடூரத்தன்மையுடனே — இந்த விஷயங்களை மாத்திரம் வைத்துக்கொண்டு, நீ நாகரிகத்தினுடையவும் பெருமையினுடையவும் மிகமிக உயர்ந்த சிகரத்தையடைய முடியுமா? உனது அவமானகரமான பயங்காளித் தனத்தினால், தீரர்களாலும் வீரர்களாலுமே அடைதற்குரிய அந்த ஸ்வதந்திரத்தை நீ அடைய முடியுமா? ஏ, இந்தியா! உனது ஸ்திரீத் தன்மையின் லக்ஷியம்: சீதை, சாவித்திரி, தமயந்தி யென்பதை மறந்துவிடாதே;—நீ பூஜிக்கின்ற ஈசுவரன் தியாகிகளுக்கெல்லாம் மகா தியாகி; சர்வசங்க பரித்தியாகியாகிய சங்கரர், உமாபதி யென்பதை மறந்துவிடாதே;—உனது விவாகம், உனது ஐசுவர்யம், உனது வாழ்க்

கை இந்திரிய போகத்துக்காக அல்லவென்பதை — உனது சொந்த சுகத்துக்காக அல்ல வென்பதை மறந்துவிடாதே; மாதாவின் பலிபீடத்தில் தியாகம் செய்யப்படுதற்குரிய பலியாகவே நீ பிறந்திருக்கிறாய் என்பதை நீ மறந்துவிடாதே; உனது சமுதாய ஒழுங்கு அகண்ட விராட் மாதுர்த்தன்மையின் பிரதிபலனமே யென்பதை மறந்துவிடாதே; மிகமிகத் தாழ்ந்த வகுப்பினர், அறிவினர், எளியவர், படிப்பற்றவர், சக்கிலியன், தெருப் பெருக்குபவன் ஆகிய இவர்கள் உனது சொந்தச் சதையும் இரத்தமுமே யென்பதை-உனது சகோதரர்களே யென்பதை மறந்துவிடாதே. ஏ, தீரனே! தைரியமாயிரு! துணிவு பெறு! நீ இந்தியனாயிருப்பதுபற்றிக் கர்வமடை!—“நான் இந்தியன்,— ஒவ்வொரு இந்தியனும் எனது சகோதரனே” என்று கர்வத்துடனே பறையறை. “அறிவீனனான இந்தியன், எளியவனும் உதவியற்றவனுமான இந்தியன், பிராஹ்மண இந்தியன், பறைய இந்தியன் எனது சகோதரனே” என்று சொல்லு! இடையைச் சுற்றிக் கந்தையை யுடுத்துக்கொண் டிருக்கும் நீயும் உனது குரலின் உச்சியில்,—“இந்தியன் எனது சகோதரன்; இந்தியமே எனது ஜீவிதம்; இந்தியாவின் கடவுளும் தேவியுமே எனது கடவுள்; இந்திய சமுதாயம் எனது குழந்தைப் பருவத்துத் தொட்டில்; எனது வாலிப பர்வத்து உத்தியான வனம்; பரிசுத்த மந்திரம்; எனது விருத்தாப்பிய பர்வத்து காசி” என்று

கர்வத்துடன் பறையறை. சகோதரனே! "இந்தியாவின் நிலமே எனது மிகமிக உத்க்ருஷ்டமான மோக்ஷ லோகம்; இந்தியாவின் நன்மையே எனது நன்மை" என்று சொல்லு! "ஏ, கௌரி நாதா! ஏ, ஜகன்மாதா! எனக்கு ஆண்மையை அளிப்பாய்! ஏ, பலத்துக்கு மாதாவே! எனது பலஹீனத்தை யெடுத்துவிடு! எனது ஆண்மையற்ற தன்மையை எடுத்துவிடு! என்னை யொரு ஆண்மகனுக்கு" என்று இரவும் பகலும் ஜபித்துப் பிரார்த்தனை செய்.

117. சன்மார்க்க சாஸ்திர மெல்லாம், மனுஷ்யச் செய்கை யெல்லாம், மனுஷ்ய நினைப்பெல்லாம் ஸ்வயநல மற்ற தன்மையாகிற இவ்வொரு எண்ணத்தின்மீதே தொங்குகின்றது; மனுஷ்ய வாழ்க்கையின் முழுக் கருத்தெல்லாம் ஸ்வயநல மற்ற தன்மை யென்ற அவ்வொரு வார்த்தையில் வைக்கப்படக் கூடும்.

118. சாதாரண மனிதன் தான் மிகவும் சிறியவனென்று நினைத்துக் கொள்கிறான்; ஏனெனில், அவனுக்கு அறியப்பட வேண்டியது அகண்டமாகத் தோன்றுகிறது.

119. அறிவு அகண்டமாய்விட்டால், அறியப்படவேண்டியது சிறியதாய்விடுகிறது.

120. சிருஷ்டி முழுதுமே ஈசுவரோபாசனையாம். எங்கெல்லாம் ஜீவிதம் உண்டோ, அங்கெல்

லாம் ஸ்வதந்திரத்தைப் பற்றிய இந்தத் தேட்டம் உண்டு; அந்த ஸ்வதந்திரம் ஈச்வரனே போன்றது.

121. அவர் பிரகாசிப்பதினுல் அவரைப் பின்பற்றி எல்லாம் பிரகாசிக்கின்றன.

122. அவரே உபாசனை யெல்லாவற்றுக்கும் பின்னே யிருக்கிறார்; நாம் அறிந்துகொண்டாலும் சரி, அறியாவிட்டாலும் சரி, அவருடைய ஆக்ஞைப் படியே அது நடைபெறுகிறது.

123. நாம் கூறுகிற நிர்க்குணத் தெய்வம் அந்யோந்ய சம்பந்தமுள்ள தெய்வமன்று. ஆகையால், அது நல்லது, அல்லது கெட்டது என்று சொல்லப் பட முடியாதது. ஆனுல், அது அப்பாலுள்ள ஒன்று யுள்ளது. ஏனெனில், அது நல்லது மன்று, கெட்டது மன்று. ஆயினும், நன்மையானது தீமையைப் பார்க்கிலும் அதன் மிகவும் சமீபத்திய வெளிப்பாடே.

124. அஞ்ஞானம் அல்லது மாயை இந்தக் காட்சி யெல்லாவற்றுக்கும் காரணமா யுள்ளது,— அகண்ட வஸ்துவே, நிர்விகாரப் பொருளே இந்தப் பிரத்தியட்சப் பிரபஞ்சமா யுள்ளது. இந்த மாயை யென்பது முழு சூன்யமுமல்ல, இன்மையுமல்ல; அது சத்துமல்ல, அசத்துமல்லவென்று விவரிக்கப்பட்டிருக்கிறது. அது சத்தல்ல; ஏனெனில், அந்த லக்ஷணம் அகண்ட வஸ்துவைப்பற்றியே, நிர்விகார வஸ்துவைப் பற்றியே சொல்லப்படக் கூடும்; இந்தப்

பொருளில, மாயையானது அசத்தா யுள்ளது. அது அசத்தென்று சொல்லப்படவும் முடியாது; ஏனெனில், அது அசத்தா யிருந்தால், அது காட்சியை யொருபொழுதும் உண்டுபண்ணியிருக்க முடியாது. ஆகையால், அது இரண்டு மல்லாத ஏதோ ஒன்று; வேதாந்த சாஸ்திரத்திலே அது அநிர்வசனீய மெனப் படுகிறது.

125. மனமும் மகத்தும் சத்தா மாத்திரமா யுள்ள அவ்வொரு பொருளின் வெளிப்பாடுகளே யாம்.

126. நாம ரூபத்தினலேயே ஒரு வஸ்து இன்னொரு வஸ்துவினின்றும் வித்தியாசப் படுத்தப்படுகின்றது. நாமரூபமே வித்தியாசத்துக்குக் காரணமாயுள்ளது. உண்மையில் அவை யொன்றே.

127. சத்தென்பதே மிகமிகச் சாதாரணமான கோட்பாடு.

128. மனிதன், ஒரு சிறிய பெட்டியினுள் சுருட்டி வைக்கப்பட்டதும் முடிவற்றதுமான ஒரு விசை வில்லாம்; அந்த விசை வில் தானே திறப்பதற்கு முயற்சித்துக்கொண் டிருக்கிறது; நாம் பார்க்கின்ற சமுதாயக் கட்சியெல்லாம் திறந்துகொள்வதற்கு இப்படி முயற்சிக்கின்றதின் பலனே யாகும்.

129. முதலாவது, இந்த ஸ்தூல சரீரம் உள்ளது. அதற்கப்பால் சூட்சும சரீரம் உள்ளது; அதற்கப்பால் உண்மை மனிதனாகிய ஜீவன் உள்ளது.

130. பிரகிருதி நித்தியமானது, ஆனால், மாறுதலுடன் நித்தியமானது. பிரகிருதியின் பதார்த்தமாகிற பிராணனும் ஆகாசமும் நித்தியமாம்; ஆனால், அது என்றும் வெவ்வேறு வடிவங்களிலே மாறுதலடைந்து வருகிறது.

131. எது சேர்க்கையின் பயனாக ஏற்படுகிறதில்லையோ, அது ஒருபொழுதும் அழிக்கப்பட முடியாதது; ஏனெனில், அழிவு என்பது திரும்பவும் காரணங்களை நோக்கிச் செல்லுதலேயாம். ஸ்தூல சரீரமானது ஆகாசமும் பிராணனும் சேர்ந்ததாம்; ஆதலால், அது அழிவை யடையும்.

132. ஏக வஸ்துவா யுள்ளது ஒருபொழுதும் பிறவியை யடைய முடியாது.

133. சேர்க்கையா யுள்ளது எதுவோ அதுவே பிறவியை யடைய முடியும்.

134. ஒரே சூர்யன் வெவ்வேறு நீர்ப் பரப்புகளிலே பிரதிபலிக்கப்பட்டு வெவ்வேறாகத் தோன்றியபொழுதிலும், இலக்ஷக்கணக்கான நீர்த்துளிகள் அத்தனை லக்ஷக்கணக்கான சூர்யர்களைப் பிரதிபலித்த பொழுதிலும் ஒவ்வொரு நீர்த் துளியிலும் சூர்யனுடைய பரிபூர்ண பிம்பம் ஏற்பட்டபொழுதிலும், ஒரே ஒரு சூர்யன்தான் உண்டு.

135. நான் ஒருபொழுதும் பிறந்தது மில்லை; ஒருபொழுதும் பிறக்கப்போவது மில்லை; எனக்குப் பிதா மாதாக்களும் ஒருபொழுதும் கிடையாது;

நண்பர்களு மில்லை; பகைவர்களு மில்லை; ஏனெனில், நான் அகண்ட சச்சிதானந்த வஸ்து. நானே அவன்; நானே அவன். ஆகையால், இந்த தத்துவ சாஸ்திரத்தின்படி லக்ஷியம் என்ன? இந்த ஞான மடைந்தவர்கள் ஜகத்துடன் ஒருமைப்பட்டவர்கள். அவர்களுக்கு ஸ்வர்க்கலோகங்களெல்லாம், பிரஹ்மலோகம் கூட அழிவடைந்து விடுகிறது; ஸ்வப்பனமும் முழுதும் மறைந்து விடுகிறது; அவர்கள் தங்களைத் தாங்களே ஜகத்துக்கு நித்திய நாதனாகக் கண்டுகொள்கிறார்கள். அவர்கள் அகண்ட ஞானத்துடனும் ஆநந்தத்துடனும் கூடிய தங்களுடைய சொந்த வியஷ்டித் தன்மையைப் பெற்றுவிடுகிறார்கள்; முக்தர்களாய் விடுகிறார்கள். சிறு விஷயங்களில் உண்டாகும் சுகங்கள் நீங்கிவிடுகின்றன. நாம் இச் சிறிய சரீரத்திலே, இச் சிறிய வியஷ்டித் தன்மையிலே சுகத்தைக் காண்கிறோம். இந்த ஜகத் முழுதும் எனது சரீரம் ஆகிற பொழுது, எவ்வளவு அதிக சுகம் உண்டாகிறது? ஒரு சரீரத்தில் சுக முண்டானல், எல்லாச் சரீரங்களும் என்னுடையவை யாகிறபொழுது எவ்வளவு அதிக சுகம் உண்டாகவேண்டும்? அப்பொழுதுதான் முக்தி யடையப்படுகிறது. இதுதான் அத்வைத வேதாந்த சாஸ்திரம் என்பது.

136. "இவ்வுலகில் இரண்டு கோடி ஜனங்களில் ஒருவருக்குக்கூடக் கடவுளிடத்தில் நம்பிக்கை கிடையாது" என்று ஒரு மகாத்மா ஒருதரம் என்னிடம்

கூறினர். நான் "ஏன்?" என்று அவரைக் கேட்டேன்; அவர் என்னை நோக்கி, "இந்த அறையில் ஒரு திருட னிருப்பதாகவும், அடுத்த அறையில் ஒரு பொற்குவியல் இருப்பதாக அவன் அறிந்துகொண்டிருக்கிறானென்றும் வைத்துக் கொள்வோம்; இரண்டு அறைகளுக்கும் இடையில் மிகவும் லேசான தடுக்கு ஒன்றே யுள்ளதாகவும் வைத்துக்கொள்வோம்; அந்தத் திருடனுடைய நிலைமை என்னவாயிருக்கும்?" என்று கேட்டார். நான், "அவன் சற்றும் தூங்கவே மாட்டான்; அவனுடைய மூளையானது அந்தப் பொன்னை யவன் அடைவதற்கான உபாயத்தைப்பற்றிச் சிந்தித்துக்கொண்டே யிருக்கும்; அவன் வேறெதையும்பற்றி நினைக்கமாட்டான்" என்று மறுமொழி பகர்ந்தேன். அப்பொழுது அவர், "ஒருவன் கடவுளிடத்தில் நம்பிக்கை வைத்து, அவரை யடைவதற்குப் பைத்தியம் பிடிக்காமலிருக்க முடியும் என்பதை நீ நம்புகிறாயா? அந்த அபாரமான, அகண்டாநந்தக் கனி யுண்டென்றும், அது அடையப்படக் கூடியதே யென்றும் ஒரு மனிதன் உண்மையில் நம்பினால், அவன் அதை அடைவதற்குள்ள முயற்சியில் பைத்தியம் பிடித்துப்போக மாட்டானா?" என்றார்.

137. இந்தியாவிலுள்ள சில எண்ணெய்ச் செக்குக்களில் எருதுகள் உபயோகிக்கப்படுகின்றன. அவை எள்ளை ஆட்டும்பொருட்டுச் சுற்றிச் சுற்றிச்

செல்கின்றன. எருதின் கழுத்தில் ஒரு நுகத்தடியுண்டு. நுகத்தடியி லிருந்து ஒரு துண்டு மரம் வெளியே நீட்டிக்கொண் டிருக்கிறது; அதில் கொஞ்சம் வைக்கோல் கட்டப்படுகிறது. அந்த எருது முன்னேயே பார்க்க முடியும்படியாகக் கண் கட்டப்படுகிறது; ஆகையால், அது வைக்கோலைப் பற்றுவதற்காகத் தனது கழுத்தை நீட்டுகிறது; அப்படிச் செய்யும்பொழுது அது அந்த மரத்துண்டை இன்னும் கொஞ்சம் அதிக தூரத்திலே தள்ளிவிடுகிறது; மறுபடியும் முயற்சி செய்கிறது; அதே பலன்தான். இன்னும் ஒரு முயற்சி, இப்படியேதான். அது ஒருபொழுதும் வைக்கோலைப் பற்றுகிறதில்லை; ஆனால், அதைப் பற்றிவிடலாமென்று நம்பிச் சுற்றிச் சுற்றிச் செல்கிறது; அப்படிச் செய்கையில் எண்ணெய் ஆட்டிவிடுகிறது. அதேமாதிரி, பிரகிருதிக்கு, பணத்துக்கும் ஐசுவர்யத்துக்கும், பெண்டிர்க்கும் பிள்ளைகட்கும் பிறப்பிலேயே அடிமைகளாயுள்ள நீயும் நானும் எப்பொழுதும் ஒரு பிடி வைக்கோலையே வெறும் ஜாலத் தோற்றத்தையே பின்பற்றி ஓடிக்கொண்டும், நாம் நாடுவதை யடையாமல் எண்ணற்ற ஜன்மங்களினூடே சென்றுகொண்டும் இருக்கிறோம்.

138. ஸோலனையும் க்ரீஸஸையும் பற்றிய கதை உங்களுக்கு ஞாபக மிருக்கிறதா? அரசன் அந்த மகாத்மாவை நோக்கிச், "சின்ன ஆசியா மிகவும் ஆநந்தகரமான இடம்" என்று கூறினான். மகாத்மா

அவனை நோக்கி, "மிக மிக ஆநந்தமுள்ள மனிதன் யார்? நான், மிகவும் ஆநந்த முடையவனாக எவனையும் பார்த்ததில்லை" என்று கூறினர். "முட்டாள்தனம்! உலகில் மிக மிக ஆநந்தமுள்ள மனிதன் நான் இருக்கிறேன்" என்றான். "ஐயா! கொஞ்சம் உனது வாழ்நாள் முடிவு வரையில் பொறுத்திருங்கள்! அவசரப்படாதீர்கள்!" என்று அந்த மகாத்மா கூறிவிட்டுப் போய்விட்டார். காலக்கிரமத்திலே அவ் வரசன் பாரசீகர்களால் ஜயிக்கப்பட்டான்; அவர்கள் அவனை உயிருடன் எரித்துவிடுமாறு உத்தரவு செய்தார்கள். அக்கினி மூட்டப்பட்டது; ஏழை க்ரீஸஸ் அதைப் பார்த்தவுடனே, "ஸோலன்! ஸோலன்!" என்று உரக்கக் கூவினன். அவன் குறிப்பிட்டது யார் என்று கேட்கப்பட்டபொழுது, தனது கதையைச் சொன்னன்; பாரசீக சக்கரவர்த்திக்கு இரக்க முண்டாகி அவனுடைய உயிரை ரக்ஷித்தான்.

139. நம்முடைய ஆளுகைக்கு உட்படாமல் ஹிருதயம் துடிக்கிறதுபோலத் தோன்றுகிறது; இங்குள்ள நம்மில் எவரும் ஹிருதயத்தை யடக்க முடிகிறதில்லை; அது தன் சொந்த வழியே செல்கிறது. ஆனல், அப்பியாசத்தினலே மனிதன் ஹிருதயத்தையும் ஆளுகைக்குள் கொண்டுவந்து, அது இஷ்டப்பிரகாரம் மெல்லவோ அல்லது வேகமாகவோ துடிக்கும்படி, அல்லது அநேகமாக நின்றுவிடும்படி செய்துகொள்ள முடியும்.

140 மனுஷ்ய மனமானது வேலை செய்கின்ற இரண்டு பூமிகளை நாம் உடைத்தாயிருக்கிறோம். முதலாவது, அறிவு மண்டலம்; அதில் எல்லா வேலையும் எப்பொழுதும் "நான்" என்ற உணர்ச்சியுடன் செய்யப்படுகின்றன. மனோ வேலையில் எந்தப் பாகமானது "நான்" என்ற உணர்ச்சியுடன் செய்யப்படுகிற தில்லையோ அந்தப் பாகமானது அறியாமல் செய்யப்படும் வேலையாம்; "நான்" என்ற உணர்ச்சியுடன் செய்யப்படுகின்ற அந்தப் பாகமானது அறிந்து செய்யப்படும் வேலையாம். தாழ்ந்த மிருகங்களிடத்தே யுள்ள அறியாமல் செய்யப்படும் இந்த வேலையானது உள்ளுணர்ச்சி யெனப்படுகிறது; உயர்ந்த மிருகங்களிடத்தும், எல்லா மிருகங்களிலும் மிக மிக உயர்ந்த மனிதனிடத்தும், அறிந்து செய்யப்படும் வேலை யென்பதே விளங்குகிறது.

141. ஆனால், அது இதனுடன் முடிவடைகிற தில்லை. மனம் வேலை செய்யக்கூடிய இன்னும் உயர்ந்த பூமி ஒன்று உண்டு. அது பிரக்ஞைக்கு அப்பால் செல்ல முடியும்.

142. மனுஷ்யப் பிரகிருதி எல்லாவற்றினுடையவும் இலக்ஷியமாயுள்ள அந்த முக்தியை ஸ்வயநலமற்ற கர்மம் செய்து அடைதலே கர்மயோகம் எனப்படும். ஆகையால், ஒவ்வொரு ஸ்வயநலச் செய்கையும் நாம் லக்ஷியத்தை யடைவதைத் தடுக்கின்றது; ஸ்வயநலமற்ற செய்கை யொவ்வொன்றும் நம்மை லக்ஷிய

த்தை நோக்கிக்கொண்டு செல்கிறது; அதனால் தான், ஒழுக்கத்தைப்பற்றி யளிக்கப்படக் கூடிய ஒரே லக்ஷணம் யாதெனில், இதுதான்:—ஸ்வயநல முள்ளது எதுவோ அது ஒழுக்கமற்றது ஸ்வயநல மற்றது எதுவோ அதுவே ஒழுக்கமானது.

143. ஒருவிதமான சந்தர்ப்பத்திலே ஒரு செய்கையானது ஸ்வயநல மற்றதா யிருக்கலாம்; அதே செய்கை இன்னொரு விதமான சந்தர்ப்பத்திலே மிகவும் ஸ்வயநல முள்ளதா யிருக்கலாம்.

144. இவ்வுலகில் மனிதர்களில் பலவித வகுப்புக்களை நீ காண்பாய். முதலாவது, ஈசுவர புருஷர்கள். இவர்களுடைய தியாகமானது பரிபூரணமானது: இவர்கள் தங்களுடைய உயிரைத் தியாகம் செய்தும்கூடப் பிறருக்கு நன்மையே செய்கிறார்கள். இவர்களே மிகமிகச் சிரேஷ்டமான புருஷர்கள். எந்தத் தேசத்திலாவது அத்தகையோர் ஒரு நூறு பெயர்கள் இருப்பார்களாயின், அந்தத் தேசமானது ஒருபொழுதும் ஏக்க மடைதல் வேண்டாம். ஆனால், அவர்கள் மிகவும் சிலராகவே யிருக்கிறார்கள். பின்னர், தங்களுக்குத் துன்பம் நேரிடாதவரையில் பிறருக்கு நன்மை செய்யும் சத் புருஷர்கள்; தங்களுக்கு நன்மை செய்து கொள்வதற்காகப் பிறரைத் துன்புறுத்துகின்ற மூன்றாவது வகுப்பினரும் உண்டு. "துன்புறுத்த வேண்டுமென்றே பிறரைத் துன்புறுத்துகின்ற பெயர் சொல்லப்படாத நான்கு

வகுப்பு ஜனங்களும் உண்டு" என்று ஒரு சம்ஸ்கிருத பண்டிதரால் சொல்லப்பட்டிருக்கிறது. வாழ்க்கையின் ஒரு முனையில் நன்மையின் பொருட்டே நன்மை செய்கின்ற மிகமிக உத்தமமான சற்புருஷர்கள் உள்ளதுபோல, மறு முனையில் துன்புறுத்த வேண்டுமென்றே பிறரைத் துன்புறுத்துகின்ற இதரர்களும் உண்டு அவர்கள் அதனால் ஒன்றும் இலாபம் அடைகிறதில்லை. ஆனால், தீமை புரிவது அவர்களுடைய இயற்கை.

145. கடமை யென்பது ருசிகரமா யிருப்பது அருமையே. அதனுடைய சக்கரங்களிலே அன்பாகிற கொழுப்பு சேர்கிறபொழுதுதான், அது மிருதுவாக ஓடுகிறது; இல்லையேல், அது இடைவிடாததொரு முரணையாம்.

146. கடமை யென்பது அன்பினாலேயே ருசிகர மாகிறது; அன்பு ஸ்வதந்திர மொன்றினாலேயே பிரகாசிக்கிறது.

147. புருஷனிடத்திலாகட்டும், ஸ்திரீயினிடத்திலாகட்டும், கற்பு என்பது ஒரு நற்குணமாம்; எவ்வளவு தான் தவறிப்போ யிருந்தபொழுதிலும், அன்பும் அமைதியும் கற்புமுள்ள மனைவியினால் நல்வழிக்குத் திருப்பப்பட முடியாத மனிதன் உண்மையில் மிகவும் அருமையே.

148. ஸ்திரீயை ஈசுவரனுடைய மாதுருத்தன்மையின் பிரதிநிதியாகக் கருதவல்ல மனிதன்

உண்மையில் பாக்கியவானே. ஈசுவரனுடைய பிதுர்த் தன்மையை மனிதன் குறிப்பிடுகிறான் என்று கருது கிற ஸ்திரீ பாக்கியம் பெற்றவளே. தங்கள் பெற்றோர்களைப் பூவுலகில் பிரத்தியட்சமாயுள்ள ஈஸ்வரத் தன்மையே யென்று கருதுகின்ற குழந்தைகள் பாக்கியவந்தர்களே.

149. சற்றும் பிசகாத சரி சமத்துவம், அதாவது, எல்லா நிலங்களிலும் முன் வருதற்குப் பாடு படுகின்ற சக்திக ளெல்லாவற்றிலும் பரிபூர்ண சமத்துவ மென்பது இவ்வுலகில் ஒரு பொழுதும் உண்டாக முடியாது.

150. முனிதனுக்கும் மனிதனுக்கும் வித்தியாசம் உண்டு பண்ணுவது யாது? பெரும்பான்மையும் மூளையிலுள்ள வித்தியாசமேயாம். நாம் எல்லோரும் ஒரே விதமான மூளைச் சக்தியுடன் பிறந்திருக்கிறோமென்று இக்காலத்தில் பைத்தியக்காரனைத் தவிர, வேறெவரும் சொல்லார்.

151. வித்தியாசமே அடியோடு அற்றுப்போவதென்பது மரணமாம். இவ்வுலகு உள்ளவரையில், வித்தியாசம் இருக்கத்தான் இருக்கும்: இருக்கத் தான் வேண்டும்.

152. நாம் அனைவரும் இந்தப் பிரமாண்டமான குழப்பமிகுந்த உலக யந்திரத்தினால் இழுக்கப்பட்டுக் கொண்டிருக்கிறோம். அதனின்றும் வெளியேறுவதற்கு இரண்டே வழிகள் உள்ளன; ஒன்று யந்திரத்

தொடனுள்ள எல்லாச் சம்பந்தத்தையும் விட்டுவிடுதல், அதைப் போக விட்டுவிட்டு, ஒதுங்கி நிற்றல்; நமது இச்சைகளை யெல்லாம் விட்டுவிடுதல். சொல்வது மிகவும் சுலபம்; ஆனால், செய்வது அநேகமாக அசாத்தியமாம். இரண்டு கோடி ஜனங்களில் ஒருவரேனும் அப்படிச் செய்ய முடியுமோ வென்பது எனக்குத் தெரியாது. மற்ற வழியாவது உலகினுள் ஆழ்ந்து கர்ம ரகஸ்யத்தை யறிந்துகொள்ளுதலாம்; அதுதான் கர்மயோக மார்க்கம். உலக யந்திரத்தின் சக்கரங்களிலிருந்து ஒதுங்கி யோடாதே, ஆனால், அதன் உட்பக்கத்தில் நின்று கர்ம ரகஸ்யத்தை யறிந்துகொள்.

153. செய்தல் மிகவும் நல்லதே; ஆனால், அது ஆலோசனையிலிருந்து உண்டாகிறது. சதைகளின் மூலமாக வெளிப்படுகின்ற சக்தியின் சிறிய வெளிப்பாடுகளே வேலை யெனப்படுகின்றது. ஆனால், எங்கு எங்கு ஆலோசனை யில்லையோ, அங்கு வேலையும் இராது. ஆதலால், உயர்ந்த எண்ணங்களினால், உயர்ந்த லக்ஷியங்களினால் மூளையை நிரப்பிக்கொள்; இரவும் பகலும் உன் முன்னே அவற்றை வைத்துக்கொள்! அதிலிருந்து பெரிய வேலை யுண்டாகும். அசுத்தத்தைப்பற்றிப் பேசாதே; ஆனால், நாம் பரிசுத்தர்களென்று கூறு.

154. நாம் எப்படி யிருக்கிறோமோ அப்படியே உலகைப் பார்க்கிறோம். ஒரு அறையிலே ஒரு குழந்தை யிருக்கிறதாகவும், அவ்வறையில் மேஜை

யின்மீது ஒரு ரூப பொன் இருக்கிறதாகவும், ஒரு திருடன் வந்து அந்தப் பொன்னைத் திருடுகிறதாகவும் வைத்துக்கொள்வோம். அந்தப் பொன் திருடப்பட்ட தென்பதை அந்தக் குழந்தை யறியுமா? நம்முள்ளே யுள்ளதையே நாம் வெளியே பார்க்கிறோம். குழந்தைக்கு உள்ளே திருடனில்லை; வெளியிலேயும் திருடனைப் பார்க்கவில்லை.

155. மரணமென்ற அபாரமான விஷயம் உள்ளது. உலகு முழுதும் மரணத்தை நோக்கிச் செல்கின்றது. ஒவ்வொன்றும் மரிக்கின்றது. நமது அபிவிருத்தி, நமது வீண் கர்வங்கள், நமது சீர்திருத்தங்கள், நமது டாம்பீகங்கள், நமது ஐசுவர்யம், நமது அறிவு எல்லாவற்றுக்கும் மரணமாகிய அவ்வொரு முடிவு தான் உண்டு. நிச்சயமா யுள்ளது அவ்வளவுதான். நகரங்கள் வரவும் போகவும் செய்கின்றன. சக்கராதிபத்தியங்கள் கிளம்பவும் விழவும் செய்கின்றன. கிரகங்கள் இதர கிரகங்களின் காற்றினால் உதைப்படும்படி துண்டு துண்டாக உடைந்து துகளாகின்றன; அநாதிகாலம் தொட்டு இவ்விதமாகவே நடைபெற்று வருகிறது. மரணமே ஒவ்வொரு வஸ்துவினுடையவும் முடிவாம். மரணமே ஜீவிதத்தினுடைய, அழகினுடைய, ஐசுவர்யத்தினுடைய, அதிகாரத்தினுடைய, நற்குணத்தினுடையவும் முடிவாம். மகாத்மாக்கள் மரிக்கிறார்கள், பாபிகளும் மரிக்கிறார்கள்; அரசர்கள் மரிக்கிறார்கள், பிச்சைக்காரர்களும் மரிக்

கிறார்கள். அவர்களெல்லோரும் மரணத்தை நோக்கிச் செல்கிறார்கள்; ஆயினும், வாழ்க்கையினிடத்தே இந்த அபாரமான பற்றுதல் உள்ளது. எப்படியோ ஏன் இப்படிப் பற்றுதலுள்ளவர்களாயிருக்கிறோமென்பது நமக்குத் தெரியவில்லை; நாம் வாழ்க்கையைப் பற்றிக்கொள்கிறோம்; நாம் அதை விட்டுவிட முடிகிறதில்லை. இதுதான் மாயை.

156. தாயானவள் குழந்தையை மிகுந்த ஜாக்கிரதையுடனே பராமரித்து வருகிறாள்; அவளுடைய மனமெல்லாம், அவளுடைய ஜீவிதமெல்லாம், அந்தக் குழந்தையினிடத்தில் இருக்கிறது. குழந்தை வளர்ந்து மனிதனாகிறான். ஒருவேளை போக்கிரியாகவும், மிருகத்தன்மையுள்ளவனாகவும் ஆய்விடுகிறான்; அவளைத் தினந்தோறும் உதைத்து அடிக்கிறான்; ஆயினும், தாய் அந்தக் குழந்தையினிடம் ஒட்டிக்கொள்கிறாள்; அவளுக்கு நியாயம் தோன்றுகிறபொழுது, அவள் அதை அன்பாகிற எண்ணத்தினால் மூடுகிறாள். அது அன்பு அன்றென்றும், தான் உதறியெறிய முடியாதபடி தன்னுடைய நரம்புகளைப் பற்றியிருக்கும் ஏதோ ஒன்று என்றும் அவள் நினைக்கிறதேயில்லை; அவள் எவ்வளவுதான் முயற்சித்தபொழுதிலும், அவள் அகப்பட்டுக் கொண்டிருக்கும் பந்தத்தை அவள் உதறியெறிய முடியாது—இதுதான் மாயை.

157. நாம் எல்லோரும் பொன்மானைப் பின்பற்றி யோடுகிறோம். நம்மில் ஒவ்வொருவரும் இது தன்னுடையதாய்விடுமென்று நினைக்கிறோம். ஒருவேளை இரண்டு கோடியில் ஒருவரே ஜயமடைய முடியுமென்று புத்தியுள்ள ஒவ்வொரு மனிதனும் பார்க்கிறான். ஆயினும், ஒவ்வொருவனும் அதையடைய முயற்சிக்கிறான். இதுதான் மாயை.

158. மரணமானது நமது இப் பூலோகத்தின் மீது உலவித் திரிகிறது. ஆனால், நாமோ 'என்றும் இருப்போம்' என்று நினைத்துக்கொள்கிறோம். "இப் பூவுலகில் மிகமிக ஆச்சரியமான விஷயம் யாது?" என்று யுதிஷ்டிரரிடம் ஒரு கேள்வி கேட்கப்பட்டது. அவ்வரசர் "தினந்தோறும் ஜனங்கள் நம்மைச் சுற்றிலும் மரித்துக்கொண்டேயிருக்கிறார்கள்; ஆயினும், மனிதர் தாங்கள் ஒருபொழுதும் மரிப்பதில்லையென்று நினைக்கிறார்கள்" என்று மறுமொழி கூறினார். இதுதான் மாயை.

159. அறிவுக்கும் அஞ்ஞானத்துக்கும் இடையிலுள்ள இந்த நிலைமை, இந்த ரகஸ்ய மந்தாந்தகாரத்தை, மெய்மையினுடையவும் பொய்மையினுடையவும் சேர்க்கையை, அவை எங்கே சந்திக்கின்றனவென்பதை எவரும் அறியார். நாம் ஒரு ஸ்வப்பனத்தின் நடுவில் பாதி தூங்கிக்கொண்டும், பாதி விழித்துக்கொண்டும், நமது வாழ்நாட்களையெல்லாம் ஒரு மயக்கத்திலே கழித்துக்கொண்டும் நடக்கிறோம்.

இதுதான் எல்லா இந்திரிய ஞானத்தினுடையவும் விதி. இது எல்லா தத்துவ சாஸ்திரத்தினுடையவும், தற்புகழ்ச்சி செய்துகொள்ளும் சாஸ்திர மெல்லா வற்றினுடையவும், தற்புகழ்ச்சி செய்துகொள்ளும் மனுஷ்ய அறிவெல்லாவற்றினுடையவும் விதி. இது தான் பிரபஞ்சம்.

160. நீ ஜடமென்றாலும், ஆத்மாவென்றாலும், அல்லது மனமென்றாலும், அல்லது வேறென்ன வென்று சொன்னாலும், உண்மை யொன்றாகவே யுள்ளது; அவை யுள்ளனவென்றும் நாம் கூற முடியாது; அவை யில்லையென்றும் நாம் கூற முடியாது. அவை யொன்றென்றும் நாம் கூற முடியாது. அவை யநேக மென்றும் நாம் கூற முடியாது. ஒளியும் இருட்டும் இப்படி என்றும் விளையாடுவது பாகுபாடற்றதாய்ப், பேதிக்கத் தகாததாய்ப், பிரிக்க முடியாததாய் எப் பொழுதும் அங்கு உள்ளது. உண்மையே, ஆனல், உண்மையுமல்ல; ஜாக்கிரதை, ஆனல் நித்திரையுமாம். இது உண்மைகளின் கூற்றும்; இதுதான் மாயை யெனப்படுவது.

161. உலகில் பிறந்தபடியே வாழ்வதற்குத் திரு ப்தி யுற்றவர்களுடைய விதி துக்கமே.

162. உருவத்தை யுடைய ஒவ்வொன்றும், உனது மனத்திலே ஒரு எண்ணத்தைக் கிளப்புகிற ஒவ்வொன்றும் மாயைக்குள்ளே உள்ளது; ஏனெ

னில், கால தேச நிமித்தத்தினால் கட்டுப்பட்டுள்ள ஒவ்வொன்றும் மாயைக்குள்ளே யுள்ளது.'

163. பிறரைக் கொல்லாமல் எவர் ஒரு விநாடி நேரம் வாழ முடியும்? ஆயிரக்கணக்கான உயிர்களை யழிக்காமல் நீ ஒரு சுவாசம் இழுக்க முடியுமா? நீ வாழ்கிறாய்; ஏனெனில், லக்ஷக்கணக்கானவர்கள் மரிக்கிறார்கள். உனது ஜீவிதத்தினால் ஒவ்வொரு விநாடி நேரமும், நீ சுவாசிக்கின்ற ஒவ்வொரு சுவாசமும் ஆயிரக்கணக்கானவர்களுக்கு மரணமாம்; நீ செய்கின்ற ஒவ்வொரு சலனமும் லக்ஷக்கணக்கானவர்களுக்கு மரணமாம். நீ உண்கின்ற ஒவ்வொரு கவளம் சோறும் லக்ஷக்கணக்கானவர்களுக்கு மரணமாம். அவை ஏன் மரிக்கவேண்டும்? அவை மிகவும் தாழ்ந்த பிராணிகள் என்று ஒரு பழம் பாட்டு உண்டு. அவை யப்படியே தாழ்ந்தவை யென்றே வைத்துக்கொள்வோம். ஆனால், இவ்விஷயம் கேள்விக்கு இடமுள்ளதே. ஏனெனில், 'எறும்பு மனிதனை விடப் பெரியதா? அல்லது மனிதன் எறும்பைவிடப் பெரியவனா?' என்பதை எவர் அறிவார்? ஒரு வழியில், அல்லது மறு வழியில் எவர் அதை ருசுப்படுத்த முடியும்?

164. மதத்தை யனுபவபூர்வ மாக்கியதும் ஒவ்வொருவருடைய வீட்டு வாசலுக்கு மதத்தைக் கொண்டுவந்து கொடுத்ததுமான பெரிய, பரந்த ஹிருதயத்தையும் அளவற்ற பொறுமையையும் நாம்

புத்தரிடத்தில் கண்டோம் ஒவ்வொன்றின்மீது யுக்தியாம் ஜ்வலிக்கின்ற ஒளியை வீசுகின்ற அபாரமான புத்தி சக்தியை ஸ்ரீ சங்கராசார்யரிடம் கண்டோம். இன்று நாம் புத்தி சக்தியாம் அந்தப் பிரகாசமான ஆதித்தன் புத்தருடைய ஹிருதயத்துடனே, அன்பும் இரக்கமுமாகிற ஆச்சர்யமான அளவற்ற ஹிருதயத்துடனே சேர்க்கப்பட வேண்டுமென்று விரும்புகிறோம். இந்தச் சேர்க்கையானது நமக்கு மிக மிக உயர்ந்த தத்துவஞானத்தை யளிக்கும். சாஸ்திரமும் மதமும் சந்தித்துக் கை குலுக்கும். காவ்யமும் தத்துவ ஞானமும் நண்பர்களாகும். இது பிற்காலத்திய மதமாம்; நாம் இதை வேலை செய்துவிடுவோமானால், இது எல்லாக்காலத்துக்கும், எல்லா ஜனங்களுக்கு மாயிருக்குமென்று நாம் நிச்சயமாய் நம்பலாம்.

165. மனிதர் என் ஒழுக்க முள்ளவர்களா யிருக்கவேண்டும்? எனெனில், ஒழுக்கத்தின் மூலமாகவே தான் முக்திக்கு மார்க்கம் உள்ளது; ஒழுக்க மின்மை பந்தத்தினிடம் இட்டுச் செல்கிறது.

166. நமக்கு அமிருதம் கிடைக்க முடியாமற் போனதினலே, விஷத்தைக் குடித்தால் நமக்கு விஷயங்கள் சரிப்பட்டுவிடுமா? நாம் உடனே உண்மையை அறிய முடியவில்லை யென்றால், அந்தகாரத்தினுள் சென்று பலஹீனத்துக்கும் மூட விஸ்வாசத்துக்கும் இணங்குவதினல் நமக்கு ஏதேனும் அநுகூலம் உண்டாகுமா?

167. பலம் ஒன்றே வேண்டியது. உலகத்து வியாதிக்குப் பலமே ஔஷதமாம். தனவந்தர்களால் கொடூரமாக நடத்தப்படுகிறபொழுது எளியவர்கள் உடைத்தாயிருக்க வேண்டிய ஔஷதம் பலமேயாம். கற்றவர்களால் கடூரமாக நடத்தப்படுகிற பொழுது அறிவீனர்கள் உடைத்தாயிருக்க வேண்டிய ஔஷதம் பலமேயாம்; இதர பாபிகளால் கடூரமாக நடத்தப்படுகிறபொழுது பாபிகள் உடைத்தாயிருக்க வேண்டிய மருந்து அதுவே; இந்த அத்வைத சிந்தனையைப் போல ஒன்றுமே அத்தகைய பலம் கொடுக்கிறதில்லை.

168. உன் மீது பொறுப்பு ஏற்படுத்தப்பட்டவுடனே நீ உனது குற்ற சிந்தனைகளை யெல்லாம் விட்டுவிடுவாய்; உனது நடத்தை முழுதும் மாறும்.

169. "எனக்கு மரணமு மில்லை, பயமு மில்லை. எனக்கு ஜாதியும் இல்லை, கக்ஷியும் இல்லை. எனக்குப் பிதாவு மில்லை, மாதாவு மில்லை; பிறப்பு மில்லை, மரிப்பு மில்லை; நண்பனு மில்லை, பகைவனு மில்லை. ஏனெனில், நானே அகண்ட சச்சிதாநந்த வஸ்து; நானே ஆநந்த மயன்; நானே ஆநந்த மயன். புண்ணியத்தினாலாவது அல்லது பாபத்தினாலாவது, சுகத்தினாலாவது துக்கத்தினாலாவது நான் கட்டுப்பட்டவனல்லன். ஸ்தல யாத்திரைகளும், கிரந்தங்களும், சடங்குகளும் என்னை யொருபொழுதும் கட்டுப்படுத்த முடியா. எனக்குப் பசியு மில்லை, தாகமு மில்லை. சரீரம் என்

னுடையதன்று. சரீரத்துக்கு உண்டாகின்ற மூட நம்பிக்கைகளுக்கும் அழிவுக்கும் நான் உட்பட்டவனல்லன். நான் அகண்ட சச்சிதாநந்த சொரூபி; நான் ஆநந்த மயமானவன்; நான் ஆநந்த மயமானவன்."

170. "வேதங்க ளெல்லாம் எதைக் கோஷிக்கின்றதோ, எல்லாவிதத் தவங்களினாலும் பறையறைவிக்கப்படுகின்றது எதுவோ, எதை நாடி மனிதர் பிரஹ்மச்சர்ய வாழ்க்கை வாழ்கின்றார்களோ அது 'ஓம்' என்று நான் ஒரு வார்த்தையில் கூறுவேன்."

171. அணுவுக்கும் அணுவாயும் மகத்துக்கு மகத்தாயும் உள்ள இந்தச் சமஸ்த நாதன் ஒவ்வொரு மனுஷ்ய ஹிருதயத்தின் உள்ளிலும் இருக்கிறார். பாப ரகிதர்கள் துக்க மெல்லாம் நீங்கினவர்களாகி ஈசுவரனுடைய கிருபையினால் அவரைத் தரிசிக்கிறார்கள்; அவர், சரீரத்தில் வசிப்பவ ராயினும் சரீர மற்றவர்; தேசத்தை யுடைத்தானவராகத் தோன்றினாலும், தேச மற்றவர்; அகண்ட மானவர்; சர்வ வியாபகர்; ஆத்மாவானவர்; அத்தகையோர் என்று அறிந்துகொண்டு விடுவதினால், மகாத்மாக்கள் ஒரு பொழுதும் துக்க மடைகிறதில்லை.

172. "இந்த ஆத்மாவானது வாக்கு வல்லமையினாலாவது, பெருத்தபுத்தியினாலாவது, வேதங்களைப் படிப்பதினாலாவது அடையப்படுவதில்லை." —

173. சப்த மெல்லாவற்றுக்கும், பார்வை யெல்லாவற்றுக்கும், வடிவ மெல்லாவற்றுக்கும் அப்பால், அகண்டமாய், ருசி ஸ்பர்சம் எல்லாவற்றுக்கும் அப்பால், அகண்டமாய், ஆதியும் அற்றதாய், அந்தமும் அற்றதாய், பிரகிருதிக்கு அப்பாலும் உள்ளதாய், மாறுதலற்றதாயுள்ள அவரை எவனொருவன் அநுபவத்தில் அறிகிறனோ, அவனே மரணத்தின் வாய்களினின்றும் தன்னைத் தானே விடுவித்துக் கொள்கிறான்.

174. உபநிஷத்துக்கள் எல்லாவற்றினூடும் உள்ள ஒரு மத்தியக் கொள்கை யாவது, ஸ்வாநுபவத்தைப் பற்றியதேயாம்.

175. பரிபூர்ணத்துவம் என்பது எப்பொழுதும் அகண்டமேயாம். நாம் முன்னமேயே இந்த அகண்ட வஸ்துவா யிருக்கிறோம்; அந்த அகண்டத் தன்மையை வெளிப்படுத்த நாம் முயற்சி செய்துகொண் டிருக்கிறோம். நீயும் நானும் எல்லா ஜீவராசிகளும் அதை வெளிப்படுத்த முயற்சித்துக்கொண் டிருக்கிறோம். அவ்வளவுக்கும் அது நல்லதுதான்.

176. பரிபூரணமான வெளிப்பாடு என்பதன் பொருள் என்ன? பரிபூரணத் தன்மை யென்பது அகண்டத்தன்மை யென்று பொருள் படுகின்றது; வெளிப்பாடு என்பது எல்லை என்று பொருள்படுகின்றது. ஆனால், நாம் எல்லை யற்ற கட்டுப்பாடுகளாவோம் என்று அது பொருள்படுகின்றது; அது தனக்குத்தானே நேர் எதிர் இடையா யிருக்கின்றது.

177. தியாகமே நம்மை அதனிடத்து இட்டுச் செல்லும். தியாகமே நமது உண்மையான வாழ்க்கைக்கு ஆதாரமாகும்; நாம் அனுபவிக்கின்ற நன்மையினுடையவும், உண்மையான வாழ்க்கையினுடையவும், ஒவ்வொரு விநாடி நேரமும் நாம் நம்மைப் பற்றி நினைக்காத பொழுதுதான். இச் சிறிய, பிரத்தியேக ஜீவன் மரிக்கவேண்டும். நாம் உண்மையிலிருக்கிறோ மென்பதையும், அந்த உண்மை கடவுளே யென்பதையும், அவரே நம்முடைய உண்மையான இயற்கை யென்பதையும், அவர் எப்பொழுதும் நம்மிடத்திலும் நம்முடனும் இருக்கிறார் என்பதையும், அப்பொழுது நாம் கண்டுகொள்வோம். நாம் அவரிலேயே வசித்து, அவரிலேயே நிற்போம். அது ஒன்றே வாழ்க்கையின் ஆநந்தகரமான நிலைமை. ஞான பூமியிலுள்ள வாழ்க்கையே வாழ்க்கை; நாம் எல்லோரும் இந்த ஸ்வாநுபூதியை அடைய முயற்சிப்போம்.

178. அகண்ட வஸ்துவானது, அகண்டமாயுள்ள அது ஒன்றிலேயே நாடப்படவேண்டும். நம்மைச் சுற்றியுள்ள ஒரே அகண்ட வஸ்து யாதெனில், நம்முள் உள்ளதே, நம்முடைய சொந்த ஆத்மாவே. சரீரம், அல்லது மனம், அல்லது நமது நினைப்புக்கள் கூட, அல்லது நம்மைச் சுற்றிலும் நாம் பார்க்கின்ற உலகம் அகண்ட மல்ல.

179. "இங்கு உள்ளது அங்கும் உண்டு; அங்கு உள்ளது இங்கும் உண்டு. அநேகத்தை எவன் பார்க்கிறானோ அவன் மரணத்திலிருந்து மரணத்துக்குச் செல்லுகிறான்."

180 ஒவ்வொரு மனிதனும் ஆத்மீக உலகத்தில் போலவே சாஸ்திரீய உலகத்திலும் அத்தியந்தம் அநுபவபூர்வமா யிருக்கும்படியான ஒரு காலம் வரும்; அப்பொழுது அவ் வொற்றுமை, ஒற்றுமையின் சப்ரசத்தன்மை உலகு முழுதும் வியாபிக்கும். மனுஷ்ய வர்க்கம் முழுதும் ஜீவன் முக்தர்களாய் விடும்—இந்த ஜன்மத்திலேயே முக்தர்களாய்விடும்.

181. எல்லாவற்றுக்கும் ஏன் 'என்பதையே நான் விரும்புகிறேன்; எப்படி யென்பதைக் குழந்தைகளுக்கு விட்டுவிடுகிறேன்.

182. ஸ்வதந்திரமா யுள்ளது ஒருபொழுதும் சார்புடையதாக முடியாது. அது உண்மையில் சார்புடையதானால், அதன் ஸ்வதந்திரத் தன்மை ஒரு பிரமையே யாய்விடும்.

183. ஆனால், கடைசியும் மிக மிக உத்தமமானதுமான, நீ அழவே வேண்டியதில்லை. நீ இந்தச் சடங்குகளினூடே செல்லவேண்டியதில்லை. உனது சக்கராதிபத்தியத்தை மறுபடியும் எப்படிப் பெறுவது என்ற விஷயத்தைப்பற்றி நீ கவனிக்கவே வேண்டாம்; ஏனெனில், நீ யொருபொழுதும் அதையிழந்ததில்லை. நீ யொருபொழுதும் இழக்காததைத் தேடவ

தற்கு ஏன் செல்லல் வேண்டும்? நீ முன்னமேயே பரிசுத்தன்; நீ முன்னமேயே முக்தன்; நீ ஸ்வதந்திரனென்று நினைத்துவிட்டால், நீ இந்த நிமிஷத்திலேயே ஸ்வதந்திரன்; நீ பெத்தனென்று நினைத்துக் கொண்டால், நீ பெத்தனே யாய்விடுவாய்.

184. மரண மென்பது வெளியே யுள்ள ஏதோ ஒரு காரணத்தினுலேயே யுண்டு பண்ணப்பட்ட ஒரு காரியமாம்.

185. ஸ்வதந்திர மென்பது வெளியேயுள்ள எதனையும் சாரா திருத்தலாம் அதாவது, அதற்கு வெளியே யுள்ள ஒன்றும் ஒரு காரணமாக அதன் மீது வேலை செய்ய முடியாது.

186. வேதங்கள் ஈசுவர ஞானத்தைப் பற்றிய மொழியே யாகும்; ஈசுவரன் நித்தியமா யுள்ளது போல, அவரது ஞானமும் அவருடன் நித்தியமா யுள்ளது: அப்படியே வேதங்களும் நித்தியமாம்.

187. ஒவ்வொரு கொடிய செய்கையும் ஆத்மாவினுடைய லக்ஷணத்தைச் சுருக்குகின்றது; ஒவ்வொரு நற்செய்கையும் அதை விரித்துவிடுகிறது.

188. "கொழுந்துவிட் டெரியும் நெருப்பிலிருந்து அதே லக்ஷணத்தை யுடைய லக்ஷக்கணக்கான பொறிகள் பறக்கின்றது போல, ஈசுவரனுகிய இந்த அகண்ட வஸ்துவிலிருந்தும் இந்த ஆத்மாக்கள் உண்டாகின்றன."

189. பிரபஞ்சத்தில் அவர் இல்லாத ஒரு அணுவுமில்லை; ஒரு துகளுமில்லை.

190. சர்வ வியாபக வஸ்துவாகிய நம்மை எவரால் துன்புறுத்த முடியும்? பலஹீனமெல்லாம் நம்மிடமிருந்து மறைந்து விட்டன; நாம் செய்ய வேண்டிய ஒரே வேலை நமது சகோதர ராசிகளில் இந்த அறிவைக் கிளப்ப வேண்டியதே.

191. உண்மையெல்லாம் நித்தியமானதே. சத்தியம் என்பது எவருடையவும் சொத்தன்று; எந்த ஜாதியும், எந்தத் தனி மனிதனும் அது தனக்குத் தான் பிரத்தியேகமானது என்று கூறிக்கொள்ள முடியாது.

192. அப்படியானுல், முடிவுதான் என்ன? மறுமொழி யாதெனில், சமஷ்டியாயுள்ள அந்த ஆத்மா நீயேயாம்; நீயொரு பாகமல்ல; ஆனுல், அதன் முழுமையுமேயாம். நீயே ஈசுவரன் முழுதும். அப்படியாயின், இந்த வேற்றுமைகளெல்லாம் என்ன?

193. துக்கத்துக்கு ஒரு முக்கிய காரணம் பயம் என்பதேயாம். ஒருவன் ஏன் இன்னொருவனைத் துன்புறுத்தவேண்டும்? ஏனெனில், அவன் தனக்குப் போதுமான அளவு போகம் கிடைக்காதென்று அவன் பயப்படுகிறுன். தனக்குப் போதுமான அளவு பணம் இராதென்று ஒருவன் பயப்படுகிறுன். அந்தப் பயமானது அவன் பிறரைத் துன்புறுத்திக்

கொள்ளையடிப்பதற்குக் காரணமா யிருக்கிறது. ஒரே வஸ்து உண்டானால், பயம் எப்படி ஏற்படக்கூடும்? என் தலையின்மீது ஒரு இடி விழுந்தால், இடியா யிருந்தது நானே; ஏனெனில், நான் ஒருவனே உள்ள வஸ்து. ப்ளேக் நோய் வந்தாலும், அதுவும் நானே; புலி வந்தாலும் அதுவும் நானே. மரணம் வந்தால், அதுவும் நானே. நானே மரணமும் வாழ்க்கையும்.

194. மதத்தை ஸ்வாநுபவத்தில் கொண்டுவா; பேச்சுப் போதாது. இதுவே வேதாந்தம் எப்பொழுதும் கூறுவது.

195. நமது ஆத்மாக்களில் பிரத்தியக்ஷ ஸ்வாநுபவம் ஆரம்பிக்கிறபொழுது மதம் உண்டாகிறது. அதுதான் மதத்தின் உதயமாம்; அப்பொழுதுதான் நாம் ஒழுக்க முள்ளவர்க ளாவோம்.

196. ரோமாபுரியி லிருந்த தனவந்தனைப்பற்றி நீங்கள் கேட்டிருக்கிறீர்கள்; அவன் ஒரு நாள் தன்னுடைய சொத்தில் 'பத்து லக்ஷம் பவுன்தான் எஞ்சியுள்ளது' என்று அறிந்து கொண்டான்; உடனே தற்கொலை செய்து கொண்டு விட்டான். பத்து லக்ஷம் பவுன் அவனுக்கு வறுமை யாயிற்று!

197. சமுத்திரத்தில் ஒரு அலை யுண்டாகிறது. அலை நிச்சயமாய்ச் சமுத்திரத்தைப் போன்றதே; ஆயினும், அது அலை யென்றும், சமுத்திரத்தினின்று வித்தியாசப்பட்டதென்றும் நாம் அறிகிறோம். இந்த

வித்தியாசத்தை யுண்டு பண்ணுவது யாது? நாமமும் ரூபமுமேயாம்; அதாவது; மனத்திலுள்ள எண்ணரூபமும் ரூபமுமாம். இப்பொழுது, சமுத்திரத்தினின்றும் வேறானதொன்றாக நாம் ஒரு அலை யுருவத்தை நினைக்க முடியுமா? முடியவே முடியாது. அது எப்பொழுதும் சமுத்திர எண்ணத்துடனேயே சம்பந்தப்பட் டிருக்கிறது. அலை யடங்கி விட்டால்; வடிவம் ஒரு நிமிஷத்தில் மறைந்து விடுகிறது. ஆயினும், வடிவம் பிரமை யல்ல. அலை யிருந்தவரையில் உருவமும் அங்கிருந்தது: நீ உருவத்தைப் பார்க்கக் கடமைப்பட்டாய். இது தான் மாயை.

198. "அநேகமாம் இவ்வுலகத்தில் எல்லாவற்றினூடும் அவ்வொரு வஸ்துவே ஓடுகின்றது' என்று பார்க்கிறவன் எவனோ, மரணமாம் இவ்வுலகத்தில் அவ்வொரு அகண்ட வாழ்க்கையைக் காண்கிறவன் எவனோ, ஜடத் தன்மையும் அஞ்ஞானமும் நிறைந்த இவ்வுலகத்தில் அவ் ஏக ஒளியையும் ஞானத்தையும் காண்கிறவன் எவனோ, அவனுக்கே நித்திய சாந்தி சொந்தமாம். வேறெவருக்கும் இல்லை; வேறெவருக்கும் இல்லை.

199. ஒரு தீமை யுள்ளதாக வைத்துக்கொள்வோம். அதை நிந்தித்தால் அந்த நிந்தனையானது அதை நீக்காது; ஆனால், வேறு வேலை செய்ய நீ செல்லல் வேண்டும். முதலாவது, காரணத்தைக்

கண்டு பிடி; பின்னர் அதை நீக்கிவிடு; காரியமும் நீக்கப்பட்டுவிடும்.

200. ஜயத்துக்காக, சத்தியத்துக்காக, மதத்துக்காக, முயற்சி செய்யத் துணிகிறவர்கள் நியாயமான வழியில் இருக்கிறார்கள்; வேதங்கள் போதிப்பதும் அதுவே. "ஏக்கத்தில் இராதே; கத்தி முனையில் நடப்பது போன்று வழி மிகவும் கடினமானது. ஆயினும், ஏக்கமடையாதே! எழுந்திரு! விழித்துக் கொள்! லக்ஷியத்தைப் பார்!"

201. இப்பொழுது வேண்டியது மிகமிகப்பெரிய ஹிருதயத்தினுடையவும், மிகமிகப் பெரிய புத்தி சக்தியினுடையவும் சேர்க்கையேயாம்; அகண்ட அன்பினுடையவும், அகண்ட அறிவினுடையவும் சேர்க்கையேயாம். அவர் அகண்ட சத், அகண்ட ஞானம், அகண்ட ஆநந்தம், என்ற இந்த மூன்றைத் தவிர, வேதாந்தியானவன் ஈசுவரனுக்கு வேறு லக்ஷணங்கள் அளிப்பதில்லை; அவன் இம் மூன்றையும் ஏகமாகவே கருதுகிறான். சித்தும் ஆநந்தமும் இல்லாத சத்து இருக்க முடியாது; ஆநந்தமின்றிய சித்தும், சித்தின்றிய ஆநந்தமும் இருக்க முடியாது. நாம் விரும்புவது அகண்ட சச்சிதானந்த ஒற்றுமையேயாம். ஏனெனில், அதுவே நமது லக்ஷியம்.

202. நாம் எல்லாவற்றையும் ஈசுவரனாலே மூட வேண்டும்; பொய் நம்பிக்கையினால் மூடக்கூடாது. தீமைகளைப் பாராமல் நமது கண்களை மூடிக்கொள்

வதினால் அன்று; ஆனால், ஒவ்வொன்றிலும் ஈசுவரனை உண்மையில் பார்ப்பதினாலேயே. இவ்விதமாக நாம் உலகத்தைத் தியாகம் செய்ய வேண்டும். உலக மானது தியாகம் செய்யப்படுகிற பொழுது, எஞ்சி யுள்ளது யாது? ஈசுவரனே. என்ன பொருள்? நீ உனது மனைவியை வைத்துக்கொள்ளலாம்; நீ அவளை நீக்கி விடவேண்டு மென்பதல்ல பொருள்: ஆனால், 'மனைவியினிடத்தில் நீ ஈசுவரனைப் பார்க்க வேண்டு மென்பதே. 'உனது குழந்தைகளை விட்டு விடு'; அது என்ன பொருள்? ஒவ்வொரு தேசத்தி லும் சில மனுஷ்ய மிருகங்கள் செய்கிற மாதிரி, வீட்டுக்கு வெளியே தூரத்திவிடுவதா? இல்லவே யில்லை. இது பேய்க் கொள்கை. அது மத மன்று. ஆனால், உனது குழந்தைகளிடத்தில் கடவுளைப் பார். அப்படியேதான் ஒவ்வொன்றிலும். 'ஜீவிதத்திலும், மரணத்திலும், சுகத்திலும் துக்கத்திலும் ஈசுவரன் ஒரே மாதிரி யிருக்கிறார். உலகு முழுதும் ஈசுவரன் நிறைந் திருக்கிறார். உனது கண்களைத் திறந்து அவரைப் பார் இதுதான் வேதாந்தம் போதிப்பது.

203. வேதாந்தம் முடிபு செய்வதாவது, 'நாம் பெத்தர்க ளல்லர்; முன்னரே முக்தர்களா யிருக் கிறோம்' என்பதே. அது மாத்திரம் அன்று; ஆனால், 'நாம் பெத்தர்கள்' என்று நினைப்பது, அல்லது சொல்வது அபாயகரமானதாம். அப்படிச் சொல் வது தப்பிதம்; அது தன் மயக்கம். "நான் பெத்

தன்," "நான் பலஹீனன்," "நான் அநாதை." என்று நீ சொன்னவுடனே, உனக்கு ஆபத்து வந்துவிட்டது; நீ நீயாகவே உன்னை இன்னும் ஒரு சங்கிலி போட்டுக் கட்டிக்கொள்கிறாய். அப்படிச் சொல்லாதே! அப்படி நினைக்காதே! ஒரு காட்டிலே வசித்துக்கொண்டு இரவும் பகலும் "சிவோகம்"—"நான் சிவ ஸ்வரூபி"—என்று தியானம் பண்ணிக்கொண்டிருந்த ஒரு புருஷரைப்பற்றி நான் கேள்விப்பட்டிருக்கிறேன்; ஒரு நாள் ஒரு புலியானது அவர்மீது பாய்ந்து, அவரைக் கொல்லவற்காக, அவரைப்பற்றியிழுத்தது; நதியின் மறு கரையிலேயிருந்த ஜனங்கள் அதைக் கண்டார்கள்; அவரிடம் சப்த முள்ளவரையில், புலியின் வாய்களிலே இருந்தும் கூடக் "சிவோகம்" என்று சொல்கின்ற சப்தத்தைக் கேட்டார்கள். அத்தகையோர் அநேகர் இருந்திருக்கிறார்கள். துண்டு துண்டாக்கப் படுகையிலும் தங்களையாசீர்வதித்த ஜனங்களும் இருந்திருக்கிறார்கள். "நானே அவன்; நானே அவன். அப்படியேதான் நீயும், நான் பரிசுத்தனாயும், பரிபூர்ணனாயும் இருக்கிறேன்; அப்படியேதான் எனது சத்துருக்கள் அனைவரும் இருக்கிறார்கள். நீயே அவன்; அப்படியேதான் நானும்." அதுதான் பலத்தினுடைய நிலைமை.

204. "இவ்வுலகிலுள்ள துக்க மெல்லாவற்றுக்குங் காரணமா யிருப்பது பலஹீனமே" என்று வேதாந்தம் கூறுகிறது. துன்புறுதற்கு ஒரு காரணம்

பலஹீனமாம். நாம் பலஹீனர்களா யிருப்பதினாலேயே நாம் துக்கிகளாயிருக்கிறோம். நாம் பலஹீனர்களாயிருப்பதினாலேயே, பொய் சொல்லுகிறோம்; திருடுகிறோம், கொலை செய்கிறோம்; பிற குற்றங்களையும் செய்கிறோம். நாம் பலஹீனர்களா யிருப்பதினாலேயே, நாம் துன்புறுகிறோம். நாம் பலஹீனர்களாயிருப்பதினாலேயே நாம் மரிக்கின்றோம். நம்மைப் பலஹீனப்படுத்துவதற்கு ஒன்று மில்லாவிட்டால், மரணமு மில்லை, துக்கமு மில்லை.

205. காரணம் காரியத்தைப் போன்றே யுள்ளது; காரியம் இன்னொரு வடிவத்தில் வெளிப்படும் காரணமே யாகும். ஆகையால், இந்த ஜகத் முழுதும சூந்யத்திலிருந்து உண்டுபண்ணப்பட முடியாது. காரணமில்லாமல் ஒன்றும் உண்டாகிறதில்லை. காரணமே இன்னொரு வடிவத்தில் காரியமாம்.

206. ஒரு தனி மனிதனை எடுத்துக் கொள்வோம். அவனிடத்தில் முதலாவது பேதப்படாத பிரகிருதியின் ஒரு பாகம் உள்ளது; அவனிடத்துள்ள அந்த ஜடப் பிரகிருதியானது, இந்த சமஷ்டி யறிவின் ஒரு சிறு அணு இந்த மகத்தாக மாறுதலடைகிறது; அவனிடத்துள்ள சமஷ்டி யறிவின் இந்த அணுவானது அகங்காரமாக மாறுத லடைகிறது; பின்னர் ஞானேந்திரியங்களாக மாறுத லடைகிறது; இந்த சூட்சும அணுக்கள் சேர்ந்து இந்தச் சரீரத்தை யாக்குகின்றன.

207. நாம் தனித் தன்மையை அடைவதற்கு அரும் பாடுபட்டுக்கொண் டிருக்கிறோம்; அதுதான் அகண்டத் தன்மை; அதுதான் மனிதனுடைய உண்மையான லக்ஷணம். எவனுடைய வாழ்க்கையானது ஜகத் முழுதிலும் வியாபித்திருக்கிறதோ, அவன் ஒருவனே ஜீவிக்கிறான். நாம், கட்டுப்பட்ட வஸ்துக்களின் மீது எவ்வளவுக் கெவ்வளவு அதிகமாக நமது ஜீவிதங்களை ஒருமுகப்படுத்துகிறோமோ அவ்வளவுக் கவ்வளவு வேகமாக நாம் மரணத்தை நோக்கிச் செல்கிறோம். நமது வாழ்நாட்கள் பிரபஞ்சத்தில், பிறரிடத்தில் எப்பொழுது இருக்கின்றனவோ, அந்த நிமிஷங்களே நாம் வாழ்கிறோம். இச் சிறிய வாழ்க்கை வாழ்தல் மரணமேயாம்; வெறும் மரணமேயாம்; அதனால்தான் மரண பயம் உண்டாகிறது. இந்தப் பிரபஞ்சத்திலே ஒரு ஜீவன் உள்ளவரையில் தான் ஜீவிப்பதாக மனிதன் அநுபவத்தில் அறிகிறபொழுது தான் மரண பயம் ஜயிக்கப்பட முடியும். "நான் ஒவ்வொன்றிலும், ஒவ்வொருவரிடத்தும் இருக்கிறேன்; நான் எல்லா ஜீவர்களிடத்தும் இருக்கிறேன்; நான் பிரபஞ்சமா யிருக்கிறேன்" என்று அவன் சொல்லக் கூடிய பொழுதுதான், பயமற்ற தன்மை யுண்டாகிறது.

208. மனிதன் பிரகிருதியைக் கடந்து அப்பால் கிளம்பக் கடு முயற்சி செய்கிறவரையில், அவன் மனிதனே.

209. ஒரு பெரிய அரசன் ஒரு காட்டில் வேட்டையாடச் சென்றான்; அங்கே அவன் ஒரு மகாத்மாவைத் தரிசிக்கும்படி நேரிட்டது. அவன் அவருடனே சிறிது சம்பாஷித்து, மிகுந்த சந்தோஷமடைந்தவனாகித், தன்னிடத்திலிருந்து ஒரு வெகுமதியை ஏற்றுக்கொள்ளும்படி அவன் அவரை வேண்டிக்கொண்டான். மகாத்மா, "வேண்டாம்; நான் எனது நிலைமையில் மிகவும் திருப்தியடைந்தவனாயிருக்கிறேன்; இந்த விருக்ஷங்கள் எனக்கு உண்பதற்குப் போதுமான பழங்கள் அளிக்கின்றன; இவ்வழகிய பரிசுத்த நதிகள் எனக்கு வேண்டிய தீர்த்தமெல்லாம் கொடுக்கின்றன; நான் இந்தக் குகைகளில் உறங்குகிறேன்; நீ சக்கரவர்த்தியாயிருந்தபொழுதிலும், உனது வெகுமதிகள் எனக்கு ஒரு லக்ஷியமா?" என்று சொன்னார். சக்கரவர்த்தி, "என்னைப் பரிசுத்தம் செய்வதற்கு, என்னைத் திருப்திப்படுத்துவதற்கு, ஏதேனும் வெகுமதி பெற்றுக்கொண்டு, ஊருக்குள்ளே வரவேண்டும்" என்று கூறினான். கடைசியாக அந்த மகாத்மா சக்கரவர்த்தியுடனே கூடப் போகச் சம்மதித்தார். அவர் சக்கரவர்த்தியினுடைய அரண்மனைக்குள்ளே கூட்டிக்கொண்டு போகப்பட்டார். அங்குப் பொன்னும், ஆபரணங்களும், பளிங்குக் கற்களும், மிக மிக ஆச்சர்யமான வஸ்துக்களும் இருந்தன. ஐசுவர்யமும் அதிகாரமும் எங்கும் பிரத்தியக்ஷமாயிருந்தன. சக்கரவர்த்தி அந்த மகாத்மா

ஒரு நிமிஷநேரம் காத்திருக்கும்படிச் சொல்லிவிட்டுக் கடவுளைப் பிரார்த்திக்கச் சென்றான். அவன் ஒரு மூலையிலே சென்று, "ஏ ஈஸ்வரா! எனக்கு இன்னும் அதிக ஐஸ்வர்யத்தையும், இன்னும் அநேக குழந்தைகளையும், இன்னும் அநேக தேசத்தையும் அளிப்பாய்" என்று பிரார்த்திக்க ஆரம்பித்தான். இதனிடையில் மகாத்மா எழுந்திருந்து, வெளியே நடக்க ஆரம்பித்தார். சக்கரவர்த்தி, அவர் போவதைக் கண்டு, அவர் பின்னே சென்று, "ஸ்வாமி! நில்லுங்கள்! நான் கொடுப்பதை ஏற்றுக்கொள்ளாமல், வெளியே போகின்றீர்களே" என்றான். மகாத்மா அவனைத் திரும்பிப் பார்த்து, "பிச்சைக்காரா! நான் பிச்சைக்காரர்களிடம் பிச்சை யேற்பதில்லை; உன்னால் என்ன கொடுக்க முடியும்? நீயே எப்பொழுதும பிச்சையெடுத்துக்கொண் டிருக்கிறாயே" என்று சொன்னார்.

210. அன்பு என்பது எப்பொழுதும் கொடுப்பதேயாம்; ஒருபொழுதும் எடுப்பதன்று.

211. அன்பு பயமென்பதை யறியாது.

212. ஈசுவரன் தண்டிப்பவர், அல்லது வெகுமதி யளிப்பவர் என்ற இந்தப் பயங்கரமான கருத்துக்களுக்கெல்லாம் காட்டுமிராண்டி மனங்களிடத்தே பயனுண்டாமாயினும், எல்லாப் பயத்தையும் உதறியெறிந்துவிடுங்கள்! சில மனிதர்கள், மிக மிகப் புத்திசாலிகள் கூட ஆத்மஞான விஷயத்திலே காட்டு

பிராண்டிகளா யிருக்கிறார்கள். இந்தக் கருத்துக்கள் அவர்களுக்கு அனுகூலமா யிருக்கலாம். ஆனால், ஆத்மிக புருஷர்களுக்கு, மதத்தை பனுகுகின்ற புருஷர்களுக்கு, ஆத்மீக அந்தர் திருஷ்டி யுண்டாயிருக்கிறவர்களுக்கு அத்தகைய கருத்துக்கள் வெறும் குழந்தைத்தன மானவையேயாம்; வெறும் மூடத்தன மானவையேயாம். அத்தகைய புருஷர்கள் பயத்தைப்பற்றிய எல்லாச் சிந்தனைகளையும் நீக்கி விடுகிறார்கள்.

213. வேண்டியது யாதெனில், எல்லா மதங்களும் ஒன்று சேர்ந்தே நிற்கவோ அல்லது விழவோ செய்வதைக் கண்டு வெவ்வேறு மாதிரி மதங்களுக்குள்ளும் ஒரு சகோதர உணர்ச்சி; இந்தச் சகோதர உணர்ச்சியானது அந்யோந்யம் மதிப்பினாலும், அந்யோந்யம் மரியாதையினாலும் ஏற்படவேண்டும்.

214. இந்தச் சமரசத்தன்மையை உண்டுபண்ணுவதற்கு இரண்டும் சில சமயங்களில் மிகவும் அதிகமாய், அல்ல, சில சமயங்களில் மிகுதியும் தாக்கம் கரத்தக்கதாய் ஒன்றுக்கொன்று விட்டுக் கொடுக்க வேண்டும். ஆனால், அந்தத் தியாகத்தினாலே ஒவ்வொன்றும் அதிக மேன்மையையும், இன்னும் அதிக அபிவிருத்தியையும் அடையும். கடைசியாகக், கால தேச எல்லைக்குள்ளே கட்டுப்பட்ட அறிவானது அவ்விரண்டுக்கும் அப்பா லுள்ளதும், மனத்துக்கும் புலன்களுக்கும் எட்டாததுமான அகண்ட, அநந்த,

ஏகமேவாத்விதீயப்பொருளைச் சந்தித்து, அதனுடன் ஒன்றாய்விடும்.

215. திருஷ்டாந்தமாகக் காட்டில் வசிக்கின்ற மனிதனை எடுத்துக் கொள்வோம். அவனுக்கு மனத்தை விருத்தி செய்யத் தெரியாது; அவனால் ஒரு புஸ்தகம் படிக்க முடியாது; எழுத்து என்று ஒரு விஷயம் உண்டு என்று அவன் கேள்விப்பட்டதே கிடையாது. அவன் கடுமையாகக் காயப்படுத்தப் பட்டால், அவன் மறுபடியும் சீக்கிரத்தில் சௌக்கிய மடைந்துவிடுகிறான்; ஆனால், நாமோ சிறிது சிராய்த் துக்கொண்டால், மரித்துவிடுகிறோம். யந்திரங்கள் வஸ்துக்களைச் சகாய மாக்கி, அபிவிருத்திக்குக் காரணமா யிருக்கின்றன; ஆனால், ஒருவன் தனவந்தனாகும்பொருட்டு லக்ஷக்கணக்கானவர்கள் நசுக்கப் படுகிறார்கள்; ஆயிரக்கணக்கானவர்கள் அதே காலத்தில் மென்மேலும் ஏழைக ளாகிறார்கள்; மனுஷ்ய ராசிகள் கூட்டம் கூட்டமாக அடிமைக ளாக்கப்படுகிறார்கள்.

216. மார்க்கமானது மாயையுடனே சேர்ந்து செல்வ தன்று; ஆனால், அதற்கு எதிராகச் செல்வதாம். * * * நாம் பிரகிருதிக்கு உதவி புரிபவர்களாகப் பிறக்கவில்லை; ஆனால், நாம் பிரகிருதியுடன் போட்டி போடுகிறவர்களாகப் பிறந்திருக்கிறோம். நாம் அதற்கு எஜமானர்களா யிருக்கிறோம்; நாம் நம்மையே கட்டிப் பந்தப்படுத்திக்கொள்

கிறோம். இந்த வீடு இங்கு ஏன் உள்ளது? பிரகிருதி அதைக் கட்டவில்லை. பிரகிருதி, 'காட்டில் சென்று வசி,' என்று கூறுகிறது; 'நான் ஒரு வீட்டைக் கட்டிப் போராடுவேன்' என்று மனிதன் கூறுகிறான்; அவன் அப்படியே செய்கிறான். 'மனுஷ்ய வர்க்கத்தின் சரித்திரம் முழுதும் பிரகிருதியின் நியதிகள்' என்று சொல்லப்படுபவற்றுக்கு விரோதமாக நடைபெறும் இடைவிடாத ஒரு போராட்டமாம்; மனிதன் கடைசியில் வெற்றி யடைகிறான்.

217. 'மத விஷயத்திலே சுதந்திரம் இருக்க வேண்டும்' என்ற இந்தப் பெருந்தன்மையான எண்ணம் இந்தியாவில் எப்பொழுதும் உண்டு; ஸ்வதந்திரமே வளர்ச்சிக்கு முதலாவது நிபந்தனை யென்பதை நீங்கள் ஞாபகப்படுத்திக்கொள்ளல் வேண்டும். நீங்கள் எதை ஸ்வதந்திர மாக்கவில்லையோ, அது ஒரு பொழுதும் வளராது. உபாத்தியாயருடைய ஸ்வதந்திரத்தை நீ எப்பொழுதும் வைத்துக்கொண்டு, பிறரை வளரச் செய்யவும், அவருடைய வளர்ச்சியில் உதவி செய்யவும், அவர்களை எப்பொழுதும் நல்வழியில் நடத்தவும் உங்களால் முடியுமென்ற எண்ணமானது மூடத்தனமானது; இது ஒரு அபாயகரமான பொய்; இது இவ்வுலகில் லக்ஷக்கணக்கான ஜீவராசிகளுடைய வளர்ச்சியைத் தடுத்திருக்கிறது. மனிதர் ஸ்வதந்திர ஒளியை அடையட்டும். வளர்ச்சிக்கு அது ஒன்றே நிபந்தனை.

218. நீங்கள் (மேனாட்டார்) மத விஷயங்களிலே ஒருபொழுதும் ஒருவித ஸ்வதந்திரமும் அளித்ததில்லை; ஆனால், நெருப்பையும் கத்தியையும் உதவியாகக் கொண்டு உங்களுடைய நம்பிக்கைகளைப் பலவந்தமாகப் புகுத்தியிருக்கிறீர்கள். பலன், ஐரோப்பிய மனத்திலே மதமானது கரண்ட, தாழ்மைப்பட்ட வளர்ச்சியா யிருக்கிறது. இந்தியாவிலே நாங்கள் ஜன சமுதாயத்தினிடமிருந்து விலங்குகளை யெடுக்கவேண்டும்; ஐரோப்பாவிலே ஆத்மிக அபிவிருத்தியின் கால்களிலிருந்து விலங்குகள் எடுக்கப்படவேண்டும்.

219. மோக்ஷத்திலே யுள்ள கடவுள் பிரகிருதியிலே யுள்ள கடவுளா யிருக்கிறார்; பிரகிருதியிலே யுள்ள கடவுள் பிரகிருதியாகிய கடவுளா யிருக்கிறார்; பிரகிருதியாகிய கடவுள் சரீரமாகிய இந்த க்ஷேத்திரத்திலே யுள்ள கடவுளாகிறார்; சரீரமாகிற க்ஷேத்திரத்திலே யுள்ள கடவுள் கடைசியாக க்ஷேத்திரமே யாய்விடுகிறார்; ஜீவனும் மனிதனு மாய்விடுகிறார்; அங்கே அது தான் போதிக்கக்கூடிய கடைசி வார்த்தைகளை யடைந்துவிடுகிறது.

220. நீ தர்சித்த அந்த ஸ்வதந்திர லக்ஷியமானது சரியானதேயாம்; ஆனால், நீ அதை உனக்கு வெளியே நீட்டும்படி செய்தாய்; அதுதான் உனது தப்பிதம். அது எப்பொழுதும் உன்னுள்ளேயே யிருந்ததென்று, உனது ஆத்மாவுக்கு ஆத்மாவாய்

இருந்ததென்று நீ காண்கிற வரையில், அதை மேன் மேலும் சமீபத்தில் கொண்டுவா! அந்த ஸ்வதந்திர மானது உனது சொந்த லக்ஷணம்; இந்த மாயை யானது உன்னை யொருபொழுதும் கட்டுப்படுத்திய தில்லை. பிரகிருதிக்கு ஒருபொழுதும் உன்மீது அதி காரம் கிடையாது. பய முறுத்தப்பட்ட ஒரு குழந்தை போல, அது உன்னைக் கழுத்தைப் பிடித்து நெரித் துக்கொண் டிருந்ததென்று நீ கனவு கண்டுகொண் டிருந்தாய்; இந்தப் பயத்தினின்றும் விடுதலை யடைவதே லக்ஷியமாம்; அதைப் புத்தி சக்தியினால் பார்ப் பது மாத்திரமன்று; ஆனால், நாம் இவ்வுலகைப் பார்ப்பதைப்பார்க்கிலும் அதிகம் ஸ்பஷ்டமாய்ப் பிரத் தியக்ஷப்படுத்தித் தரிசிப்பதேயாம். அப்பொழுது நாம் முக்தர்களென்பதை யறிந்துகொள்வோம். அப் பொழுதுதான் கஷ்டங்களெல்லாம் மறையும்; அப் பொழுது ஹிருதயத்தின் குழப்பங்க ளெல்லாம் அமைதி பெறும்; எல்லா வளைவுகளும் நேராக்கப் படும்; அப்பொழுது அநேகத் தன்மையும் பிரகிருதியு மாகிற மயக்கமானது மறைந்துவிடும். மாயையானது இப்பொழுது இருக்கிறதுபோலப் பயங்கரமான, நம் பிக்கையற்றதொரு கனவா யிருக்கிறதற்குப் பதிலாக அழகியதாகிவிடும். இந்தப் பூமியானது ஒரு சிறை வீடா யிருப்பதற்குப் பதிலாக நமது விளையாட் டிட மாய்விடும். அபாயங்களும் கஷ்டங்களும் கூட, எல் லாத் துன்பங்களும் கூடத் தெய்வீகத்தன்மைபெற்று

விடும். நமது உண்மையான லக்ஷணத்தை நமக்குக் காண்பித்துவிடும். ஒவ்வொன்றுக்கும் பின்னல் எல்லாவற்றினுடையவும் வஸ்துவாக அவர் நிற்கிருரென்பதையும், அவர் ஒருவரே உண்மையான ஆத்மா என்பதையும் நமக்குக் காண்பித்துவிடும்.

221. அகண்ட வஸ்துவானது மனத்தினல் கட்டுப்பட்டதாய்விட்டால், அது அகண்ட வஸ்து ஆகாது; அது அந்தமுள்ளதாய்விட்டது. மனத்தினல் கட்டுப்பட்ட ஒவ்வொன்றும் அந்தமுடையதாகிறது. ஆகையால், அகண்ட வஸ்துவை யறிவதென்பது வார்த்தைகளில் எதிரிடையாம். அதனல்தான் இக் கேள்விக்கு ஒருபொழுதும் மறுமொழி யளிக்கப்படுகிறதில்லை. ஏனெனில், அதற்கு மறுமொழி கிடைத்துவிட்டால், அகண்ட வஸதுவென்று ஒன்று இராது; கடவுள் அறியப்பட்டு விட்டால் அதற்குமேல் அவர் கடவு ளல்லர்; அவர் நம்மில் ஒருவர் போன்று அந்த முடையரே. அவர் அறியப்பட முடியாதவர்; அவர் எப்பொழுதும் அறியப்படாதவராகவே யிருக்கிருர்.

222. நீ போதுமான ஆழ்ந்து சென்ருல், எல்லாம் அவ்வொன்றின் வேறுபாடுகளே யென்று காணப்படும்; இந்த ஏகத்துவ பாவனையை யடைந்தவனுக்கு அதற்கப்புறம் மயக்க மென்பதே யில்லை. அவனை எதனல் மயக்க முடியும்? அவன் ஒவ்வொன்றினுடையவும் இரகஸ்யத்தை அறிகிருன். அவனுக்கு

அதற்கப்புறம் துக்கமென்பது எங்கே யுள்ளது? அவன் நிச்சிப்பது என்ன? அவன் ஒவ்வொன்றி னுடையவும் உண்மைக்குக் காரணம் ஈசுவரனே, மக் தியப் பொருளே, ஒவ்வொன்றி னுடையவும் ஐக் கியமே யென்று கண்டு இருக்கிறான்; அதுதான் நித்திய சத்; நித்திய சித்; நித்திய ஆநந்தம். அங்கு மரணமும் இல்லை; வியாதியும் இல்லை; துக்கமு மில்லை; துன்பமு மில்லை; அதிருப்தியு மில்லை. எல் லாம் பரிபூர்ண ஒற்றுமையும், பரிபூர்ண ஆநந்தமு மாம். அப்படியிருக்க, அவன் எவருக்காக விச னிக்க வேண்டும்? உண்மையில் மரண மில்லை; துக்க மில்லை; உண்மைப் பொருளிடத்தே விசனிப்பதற்கு எவரு மில்லை; துக்கிப்பதற்கு எவரு மில்லை.

223. அத்வைதமானது இந்தியாவை ஜடத்து வத்திலிருந்து இரண்டு முறை ரக்ஷித்துள்ளது. புத்தர் வருவதற்கு முன், ஜடத்துவமானது பயங்கரமான அளவு பரவியிருந்தது; அது மிகமிகப் பயங்கரமான தா யிருந்தது; அது இக் காலத்தினதைப்போன் றில்லை; ஆனால், இன்னும் மிக்க கேவலமான தன்மையதா யிருந்தது. நான் ஒரு பொருளில் ஜடத்துவ வாதியே யாம். ஏனெனில், 'ஒன்றே யுண்டு' என்று நான் நம்புகிறேன். 'அதைத்தான் நீ நம்பவேண்டும்' என்று ஜடத்துவவாதி விரும்புகிறான். ஆனால், அதை அவன் ஜடமென்று கூறுகிறான்; நான் அதைக் கடவுளென்று கூறுகிறேன்.

224. கிறிஸ்தவ மதமொன்றே உலகில் உண்மையான மதமா யிருக்கவேண்டும்; ஏனெனில், கிறிஸ்தவ ஜன சமுதாயங்கள் செல்வம் மிகுந்தவையா யிருக்கின்றன! ஆனால், அந்தக் கூற்று தனக்குத் தானே நேர் எதிரிடையா யுள்ளது. ஏனெனில், கிறிஸ்தவ சமுதாயத்தின் செழுமை கிறிஸ்தவ ரல்லாத சமுதாயங்களின் துரதிர்ஷ்டத்தைச் சார்ந்திருக்கிறது. மேலே பாய்வதற்கு எவரேனும் இருக்க வேண்டும். உலகு முழுதும் கிறிஸ்தவர்களாய் விடுவதாக வைத்துக்கொள்வோம்: அப்படியாயின், கிறிஸ்தவ சமுதாயங்கள் எளியவை யாய்விடும். ஏனெனில், மேலே பாய்ந்து தின்பதற்கு அப்பொழுது கிறிஸ்தவரல்லாத சமுதாயங்கள் இரா. இவ்விதமாக, அந்த நியாயமானது தன்னைத்தானே கொன்று கொண்டுவிடுகிறது. மிருகங்கள் செடிகளைத் தின்று வாழ்கின்றன; மனிதர் மிருகங்களைத் தின்று வாழ்கின்றனர்; எல்லாவற்றுக்கும் மிகமிகக் கேவலமாக, ஒருவரையொருவர் கொன்று தின்று வாழ்கின்றார்கள். பலவான்கள் பலஹீனர்களைக் கொன்று வாழ்கின்றார்கள். இது எங்கும் நடைபெற்று வருகிறது. இதுதான் மாயை. இதற்கு நீ என்ன தீர்மானம் காண்கிறாய்? நாம் தினந்தோறும் அநேக நியாயங்களைக் கேட்டுக் கொண்டிருக்கிறோம். கடைசியில் எல்லாம் நன்மையிலிருக்குமென்று சொல்லப்படுகிறோம்.

225. நம்மில் நன்மைகளை யுண்டாக்கும்படியான சக்தி எங்கே யுள்ளதோ, அங்கே தின்மைகளை யுண்டாக்கும்படியான சக்தி மறைந்திருக்கிறது. சுகம் உண்டுபண்ணும்படியான சக்தி எங்கேனும் இருந்தால், நம்மைத் துக்கிக ளாக்கும்படியான சக்தி ஏதேனும் ஓரிடத்தில் மறைந்திருக்கிறது.

226. மரண மின்றிய ஜீவிதமும், துக்க மின்றிய சுகமும் எதிரிடைகளாம்; ஒன்றும் தனியே, காணப்பட முடியாது ஏனெனில், அவற்றில் ஒவ்வொன்றும் ஒரே வஸ்துவின் வெவ்வேறு வெளிப்பாடேயாம். நேற்று நான் எதை நன்மையென்று கருதினேனோ அதையே நான் இப்பொழுது நல்லதென்று கருதவில்லை.

227. இந்திரியங்களாம் வாய்க்கால்களின் மூலமாக வெளியே எப்பொழுதும் முயற்சித்துக்கொண்டிருக்கின்ற ஒருவகை எண்ணங்கள் நம்முடைய மனத்திலே யுண்டு; அதன் பின்னே மிகமிகச் சிறிய சப்தமொன்று உண்டு; அது மெல்லியதாயும், பலவீன மானதாயும் இருக்கலாம்; அது, 'வெளியே போகாதே' என்று கூறுகிறது. இந்தக் காட்சிகளுக்குரிய இரண்டு அழகிய சமஸ்கிருத பதங்களாவன: பிரவிருத்தியும் நிவிருத்தியுமேயாம்; முன்னே சுற்றுவதும் உள்முகமாகச் சுற்றுவதுமாம். நமது செய்கைகளைச் சாதாரணமாக ஆட்சி புரிவது முன்னே சுற்றுவதாம். மதமானது இந்த உள்முக

மாகச் சுற்றுலதிலிருந்து ஆரம்பிக்கிறது. மதமானது, இந்தச் "செய்யாதே" என்பதிலிருந்து ஆரம்பிக்கிறது. ஆத்மஞானமானது, இந்தச் "செய்யாதே" என்பதிலிருந்து ஆரம்பிக்கிறது. "செய்யாதே" என்பது அங்கு இல்லாவிட்டால், மதம் ஆரம்பிக்கிறதில்லை. இந்தச் "செய்யாதே" என்பது வந்து, மனிதர்களுடைய எண்ணங்கள் வளர்வதற்குக் காரணமாயிற்று.

228 ஒவ்வொரு சுவாசத்துடனும், ஹிருதயத்தின் ஒவ்வொரு துடிப்புடனும் நமது சலனங்களில் ஒவ்வொன்றுடனும், நாம் ஸ்வதந்திரர்களா யிருக்கிறோமென்று நினைக்கிறோம்; அதே நிமிஷத்தில் நாம் ஸ்வதந்திரர்களல்லரென்று நிரூபிக்கப்படுகிறோம். கட்டுப்பட்ட அடிமைகள், பிரகிருதியின் அடிமைகள், சரீரத்திலே - மனத்திலே - நமது நினைப்புக்களெல்லாவற்றிலும், நமது உணர்ச்சிகளெல்லாவற்றிலும் அடிமைகள், இதுதான் மாயை யென்பது.

229. தன்னுடைய குழந்தை பிறவியிலேயே மகா மேதாவி யென்றும், மிக மிக அசாதாரணமான குழந்தை யென்றும் நினைக்காத தாயே கிடையாது. அவள் தனது குழந்தையைக் கொஞ்சிக் குலாவுகிறாள்; அவளுடைய ஆத்மா முழுதும் அந்தக் குழந்தையினிடத்தே யிருக்கிறது. குழந்தை வளர்கிறான்; ஒருவேளை குடிகாரனாய், மிருகத்தன்மை யுள்ளவனாய் விடுகிறான்; தாயாரைக் கொடுமையாக நடத்துகிறான்;

அவன் எவ்வளவுக் கெவ்வளவு அவளைக் கொடுமையாக நடத்துகிறனே அவ்வளவுக் கவ்வளவு அவளுடைய அன்பும் அதிகரிக்கிறது. உலகமானது தாயானவள் பிறவி யடிமையாய்விட்டாள், அவளால் உதறி யெறிய முடியவில்லை யென்பதை மறந்து, அதைத் தாயினுடைய ஸ்வயநலமற்ற அன்பு என்று மெச்சுகின்றது. அவள் ஆயிரந்தடவை வேண்டுமானல் அந்தச் சுமையை உதறி யெறிந்துவிடுவாள்; ஆனல், அது அவளால் முடியவில்லை. ஆகையால், அவள் அதை ஒரு கொத்துப் புஷ்பங்களினல் மூடி, 'அற்புதமான அன்பு' என்று கூறுகிறள். இதுதான் மாயை.

230. ஒவ்வொன்றுக்கும் பழிக்குப் பழி வாங்குகின்ற காலனானவன் வருகின்றான்; ஒன்றும் விடப்படுகிறதில்லை. அவன் சாதுவையும் - சண்டாளனையும், அரசனையும் - குடியானவனையும், அழகியவனையும் - அவலக்ஷணமானவனையும் விழுங்கிவிடுகிறான். அவன் ஒன்றையும் விடுகிறதில்லை. ஒவ்வொன்றும் அழிவு ஆகிற அந்த ஒரே லக்ஷியத்தை நோக்கி வேகமாகச் சென்றுகொண் டிருக்கின்றது. நமது அறிவு, நமது கலைகள், நமது சாஸ்திரங்கள் ஒவ்வொன்றும் அதை நோக்கி வேகமாகச் சென்றுகொண்டிருக்கிறது. எவரும் அலையை நிறுத்த முடியாது; எவரும் ஒரு நிமிஷத்துக்கேனும் அதைப் பின்னே நிறுத்திவைக்க முடியாது. ப்லேக் வியாதியினல் பீடிக்கப்பட்ட

ஒரு நக்ரத்திலே குடித்தல், ஆடுதல், இதர வீண் முயற்சிகள் இவற்ருல் மறதியை உண்டுபண்ணிக் கொள்ள முயற்சித்தல்போல, நாம் அதை மறந்து விட முயற்சிக்கலாம். ஆகையால், நாம் மறந்துவிட முயற்சிக்கிறோம். எல்லாவித இந்திரிய சுகங்களினு லும் மறதியை உண்டுபண்ணிக்கொள்ள முயற்சிக் கிருேம். இதுதான் மாயை.

231. "இந்த என்னுடைய மாயையானது தெய் விகமானது; குணங்களினு லாக்கப்பெற்றது; கடப்ப தற்கு மிகவும் கடினமானது. ஆயினும், என்னை யடைகிறவர்கள் ஜீவித நதியைக் கடக்கிருர்கள்."

232. "பாடு படுகின்றவர்களும், பெருஞ் சுமை தாங்கி நிற்பவர்களுமான நீங்கள் எல்லாரும் என் னிடம் வாருங்கள்! நான் இளைப்பாறுதல் அளிக் கிறேன்." நம்மை முன்னே யிட்டுச்செல்லும் சப்தம் இதுதான். மனிதன் அதைக் கேட்டிருக்கிறன்; எத்தனையோ யுகங்களினூடே அதைக் கேட்டுக் கொண்டிருக்கிறன். எல்லாம் போய்விட்டது போல வும், நம்பிக்கை யற்றுவிட்டது போலவும் தோன்று கிறபொழுது, மனிதன் தன்னுடைய பலத்தின்மீது சார்ந்திருத்தல் நசுக்கப்பட்டுவிடுகிற பொழுது, எல் லாம் அவனுடைய விரல்களினிடையே உருகி நழுவி விடுகிறதாகத் தோன்றுகிறபொழுது, ஜீவிதமே நம் பிக்கை யற்ற ஒரு பாழாகக் காண்கிறபொழுது, மனி தர்களுக்கு இந்தச் சப்தம் உண்டாகிறது. அப்பொ

ழுந்து அவன் அதைக் கேட்கிறான். இதுதான் மத மேனைப்படுவது.

233. நாம் உண்மையில் விரும்புவது யாதென்னில், மூளையினுடையவும் ஹிருதயத்தினுடையவும் சேர்க்கையாம். ஹிருதயமானது உண்மையில் பெரியதே; ஜீவிதத்தின் பெரிய அருள்களெல்லாம் ஹிருதயத்தின் மூலமாகவே யுண்டாகின்றன. நான் ஹிருதயமேயில்லாமல் விரம்ப மூளைக ளுள்ளவனா யிருப்பதைப் பார்க்கிலும் மூளையே யில்லாமல் ஒரு சிறிய ஹிருதயத்தை யுடைத்தாயிருப்பதற்கு நான் நூறு மடங்கு விரும்புவேன். ஹிருதயம் உடையவனுக்கு ஜீவிதம் சாத்தியமாம்; அபிவிருத்தி சாத்தியமாம்; ஆனால், ஹிருதயமே யில்லாது மூளையை மாத்திரம் உடையவன் வரட்சியினால் மரித்துவிடுகிறான்.

அதே சமயத்தில், ஹிருதயத்தினால் மாத்திரம் கொண்டு செல்லப்படுகிறவன் அநேக கஷ்டங்களை யநுபவிக்க வேண்டியிருக்கிறதென்பதை நாம் அறிகிறோம்; ஏனெனில், அவன் அடிக்கடி குழிகளுக்குள் இடறிவிடப்பட்டவனே. ஹிருதயத்தினுடையவும் மூளையினுடையவும் சேர்க்கையே நாம் விரும்புவது. ஒருவன், மூளைக்காக ஹிருதயத்தை விட்டுக்கொடுக்கவேண்டு மென்றாவது, அல்லது ஹிருதயத்துக்காக மூளையை விட்டுக்கொடுக்கவேண்டு மென்றாவது நான் கூறவில்லை; ஆனால், ஒவ்வொருவருக்கும் அளவற்ற ஹிருதயமும் உணர்ச்சியும் இருக்

கட்டும்; அதே சமயத்தில் அளவற்ற யுக்தியும் இருக்கட்டும்.

234. மனிதனானவன் எப்பொழுதும் மனிதர்களின் மூலமாக ஈசுவரனைப் பூஜித்துக்கொண்டு வருகிறான்; அவன் மனிதனாயுள்ள வரையில் அப்படியேதான் செய்ய வேண்டும். அவன் அதற்கு விரோதமாகக் கூச்சலிடலாம்; பெரு முயற்சி செய்யலாம்; ஆனால், ஈசுவரனை யநுபவத்தி லறிய முயற்சித்தவுடனே, ஈசுவரனை மனிதனைப் போன்றே நினைக்க வேண்டுமென்று அமைப்பிலேயே யுள்ள ஆவசியகத்தை அவன் காண்பான்.

235. ஈசுவரன்மீது ஏற்படுகின்ற தாகத்துடனே, அவாவுடனே, உண்மையான பக்தி யுண்டாகிறது. அவா எவருக்கு இருக்கிறது? அதுதான் கேள்வி. மதமானது கொள்கைகளில் இல்லை; கோட்பாடுகளில் இல்லை; புத்திபூர்வ தர்க்கத்திலு மில்லை; இருத்தலும் ஆதலுமாம்; அது அநுபூதியாம்.

236. பொதுவாக மனுஷ்ய வர்க்கத்துக்குச் சில அநுஷ்டானங்களை அநுபவ சாத்திய மல்லாதவையாகச் செய்வதற்கு இரண்டு காரணங்கள் உள்ளன. ஒன்று: சாதாரண ஜனங்கள் அவற்றை யடைதற்குத் தகுந்தவர்களல்லர் என்று ஆசாரியர்கள் கருதுகிறார்கள். இதில் கொஞ்சம் உண்மை யிருக்கலாம்; ஆனால், அப்படிச் சொல்வதற்குக் கர்வமே அதிகமாகக்

காரணமா யிருக்கிறது. இரண்டாவது: தன்புறத் தப்படுவோமென்ற பயமாம். திருஷ்டாந்தமாக: இந்தத் தேசத்திலே ஒருவன் பகிரங்கமாகப் பிரார்த்தனை யாமத்தை யநுஷ்டிக்க விரும்பமாட்டான். ஏனெனில், அவன் அவ்வளவு விநோதமான மனிதனாகக் கருதப்படுவான்; இங்கே அது வழக்கமில்லை. ஆனால், இந்தியாவிலோ, ஒருவன் "இன்று எங்களுக்கு எங்களுடைய தினசரி ஆகாரத்தைக் கொடு" என்று பிரார்த்தித்தானானால், ஜனங்கள் அவனைப் பார்த்து நகைப்பார்கள். "தேவலோகத்தி லிருக்கிற எங்கள் பிதா" என்று சொல்வதினும் ஹிந்து மனத்துக்கு அதிக மூடத்தனமானது ஒன்றுமேயில்லை. ஹிந்துவானவன் உபாசிக்கிறபொழுது, ஈசுவரன் தனக்குள்ளேயே இருக்கிறாரென்று நினைக்கிறான்.

237. இந்தப் பிரபஞ்சத்திலே யுள்ளதெல்லாம் பிராணனுடைய சலனத்திலே விசிரிம்பிக்கப்பட்டிருக்கிறது. சலனத்தின் மிக மிக உயர்ந்த பலன் நினைப்பே யாகும். அதனினும் உயர்ந்ததொன்று உண்டானால், நாம் அதைப்பற்றிச் சிந்திக்க முடியாது.

238. ஜீவித மென்பது சலனமே யாகும்.

239 திருஷ்டாந்தமாக: மனிதன் யுத்தம் செய்யவும், அபாரமான சரீர முயற்சி யெடுத்துக்கொள்ளவும் முடியு மாதலாலே, மனிதன் மிகமிகச் சிறந்து விளங்குகிறான் என்று அவர்கள் நினைக்கிறார்கள்;

ஸ்திரீயினுடைய சரீர பலஹீனத்துக்கும் போர்க்குண மின்மைக்கும் விரோதமாக இது காண்பிக்கப்படுகிறது. இது அநியாயமாம். ஸ்திரீயும் புருஷன் போன்றே தைர்ய முள்ளவள்தான். ஒவ்வொருவரும் தனது வழியில் சரி சமானமாக நல்லவர்களே. ஸ்திரீயைப்போல அவ்வளவு பொறுமையுடனும், சகன சக்தியுடனும், அன்புடனும் எந்தப் புருஷனால் ஒரு குழந்தையை வளர்க்க முடியும்? மனிதன், செய்யும் சக்தியை விருத்தி பண்ணிக்கொண் டிருக்கிறான்; ஸ்திரீயோ, துன்பத்தைச் சகிக்கும் சக்தியை விருத்தி பண்ணிக்கொண்டிருக்கிறாள். ஸ்திரீ, வேலை செய்ய முடியாதானால், மனிதனும் துன்பத்தைச் சகித்திருத்தல் முடியாது.

240. நான் லண்டனில் பிரசங்கித்துக்கொண்டிருந்தபொழுது என்னுடைய நண்பர் ஒருவர், மிகுந்த புத்திசாலி, அடிக்கடி என்னுடனே தர்க்கம் செய்வார்; ஒருநாள் எனக்கு விரோதமாக அவருடைய ஆயுதங்களெல்லாவற்றையும் உபயோகித்த பின்னர், அவர் திடீரென்று, “ஆனால், உங்களுடைய ரிஷிகள் ஏன் எங்களுக்குப் போதிப்பதற்கு இங்கிலாந்துக்கு வரவில்லை?” என்று கூறினார். நான், “ஏனெனில், அவர் வருவதற்கு அப்பொழுது இங்கிலாந்து இல்லையே. அவர்கள் காடுகளுக்குப் போதிப்பதா?” என்று மறுமொழி கூறினேன்.

241. இந்தியா சரித்திரத்தின் ஒரு காலத்திலே மனிதனையும் அவனுடைய மனத்தையும் பற்றிய இவ்வொரு விஷயமானது ஜனங்களுடைய கவன மெல்லாவற்றையும் கிரகித்தது. அது மனத்துக்கு மிகவும் இரம்மியமா யிருந்தது. ஏனெனில், அவர்களுடைய நோக்கங்களை யடைதற்கு அதுவே மிக மிகச் சுலபமான வழியாகத் தோன்றிற்று. இப் பொழுது, மனமானது நியதியின் ப்ரகாரம் எதையும் செய்ய முடியுமென்று இந்திய மனத்துக்கு நன்றாக ஏற்பட்டது. மனத்தின் சக்திகள் ஆராய்ச்சிக்குப் பெருத்த விஷயமாயிற்று. மந்திர வாதங்களும், ஜாலங்களும், மற்ற சக்திகளும், அவை எல்லாம் அசாதாரணமாக ஒன்று மில்லை; ஆனல், அதற்கு முன்னே அவர்கள் ஜட சாஸ்திரங்களைப் போதித்தது போல், ஒழுங்காகப் போதிக்கப்பட்ட ஒரு சாஸ்திரமாயிற்று. ஜட சாஸ்திரங்கள் அநேகமாக மரித்து விடும்படியாக இவ் விஷயங்களில் ஒரு திட நிச்சயம் ஜாதியிலே தோன்றிவிட்டது. அவர்கள் முன்னே தோன்றிய ஒரு விஷயம் அதுதான். வெவ்வேறு வகையான யோகிகள் சகல விதமான பரிசோதனைகளையும் செய்ய ஆரம்பித்தார்கள். சிலர், ஒளியைச் சோதனை பண்ணினார்கள். வெவ்வேறு நிறங்களை யுடைய ஒளிகள் சரீரத்தில் எப்படி மாறுதல்களை யுண்டுபண்ணுகின்றன என்பதைக் கண்டுபிடிக்க முயற்சித்தார்கள். அவர்கள் ஒருவித நிறமுள்ள

உடையை உடுத்துக்கொண்டார்கள்; ஒருவித நிறத்தின் கீழ் வசித்தார்கள்; சில நிறமுள்ள ஆகாரங்களை யுண்டார்கள். சகல விதமான பரிசோதனைகளும் இம்மாதிரி செய்யப்பட்டன. பிறர், கர்துகளை யடைத்துக்கொண்டும் திறந்துகொண்டும் சப்தத்திலே சோதனை செய்தார்கள். வேறு சிலர், கந்த உணர்ச்சியைச் சோதனை செய்தார்கள்.

242. ஆசையே, விருப்பமே, துக்கம் எல்லாவற்றுக்கும் பிதா. ஆசைகள்: ஜயமும் தோல்வியுமாகிற நியதிகளால் கட்டுப்பட்டிருக்கின்றன. ஆசைகள் துக்கத்தைத்தான் தொண்டுவரவேண்டும்.

243. உண்மையான ஜய மடைதற்கு, உண்மையான ஆநந்த மடைதற்கு உள்ள பெரிய ரகஸ்யமாவது: பிரதி பலனை விரும்பாத மனிதனே, பரிபூர்ணமாய் ஸ்வயநலமற்ற மனிதனே, மிக மிக ஜயமுள்ளவனா யிருக்கிறான் என்பதேயாம்.

244. எடுத்தலுக்கும் கொடுத்தலுக்கும் நீ ஒரு யந்திரமா யிருக்கிறாய்; கொடுக்கும் பொருட்டே நீ எடுக்கிறாய். ஆகையால், பிரதி பலனாக ஒன்றையும் கேளாதே; ஆனால், நீ எவ்வளவுக் கெவ்வளவு அதிகம் கொடுக்கிறாயோ அவ்வளவுக் கவ்வளவு அதிகம் உனக்குக் கிடைக்கும். இந்த அறையிலிருந்து நீ எவ்வளவுக் கெவ்வளவு வேகமாகக் காற்றைக் காலி பண்ணுகிறாயோ, அவ்வளவுக் கவ்வளவு வேகமாக அது வெளியேயுள்ள காற்றினால் நிரப்பப்படும்.

நீ எல்லாக் கதவுகளையும் எல்லாத் துவாரங்களையும் அடைத்துவிட்டால், உள்ளே யுள்ளது அங்கேயே யிருக்கும்; ஆனால், வெளியே யுள்ளது ஒருபொழுதும் உள்ளே வராது; உள்ளே யுள்ளது நிலைதங்கிக் கெட்டு, விஷம் பெற்றதாயிவிடும். நதியானது சமுத்திரத்துக்குள்ளே இடைவிடாது விழுந்துகொண்டே யிருக்கிறது; மறுபடியும் இடைவிடாது நிரம்பிக்கொண்டே யிருக்கிறது. சமுத்திரத்துக்குள்ளே போவதைத் தடுக்காதே. நீ அப்படிச் செய்கிற நிமிஷத்திலேயே, மரணமானது உன்னைப் பிடிக்கின்றது.

245. ஏராளமாக மோசமும் இருக்கிறது என்பதில் சந்தேகமில்லை; ஆனால், நீ மோசத்தைப் பார்க்கிறபொழுதெல்லாம், மோசமும் ஏதோ ஒரு உண்மையின் போலியே யென்று நீ கூறவேண்டியிருக்கிறது. போலி செய்யப்படுதற்கு எங்கேனும் ஏதேனும் ஒரு உண்மை யிருக்கவேண்டும். நீ சூன்யத்தைப் போலி செய்ய முடியாது. போலியும் ஏதோ உண்மையான ஒன்றின் போலியா யிருக்கவேண்டும்.

246. வழக்கமாயுள்ள கொள்ளைக்காரன், திருடன், பொய்யன், அநியாயக்காரன், அக்கிரமக்காரி, இவர்கள் தங்களுக்கு அப்படியெல்லா மிருக்கப் பிரியமில்லாவிட்டாலும் இப்படி யெல்லாமாய் இருக்கிறார்கள். அது உண்மையில் ஒரு அபாரமான மனோதர்மக் கேள்வியாம். நாம் மனிதனை மிகமிக நல்ல ஒளியில் பார்க்கவேண்டும். நல்லவனா யிருப்பது

அவ்வளவு எளிதன்று. நீங்கள் ஸ்வதந்திரர்களாகும் வரையில், நீங்கள் யந்திரங்களேயல்லாமல் வேறென்ன? நீங்கள் நல்லவர்களா யிருக்கிறீர்களென்ற காரணத்தினலே கர்வ மடையவேண்டுமோ? நிச்சயமாய் இல்லை. நீங்கள் நல்லவர்களா யிருக்கிறீர்கள். ஏனெனில், நீங்கள் வேறு மாதிரி இருக்க முடியாது. இன்னொருவன் கெட்டவனா யிருக்கிறான்; ஏனெனில், அவன் வேறு மாதிரி இருக்க முடியாது. நீ அவனுடைய நிலைமையில் இருந்தால், நீ என்னவிதமா யிருந்திருப்பா யென்பதை எவர் அறிவார்? தெருவிலே யுள்ள (விபசார) ஸ்திரீ, அல்லது சிறைச்சாலையிலே யுள்ள திருடன், நீ நல்ல மனிதனா யிருக்கும் பொருட்டுப் பலியிடப்படுகின்ற கிறிஸ்துவாகும். அத்தகையதுதான் சமத்துவ நியதி. திருடர்களும், கொலைபாதகர்களும், அநியாயக்காரர்களும், மிக மிகப் பலஹீனர்களும், மிகமிகக் கொடியவர்களும், பைசாசங்களும் ஆகிய அவர்களெல்லோரும் எனது கிறிஸ்துக்களே. நான் தேவ கிறிஸ்துக்களையும், அசுர கிறிஸ்துக்களையும் பூஜிக்கக் கடமைப்பட்டவன்; அதுவே எனது கொள்கை; நான் வேறுவிதமா யிருக்க முடியாது. நல்லவர்களினுடைய, மகாத்மாக்களினுடைய பாதங்களினிடம், கொடியவர்களுடையவும் பைசாசத்தன்மையுடையவர்களுடையவும் பாதங்களினிடம் எனது நமஸ்காரம் செல்கிறது. அவர்கள் எல்லோரும் எனது ஆசார்யர்கள்; எல்லோ

ரும் எனது ஞான பிதாக்கள்; எல்லோரும் எனது இரக்ஷகர்கள். நான் ஒருவனைச் சபிக்கலாம்; ஆயினும், அவனுடைய தவறுதல்களினால் நன்மையடையலாம்; நான் இன்னொருவனுக்கு ஆசி கூறி அவனுடைய நற்செய்கைகளினால் நன்மை யடையலாம்.

247. வார்த்தையும் நினைப்பும் ஒன்றிலிருந்து ஒன்று பிடிபடாதவையாம். உங்களில் எவரேனும் அவற்றைப் பிரிக்க முடியுமாவென்று முயற்சித்துப் பாருங்கள்! நீ நினைக்கின்றபொழுதெல்லாம், நீ வார்த்தை வடிவங்களின் மூலமாகவே அப்படிச் செய்கிறாய். ஒன்று மற்றதைக் கொண்டுவருகிறது; நினைப்பு வார்த்தையைக் கொண்டுவருகிறது; வார்த்தை நினைப்பைக் கொண்டுவருகிறது.

248. முற்காலத்தையும் பிற்காலத்தையும் மறக்கிறவன், இப்படி மறந்துவிட்டுத் தற்காலத்துடன் ஒட்டிக்கொள்ள விரும்புகிறவன் ஒரு வைத்தியக்காரனே யாவன். ஒருவன், தகப்பனையும் தாயையும் மறந்துவிட்டுக், குழந்தை யுண்டென்று வற்புறுத்துவதுபோலாம். இதுவும் தர்க்க நியாயத்துக்குப் பொருந்தியதே. முற்காலத்தையும் பிற்காலத்தையும் மறுப்பதற்குத் தற்காலமும் நிச்சயமாக மறக்கப்படவேண்டும். இது ஒரு நிலைமை; புரட்சிக்காரர்களின் நிலைமை. ஒரு நிமிஷத்துக்கேனும் உண்மையில் புரட்சிக்காரனாகக்கூடிய ஒரு மனிதனை நான் ஒருபொழுதும் பார்த்ததே யில்லை. பேசுவது மிகவும் சுலபமாம்.

பின்னர், மற்ற நிலைமை யுள்ளது—நியாயத் தேடுவது; உண்மையை நாடுவது; என்றும் மாறிக் கொண்டும் க்ஷணபங்குரமாயுள்ள இந்த உலகத்தின் மத்தியில் உண்மை யுள்ளது எதுவோ அதைக் கண்டு பிடிப்பது. ஜட அணுக்களின் ஒரு குவியலாகிய இந் தச் சரீரத்தில், உண்மையா யுள்ளது ஏதேனும் உண்டா? மனுஷ்ய மனத்தைப்பற்றிய சரித்திரம் முழுதிலும் இதுவே நாட்டமா யிருந்திருக்கிறது.

249. ஒருவன், உண்மையை அறிந்துகொள்ளா மல், உலகத்து மூட டாம்பீகங்களினுள்ளே தலை கீழாக அமிழ்வானானால், அவன், தனது அடியை இழந்தவனாகிறான்; அவன் லக்ஷியத்தை யடைய முடியாது. ஒருவன், உலகத்தைச் சபித்துவிட்டுக் காட்டினுள்ளே சென்று, தன்னுடைய சதையை வருத்திப் பட்டினி கிடந்து, கொஞ்சம் கொஞ்ச மாகத் தன்னைக் கொன்றுகொள்வானானால், தனது ஹிருதயத்தை ஒரு வரண்ட பாழாக்கி, எல்லா உணர்ச்சியையும் கொன்றுவிட்டு, கடூரனாகவும், முரட னாகவும் உலர்ந்துபோனவனாகவும் ஆய்விட்டால், அவனும் வழி தவறிவிட்டான். இவை இரண்டு முனைகளாம்; இருபக்கத்திலு முள்ள இரண்டு தப்பி தங்கள். இருவரும் வழியை இழந்துவிட்டார்கள்: இருவரும் லக்ஷியத்தைத் தவற விட்டுவிட்டார்கள்.

250. எனது குழந்தைப் பூருவத்திலிருந்து, நான், கடவுள் எங்கும் எல்லாவற்றிலும் யிருப்பனைக்

காணவேண்டு 'மென்றும், அப்பொழுது நான் உலகை உண்மையில் போகிக்க முடியுமென்றும் கேள்விப்பட்டிருக்கிறேன் ஆனால், நான் உலகுடன் கலந்து, அதிலிருந்து சில அடிகள் பெற்றவுடனே, அந்த எண்ணம் மறைந்துவிடுகிறது. ஒவ்வொரு மனிதனிடத்தும் கடவுள் இருக்கிறாரென்று நினைத்துக்கொண்டு நான் தெருவில் நடக்கிறேன். பலமுள்ள மனிதன் ஒருவன் அருகே வந்து என்னைப் பலமாகத் தள்ளிவிடுகிறான். நான் ஒற்றையடிப் பாதையில் தரைமட்டமாய் விழுந்துவிடுகிறேன். நான் கையை மடக்கிக்கொண்டு வேகமாக எழுந்திருக்கிறேன். இரத்தமானது எனது தலைக்கு ஓடிவிட்டது; பிரதிபலனம் உண்டாகிறது. உடனே நான் பைத்தியம் பிடித்தவனாய்விட்டேன். எல்லாம் மறந்துவிடப்படுகின்றன. ஈஸ்வரனைப் பார்ப்பதற்குப் பதிலாக நான் பைசாசத்தைப் பார்க்கிறேன்.

251. நம்மில் தூண்டும் சக்தியா யுள்ளது நினைப்பே யாகும். மிக மிக உயர்ந்த எண்ணங்களால் மனத்தை நிரப்பிக்கொள்! தினந்தோறும் அவற்றைச் சிரவணம் செய்! மாதந்தோறும் அவற்றைப் பற்றி மனனம் செய்! தவறுதல்களைப்பற்றி யொரு பொழுதும் கவனியாதே! அவை மிகவும் இயற்கையே; அவைதாம், இந்தத் தவறுதல்கள்தாம் வாழ்க்கையின் அழகு. அவையின்றி வாழ்க்கை என்னவாயிருக்கும்? அரும்பாடு பட்டு அவற்றை அடையா

விட்டால், அவை அடைவதற்கு யோக்கியமானவை யேயல்ல. ஜீவிதத்தின் காவியம் எங்கே யிருக்கும்? கடின முயற்சிகளைப்பற்றி யொருபொழுதும் லக்ஷியம் செய்யாதே! தப்பிதங்களை லக்ஷியம் செய்யாதே! பசு பொய் சொன்னதை நான் ஒருபொழுதும் கேட்டதில்லை; ஆனல், அது, ஒரு பசுதான், ஒருபொழுதும் மனிதனன்று. ஆகையால், இந்தத் தவறுதல்களை, இச் சிறிய தப்புக்களை யொருபொழுதும் இலக்ஷியம் செய்யாதே! இலக்ஷியத்தை ஓராயிரம் தடவை பிடித்துக்கொள்ளுங்கள்! நீங்கள் ஆயிரம் தடவை தவறினல், இன்னொரு முறை முயற்சி செய்யுங்கள்! மனுஷ்யனுடைய லக்ஷியமாவது ஒவ்வொன்றிலும் கடவுளைப் பார்ப்பதேயாம். ஆனல், நீங்கள் அவரை யொவ்வொன்றிலும் பார்க்க முடியாவிட்டால், ஒரு வஸ்துவில், நீங்கள் மிக மிக இஷ்டப்படுகின்ற வஸ்துவில், அவரைப் பாருங்கள்! பின்னர் அவரை இன்னொன்றில் பாருங்கள்! இப்படியே மேன்மேலும் நீங்கள் போகலாம். ஆத்மாவின் முன்னே அகண்ட வாழ்க்கை யுள்ளது. உங்கட்கு வேண்டும் காலத்தை நீங்கள் எடுத்துக்கொள்ளுங்கள்! நீங்கள் உங்கள் நோக்கத்தை யடைவீர்கள்.

252. எல்லா ஜீவிதமும், பிரபஞ்சம் முழுதும் இந்த ஆத்மாவில் பார்க்கப்படுகிறபொழுது, அப்பொழுதுதான் மனிதன் இரகஸ்யத்தை யடைந்தவனாகிறான்.

253. அஞ்ஞானமே துக்க மெல்லாவற்றுக்கும் பெருங் காரணம்; மூல அஞ்ஞானமாவது, அகண்ட வஸ்து அழுது கத்துகிறதென்று, தான் முடிவையுடைய வஸ்துவென்று நினைத்துக்கொள்ளுதலாம். அமிருதத் தன்மையையுடைய, என்றும் பரிசுத்தமாகிய நாம், பரிபூரண ஆத்மாவாகிய நாம், சிறிய மனங்களேயென்று, சிறிய சரீரங்களே யென்று நினைக்கிறோமென்ற இதுதான் அஞ்ஞான மெல்லாவற்றுக்கும் அஸ்திவாரம். அது ஸ்வயநல மெல்லாவற்றுக்கும் தாய். நான் ஒரு சிறிய சரீரமே யென்று நான் நினைக்கிறவுடனே, நான் அதைக் காப்பாற்றுவதற்குப் பிற சரீரங்களை வருத்தியாவது, அதை ரக்ஷிப்பதற்கு-அதை நேர்த்தியாக வைத்துக்கொள்வதற்கு நான் விரும்புகிறேன்; அப்பொழுது நீயும் நானும் வெவ்வேறாய்விடுகிறோம். இந்த வேற்றுமை எண்ணமானது உண்டானவுடனே, அது எல்லாத் தீமைகட்கும் கதவைத் திறந்து விட்டு, எல்லாத் துன்பத்துக்கும் இட்டுச் செல்கிறது.

254. சத்தியமானது பூர்விக அல்லது தற்காலத்திய எந்தச் சமுதாயத்துக்கும் வணங்குகிறதில்லை. ஜன சமுதாயமானது சத்தியத்துக்கு வணங்க வேண்டும், அல்லது மரிக்கவேண்டும்.

255. ஜன சமுதாயங்கள் சத்தியத்தின்மீது கட்டப்படவேண்டும்; சத்தியமானது சமுதாயத்துடன் தன்னைத்தானே பொருத்திக்கொள்ள முடியாது.

ஸ்வயநல் மற்ற தன்மைபோன்ற சிறந்த உண்மையானது சமுதாயத்திலே அநுஷ்டிக்கப்பட முடியாவிட்டால், மனிதன், சமுதாயத்தை விட்டுவிட்டுக் காட்டுக்குள் சென்றுவிடுவது மேல். அவன்தான் துணிவு உள்ளவன். தைர்யத்தில் இரண்டு விதங்கள் உண்டு. ஒன்று: பீரங்கியை எதிர்த்து நிற்கும் தைர்யம். மற்றது: ஆத்மீக நிச்சயத்தைப்பற்றிய தைர்யம். இந்தியாவைப் படையெடுத்த ஒரு சக்கரவர்த்தி, அங்குச் சென்று அங்குள்ள மகரிஷிகளில் சிலரைப் பார்த்துவரும்படி தனது ஆசாரியரால் சொல்லி யனுப்பப்பட்டான். ஒருவரைக் காண வேண்டுமென்று நெடுநாட்கள் அலைந்து, அவன் கிழவரொருவரை ஒரு பாறையின்மீது உட்கார்ந்திருக்கக் கண்டான். சக்கரவர்த்தி அவருடனே கொஞ்சம் பேசிப் பார்த்தபொழுது, அவருக்கிருந்த ஞானத்தைக் கண்டு மிகவும் ஆச்சர்யமடைந்தான். அவன், அந்த மகாத்மாவைத் தன்னுடனே தன்னுடைய தேசத்துக்கு வரும்படி கேட்டான். மகாத்மா, "இல்லை; நான் இங்கு என்னுடைய காட்டில் திருப்தியடைந்திருக்கிறேன்" என்றார். சக்கரவர்த்தி "நான் உங்களுக்குப் பணம், அந்தஸ்து, ஐசுவர்யம் ஆகிய இவற்றைக் கொடுக்கிறேன்; நான் உலகின் சக்கரவர்த்தி" என்றான். அப்புருஷர், "இல்லை; அந்த விஷயங்களைப் பற்றி எனக்கு லக்ஷியமில்லை" என்றார். சக்கரவர்த்தி, "நீங்கள் வராவிட்டால், நான் உங்

களைக் கொன்றுவிடுவேன்" என்றான். அந்த மகா புருஷர் குளிர்ந்த முகத்துடனே சிரித்துக்கொண்டு, "ஏ சக்கரவர்த்தி! நீ மிகமிக மூடத்தனமான விஷயத்தைச் சொல்லிவிட்டாய்; உன்னால் என்னைக் கொல்ல முடியாது; என்னைச் சூர்யனால் உலர்த்த முடியாது; கத்தியினால் என்னைக் கொல்ல முடியாது. ஏனெனில், நான் பிறப்பற்றவன்; இறப்பற்றவன்; என்றும் உள்ளவன்; சர்வ சக்தி வாய்ந்தவன்; சர்வ வியாபக ஆத்மா" என்று கூறினார். இதுதான் ஆத்மிக தைர்யம். மற்றதோ ஒரு சிம்ஹத்தினுடைய, அல்லது ஒரு புலியினுடைய தைர்யம். 1857-ம் வருஷத்தில் நடந்த சிப்பாய்க் கலகத்தின்போது, ஒரு ஸ்வாமிகள் - ஒரு மகாத்மா இருந்தார். ஒரு முகம்மதியக் கலகக்காரன் அவரைக் கடுமையாகக் குத்திவிட்டான். ஹிந்து கலகக்காரர்கள் அவனைப் பிடித்து அந்த ஸ்வாமிகளிடம் கொண்டுவந்து, அவனைக் கொன்றுவிடுவதாகக் கூறினார்கள். ஆனால், ஸ்வாமிகள் அமைதியாக நிமிர்ந்து பார்த்து, "எனது சகோதர! 'நீயே அவன், நீயே அவன்' என்று கூறி மரித்துவிட்டார். இது இன்னொரு திருஷ்டாந்தம். நீங்கள் சத்தியத்தை உங்கள் ஜன சமுதாயத்திலே ஸ்திரப்படுத்த முடியாவிட்டால், மிக மிக உயர்ந்த உண்மை தங்கும்படியான ஒரு சமுதாயத்தை நீங்கள் கட்ட முடியாவிட்டால், உங்களுடைய சபையின் பலத்தைப்பற்றி, உங்களுடைய மேனாட்டு ஸ்தாப

னங்களின் மேன்மையைப்பற்றிப் பேசுவதில் யாது பயன்? இந்தத் தைர்யம் அனுபவத்தில் முடியாதது" என்று நீங்கள் எழுந்து நின்று சொல்வதானால் உங்களுடைய பெருமையையும் மேன்மையையும் பற்றி இந்தத் தற்புகழ்ச்சியினால் யாது பயன்? பவுன், ஷில்லிங்கு, பென்னைவிட வேறொன்றும் அநுபவ சாத்திய மில்லையா? அப்படியாயின், உங்களுடைய சமுதாயத்தைப்பற்றித் தற்புகழ்ச்சி செய்துகொள்கிறீர்கள்? எந்தச் சமுதாயத்திலே மிக மிக உயர்ந்த உண்மைகள் அநுபவ சாத்திய மாகின்றனவோ, அந்தச் சமுதாயமே மிக மிகப் பெரியது.

256. காலமானது மனத்துடன் ஆரம்பிக்கிறது; இடமும் மனத்திலே யுள்ளது. காரணத்துவம் காலமில்லாமல் இருக்க முடியாது. அடுத்தடுத்து வருவது என்னும் கருத்து இல்லையேல், காரணத்துவத்தைப்பற்றிய சிந்தனையே ஏற்பட முடியாது. ஆகையால், காலமும் - தேசமும் - காரணத்துவமும் மனத்திலே யுள்ளன; இந்த ஆத்மாவானது மனத்துக்கு அப்பாலுள்ளதாயும், உருவ மற்றதாயும் இருக்கிறதினாலே அது காலத்துக்கு அப்பாலாயும், தேசத்துக்கு அப்பாலாயும், காரணத்துவத்தைக் கடந்ததாயும் இருக்க வேண்டும். இப்பொழுது, அது காலத்துக்கும் - தேசத்துக்கும் - காரணத்துவத்துக்கும் அப்பாலுள்ளதானால், அது அகண்டமா யிருக்க வேண்டும்.

257. போதி மனிதன், பிரதிபலனம், கர்ம நிதேச காரணத்துவத்தினால் எல்லைக்கு உட்படுத்தப்பட்டிருக்கிறது; ஆகையால், கட்டுப்பட் டிருக்கிறது. அல்லது, நமது தத்வஞானிகளில் சிலருடைய பாஷைகளிலே சொன்னால் அவர் கட்டுப்பட்டவராகத் தோன்றுகிறார். ஆனால், உண்மையில் அப்படிக் கட்டுப்பட்டவர் அல்லர். இதுதான் - இந்த ஸர்வ வ்யாபகத்வந்தான் - இந்த ஆத்மீக லக்ஷணந்தான் - இந்த அகண்டத்தன்மைதான் - நமது ஆத்மாக்களில் உண்மையாயுள்ளது. ஒவ்வொரு ஆத்மாவும் அகண்டமானதே; ஆகையால், பிறப்பு இறப்பைப்பற்றிய கேள்வியே கிடையாது. சில குழந்தைகள் பரீக்ஷிக்கப்பட்டார்கள். பரீக்ஷகர் மிகவும் கடினமான கேள்விகளைக் கேட்டார். அவற்றுள், "பூமி ஏன் விழுந்துவிடுகிறதில்லை?" என்பது இக் கேள்வியும் ஒன்று. அவர், ஆகர்ஷண சக்தியைப்பற்றிய மறுமொழி அடைய விரும்பினார். குழந்தைகளில் பெரும்பான்மையோருக்கும் பதில் கூறவேமுடியவில்லை; ஒரு சிலர், "அது ஆகர்ஷண சக்தி, அல்லது ஏதோ ஒன்று" என்று மறுமொழி அளித்தார்கள். புத்திசாலியான ஒரு சிறிய பெண், "அது எங்கே விழவேண்டும்?" என்று இன்னொரு கேள்வி போட்டு மறுமொழி கூறினாள். கேள்வியே மூடத்தனமானது. பூமி எங்கே விழவேண்டும்? பூமிக்கு எழுச்சியுமில்லை; வீழ்ச்சியுமில்லை. அகண்ட தேசத்திலே மேலுமில்லை, கீழ

மில்லை; அது அன்னியோன்ய சம்பந்தத்திலேயே உள்ளது. அகண்டத் தன்மைக்குப் போதல் எங்கே? வருதல் எங்கே?

258. மாறுதல் எல்லைக்கு உள்பட்ட வஸ்துக்களிலேயே உண்டாகக் கூடும். 'அகண்ட வஸ்துவானது எவ்விதத்திலும் மாறுகின்றது' என்று சொல்லுவது மூடத்தனமாம். அப்படி அது மாற முடியாது. நீ சலிக்க முடியும், நான் சலிக்க முடியும், நீயும் நானும் எல்லைக் குள்பட்ட சரீரங்களா யிருத்தலினால், இந்தப் பிரபஞ்சத்திலே யுள்ள ஒவ்வொரு அணுவும் இடைவிடாது மாறும் தன்மையி லிருக்கிறது. ஆனால், பிரபஞ்சத்தை ஒன்றாக எடுத்துக் கொள்வோமானால், ஒரே முழுவதுமாக எடுத்துச் கொள்வோமானால், அது சலிக்க முடியாது. அது மாறுதல் அடைய முடியாது.

259. ஸன்மார்க்க சாஸ்திரமானது நிற்பதற்கு ஆதாரமா யுள்ளது தியாகமேயாம். தியாகத்தை ஆதாரமாகக் கொள்ளாமல் ஸன்மார்க்க நியதி ஒன்றும் இதுவரையில் போதிக்கப்பட்டதே இல்லை.

260. ஸன்மார்க்க சாஸ்திரமானது எப்பொழுதும் "நான் அல்ல; ஆனால் நீயே" என்று கூறுகிறது. அதன் கொள்கை யாதெனில், "அகம்பாவ மல்ல; ஆனால், அகமாய் அல்லாததே; மனிதன் அந்த அகண்ட சக்தியை, அல்லது அந்த அகண்ட ஆனந்தத்தைப் புலன்களின் மூலமாக அடைய முயற்சிக்

கிறபொழுது மனிதன் பற்றிக்கொள்ளுகின்ற வீண் அகம்பாவ எண்ணங்க ளெல்லாம் விட்டுவிடப்பட வேண்டும்" என்று ஸன்மார்க்க சாஸ்திரமானது கூறுகின்றது. நீ உன்னைக் கடைசியாகவும், பிறரை உனக்கு முன்னும் வைத்துக்கொள்ள வேண்டியிருக் கிறது. புலன்கள் முதலில் "நான்" என்று கூறு கின்றன. ஸன்மார்க்க சாஸ்திரமானது "நான் என் னைக் கடைசியாக வைத்துக்கொள்ள வேண்டும்" என்று கூறுகிறது.

இவ்விதமாக ஸன்மார்க்கத்தைப்பற்றிய நியதிக ளெல்லாம், இந்தத் தியாகத்தையே அஸ்திவாரமாகக் கொண்டுள்ளன. ஜட மண்டலத்திலே அகம்பாவ த்தை அழித்தலையே, உண்டுபண்ணுதலை அன்று, அஸ்திவாரமாகக் கொண்டுள்ளது. அந்த அகண்ட வஸ்துவானது ஜடமண்டலத்திலே ஒருபொழுதும் வெளிப்பாட்டை அடைய முடியாது; அது சாத் தியமும் அல்ல; அது நினைக்கவும் முடியாதது.

261. அடிக்கடி எல்லாச் சடங்குகளுக்கும் அறிகுறிகளுக்கும் விரோதமாயிருந்த சீர்திருத்தக் காரர்கள் ஒவ்வொரு மதத்திலும் இருந்திருக்கிறார் கள். ஆனால், அவர்களுடைய எதிர்ப்பு வீணாகத்தான் இருந்திருக்கிறது. ஏனெனில், மனிதன் இப்பொழு துள்ளபடி இருக்கும் வரையில் பெரும்பான்மையோ ரும், தாங்கள் பற்றிக்கொள்வதற்குக் கெட்டியான தொன்றைத், தங்களுடைய எண்ணங்களைச் சுற்றி

வைப்பதற்கு ஏதேனும் ஒன்றைத் தங்கள் மனத்தில் உள்ள நினைப்பு வடிவங்கள் எல்லாவற்றிற்கும் மத்திய மாகும்படியான ஒன்றை எப்பொழுதும் விரும்பு வார்கள். மகம்மதியர்களினுடையவும், புரோடெஸ் டாண்டு கிறிஸ்துவர்களினுடையவும் மகத்தான முயற்சிகள், 'சடங்குகள் எல்லாவற்றையும் ஒழித்து விடுதல்' என்ற இந்த ஒரே நோக்கத்தின்மீது செலுத் தப்பட் டிருக்கின்றன. ஆயினும், அவர்களிடத்தில் கூட சடங்குகள் நுழைந்துவிட்டன என்பதை நாம் காண்கிறோம்.

262. எல்லா மனங்களும் ஒன்றேயாம்; ஒரே மனத்தின் வெவ்வேறு பாகங்களேயாம். ஒரு களி மண் கட்டியை அறிகிறவன் பிரபஞ்சத்திலுள்ள எல்லாக் களிமண்ணையும் அறிந்துவிடுகிறான். எவ னொருவன் தன்னுடைய சொந்த மனத்தை அறிந்து அடக்கியாள்கிறானோ அவன் ஒவ்வொரு மனத்தி னுடையவும் இரகஸ்யத்தை அறிந்துகொள்வது மன்றி யில், ஒவ்வொரு மனத்தின்மீதும் சக்தி யுடையவ னாகிறான்.

263. ஒருவர் வருகிறார். அவர் மிகவும் பெரிய வித்வான் என்று உனக்குத் தெரியும்; அவருடைய பாஷை அழகியதா யிருக்கிறது. அவர் உன்னிடம் ஒரு மணி நேரம் பேசுகிறார்..............ஆனால், அவ ருடைய பேச்சுக்கள் உன்னுடைய மனத்திலே எவ் விதத்திலும் பதிகிறதில்லை.

இன்னொருவர் வருகிறார்; அவர் ஒருசில வார்த்தைகளையே பேசுகிறார்; அவ்வார்த்தைகள் ஒழுங்காய் அமைக்கப்படுகிறதில்லை; ஒருவேளை இலக்கணத் தவறுமிருக்கலாம். ஆயினும், அவருடைய வார்த்தைகள் உனது மனத்திலே ஆழ்ந்து பதிந்துவிடுகின்றன. உங்களில் அனேகர் அதைப் பார்த்திருக்கிறீர்கள். ஆகையால், வார்த்தைகள் மாத்திரம் ஆழ்ந்த பதிப்பை எப்பொழுதும் உண்டாக்க முடியாது என்பது விளங்குகின்றது. வார்த்தைகள், நினைப்புக்கள் கூடப் பதிப்பை உண்டாக்குவதிலே மூன்றில் ஒரு பங்குதான் செல்வாக்கு உள்ளன; மனிதன் மூன்றில் இரண்டு பங்கு. மனிதனுடைய ஸ்வதாந்த சக்தி என்று நீங்கள் எதைக் கூறுகின்றீர்களோ அதுதான் வெளியே சென்று உங்களிடம் ஆழ்ந்த பதிப்பை உண்டாக்குகின்றது.

264. கல்வி எல்லாவற்றினுடையவும், பயிற்சி எல்லாவற்றினுடையவும் லக்ஷியமாவது இந்த மனுஷிய—சிருஷ்டியாயிருக்க வேண்டும். ஆனால், அப்படிச் செய்வதற்குப் பதிலாக நாம், வெளிப்புறத்தை நேர்த்தி செய்ய எப்பொழுதும் முயற்சிக்கிறோம். உள்புறம் இல்லாதபொழுது வெளிப்புறத்தை நேர்த்தி செய்து யாது பலன்? பயிற்சி எல்லாவற்றினுடைய நோக்கமும் உத்தேசமும் மனிதனை வளரச்செய்வதேயாம். பிறர்மீது செல்வாக்குச் செலுத்துகின்ற மனிதன், தனது ஸகோதர ராசிகளிடத்துத் தனது

சமர்த்தைக் காட்டி அவர்களைத் தனது இஷ்டம் போல் நடக்கச் செய்யும் வல்லமையுள்ள மனிதன் அபார சக்தியுடையவனாகிறான்; அந்த மனிதன் தயாராகும்பொழுது அவனால் அவனிஷ்டப்படுகின்ற எல்லாவற்றையும் செய்ய முடியும்.

265. சக்தி யென்றால் என்ன? ஜடத்தைச் சலிப்பிப்பது. ஜடம் என்பது என்ன? சக்தியினால் சலிப்பிக்கப்படுவது.

266. சம்ஸ்கிருத பழமொழி யொன்று கூறுகிறபடி "அது தலை யில்லாததொரு தலை வலியாம்." இந்த அவஸ்தையே மாயை யெனப்படும். அதற்கு உண்மையும் இல்லை, இன்மையும் இல்லை. அதை நீ உண்மையென்று கூற முடியாது. ஏனெனில், எது காலத்தையும் தேசத்தையும் கடந்து உள்ளதோ, எது சத்தாமாத்திரமா யுள்ளதோ, அது ஒன்றே தான் உள்ளது. ஆயினும், இவ் வுலகமானது நமது உண்மைத் தன்மை எண்ணத்தைத் திருப்தி செய்கிறது. ஆகையால், அதற்கு ஒரு போலி உண்மையுண்டு.

267. சுகமான, நேர்த்தியான வாழ்க்கை வாழ்ந்துகொண்டே ஆத்மாவை அநுபூதியில் அறிய விரும்புகிறவன், நதியைக் கடக்க விரும்பி ஒரு முதலையைக் கட்டை யென்று கருதி அதைக் கட்டிப் பிடித்துக் கொண்ட மூடன்போன்றவனாவன். "முதலில், தேவ ராஜ்யத்தை யடையுங்கள்! உங்களுக்கு எல்லாம்

சேர்க்கப்படும்." இது ஒன்றே மகத்தான தர்மம்; இதுதான் தியாகம். ஒரு லக்ஷியத்துக்காக வாழ்வாய்; வேறொன்றுக்கும் மனத்திலே இடங் கொடாதே. ஒருபொழுதும் தவறாதது எதுவோ அந்த ஆத்மிக பரிபூர்ணத் தன்மையை அடைவதற்கு நாம் நமது சக்திக ளெல்லாவற்றையும் ஒன்று சேர்ப்போம். ஸ்வாநுபூதி யடையவேண்டுமென்று நமக்கு உண்மையான ஆசை யிருந்தால், நாம் கஷ்டப்பட வேண்டும். கடின முயற்சியின் மூலமாக வளர்ச்சியுண்டாகும். நாம் தப்பிதங்கள் செய்வோம்; ஆனால், அவைகள் நமக்குத் தெரியாமலே தேவதூதர்களாயிருக்கலாம்.

268. ஒரு சமயத்திலே, இந்தியாவில் வெவ்வேறு வகுப்பினரின் பிரதிநிதிகள் ஒன்று சேர்ந்து, தர்க்கிக்க ஆரம்பித்தார்கள். 'சிவன் ஒருவரே கடவுள்' என்று ஒருவர் கூறினர். 'விஷ்ணு ஒருவரே கடவுள்' என்று இன்னொருவர் கூறினர். இப்படியே மேன்மேலும் கூறிக்கொண்டே போனார்கள். அவர்களுடைய விவாதத்துக்கு முடிவே யில்லாமலிருந்தது. அவ்வழியே ஒரு மகாத்மா சென்றுகொண்டிருந்தார். தர்க்கித்துக்கொண்டிருந்தவர்கள் அந்த விஷயத்தைத் தீர்மானிக்கும் பொருட்டு அவரை யழைத்தார்கள். அவர், சிவனே மிக மிக சிரேஷ்டமான கடவுளென்று சொல்லிக்கொண்டிருந்த மனிதனைப் பார்த்து, "நீ சிவனைப் பார்த்திருக்கிறாயா? அவருடன் உனக்குப்

பழக்க முண்டா? இல்லையேல், அவர்தாம் மிகமிகச் சிரேஷ்டமான கடவுள் என்று உனக்கு எப்படித் தெரியும்?" என்று கேட்டார். பின்னர் அவர் விஷ்ணு உபாசகனை நோக்கி, "நீ விஷ்ணுவைப் பார்த்திருக்கிறாயா?" என்று கேட்டார். அவர்களெல்லோரையும் இக் கேள்வியைக் கேட்டுவிட்ட பின்னர், அவர்களில், 'எவருக்கும் கடவுளைப்பற்றி ஒன்றுமே தெரியாது' என்று கண்டுகொண்டார். ஆகையினால்தான் அவர்கள் அவ்வளவு தர்க்கித்துக் கொண்டிருந்தார்கள். ஏனெனில், அவர்கள் உண்மையில் அறிந்திருந்தார்களானால், அவர்கள் விவாதித்தே இருக்கமாட்டார்கள். ஒரு குடமானது தண்ணீரினால் நிரப்பப்படுகிறபொழுது அது சப்தமிடுகிறது; ஆனால், அது நிரம்பிவிட்டால் பின்னர் சப்தமில்லை.

269. 'கடவுளை எவர் விரும்புகிறார்?' அதுதான் கேள்வி. 'உலகிலுள்ள இந்த ஜனக்கூட்ட மெல்லாம் கடவுளை விரும்புகிறார்கள் என்றும், ஆனால், அவரை யடைய முடியவில்லை என்றும் நினைக்கிறாயா? அப்படி யிருக்க முடியாது. நாம் விரும்புவது யாதெனில், வெளியே வஸ்துவை யுடைத்தாயிராத அதுதான். மனிதர் சுவாசிக்க விரும்புகின்றனர்; ஸ்வாசிப்பதற்கு அவர்களுக்குக் காற்று இருக்கிறது. மனிதன் உண்ண விரும்புகிறான்; உண்பதற்கு ஆகாரம் இருக்கிறது. இந்த ஆசைகளை யுண்டுபண்ணுவது யாது? வெளியே வஸ்துக்கள் இருந்தலேயாம்;

கண்களை உண்டு பண்ணியது வெளிச்சமேயாம்; காது களை உண்டுபண்ணியது சப்தமேயாம். ஆகையால், மனுஷ்ய ஜாதிகளிடத்துள்ள ஒவ்வொரு ஆசையும் முன்னமேயே வெளியே யுள்ள ஏதோ ஒன்றினால் ஆக்கப்பட்டிருக்கிறது. பரிபூர்ணத் தன்மையை அடையவேண்டுமென்ற இந்த இச்சை, லக்ஷியத்தை யடைவதற்குள்ள இந்த இச்சை, பிரகிருதிக்கு அப் பால் செல்லவேண்டுமென்ற இந்த இச்சை, ஏதோ ஒன்று அதை உண்டுபண்ணி மனிதனுக்குள்ளே அதைப் புகுத்தி அங்கே அதை யிருக்கும்படிச் செய் தாலொழிய, அது அங்கே எப்படி யிருக்கக்கூடும்? ஆகையால், எவனிடத்தில் இந்த இச்சை யுண்டா கின்றதோ அவன் லக்ஷியத்தை யடைவான்.

270. எல்லாப் பாபங்களிலும் எல்லாப் புண் ணியச் செய்கைகளிலும் போலவே, அந்த நித்திய மான அன்பு நிற்கிறது. நியூயார்க் நகரத்து ஏழை களுக்காக ஒருவன் ஆயிரம் டாலர்களுக்கு ஒரு நாண யச் சீட்டு எழுதிக் கொடுக்கிறானென்று வைத்துக் கொள்வோம். அதே சமயத்தில் அதே அறையில் இன்னொருவன் ஒரு நண்பனுடைய பெயரைப் பொய்க் கையெழுத்திடுகிறான். அவர்கள் இருவரும் எழுதுவதற்கு உதவியாயிருக்கும் வெளிச்சம் ஒன்றே; ஆனால், ஒவ்வொருவனும் அவன் உபயோகப்படுத்து கின்ற மாதிரிக்கு உத்தரவாதியாவன். புகழப்பட வேண்டியதும், இகழப்படவேண்டியதும் வெளிச்ச

மன்று. பற்றற்றதாய், ஆனல், ஒவ்வொன்றிலும் பிரகாசிப்பதாய்ப் பிரபஞ்சத்தின் உத்தேச சக்தியாகிற அன்பு இருக்கிறது; அஃதில்லையேல், பிரபஞ்சமானது ஒரு விநாடி நேரத்தில் தூள்தூளாய்விடும்; இந்த அன்பே கடவுள் ஆம்.

271. எபிரேய ராஜரிஷி இவ்விதமாகப் பாடினர். இந்தியா தேசத்தவர்கள் இவ்விதமாகப் பாடினர்கள். "ஏ, அன்புக்கு உரியவனே! உன் உதடுகளின் ஒரு முத்தம்! உன்னல் முத்தமிடப்பெற்றால், உன்மீதுள்ள தாகம் என்றும் அதிகரிக்கிறது; துக்கங்களெல்லாம் நீங்குகின்றன; மனிதன், முற்காலை தற்கால் பிற்காலங்களை மறந்துவிடுகிறான்; உன்னைப்பற்றியே நினைக்கிறான்." அதுதான் காதலனுடைய பைத்தியம்; அப்பொழுது இச்சைகளெல்லாம் மறைந்துவிடுகின்றன. "எவர் மோக்ஷத்தை லக்ஷியம் செய்கின்றனர்? இரக்ஷிக்கப்பட வேண்டுமென்று எவர் கவலை கொள்கின்றனர்? பரிபூர்ணமாயிருப்பதற்குக்கூட எவர் கவலை கொள்கின்றனர்? எவர் முக்தியை லக்ஷியம் செய்கின்றனர்?" என்று காதலன் கூறுகிறான்.

272. அன்பின் வெகுமதி அன்பேயாம்; எத்தகைய வெகுமதி அது! எல்லாத் துக்கங்களையும் எடுத்துவிடுகின்ற ஒரே விஷயம். எந்த ஒரே கோப்பையைக் குடித்தால் இந்த உலகத்து வியாதி மறைந்துவிடுமோ அந்த ஒரே கோப்பை அதுதான்.

மனிதன் ஈசுவரம்பித்துப் பிடித்தவனாகிறான்; தான் மனிதனென்பதை மறந்துவிடுகிறான்.

273. 'பௌத்தர்கள் ஏதேனும் ஒரு கடவுளிடத்தில் அல்லது ஆத்மாவிடத்தில் நம்பிக்கை வைக்காவிட்டால், அவர்களுடைய மதமானது இந்த இந்திரியாதீத வாழ்க்கை ஸ்திதியிலிருந்து எப்படி உண்டாயிருக்கக் கூடும்?' என்று கேட்கப்படலாம். இதற்கு மறுமொழியாவது:— பௌத்தர்களும் ஒரு நித்திய சன்மார்க்க நியதியைக் காண்கின்றார்கள். அந்தச் சன்மார்க்க நியதியானது அந்தப் பதத்துக்கு நாம் கொடுக்கின்ற பொருளில் நிர்மாணிக்கப்படவில்லை; ஆனால், புத்தர் அதை இந்திரியாதீத ஸ்திதியிலே கண்டுபிடித்தார்.

274. எதற்கெல்லாம் உருவமுண்டோ அதெல்லாம் அணுக்களினுடைய சேர்க்கைகளின் பயனாக வேண்டும்; அதைச் சலிப்பிப்பதற்கு அதன் பின்னே ஏதோ ஒன்று வேண்டும்.

275. ஆகருஷண சக்தியானது மிகமிகப் பெரிய குளியலையும் துகளாக்கிவிட முடியும். ஆயினும், அது அசித்தேயாம். அசித்தைப்போல் பாவனை பண்ணுவதில் என்ன பெருமை யுள்ளது? ஆயினும், நாம் எல்லோரும் அதை யடைய முயற்சிக்கிறோம்; இதுதான் மாயை.

276. புலன்கள் மனுஷ்ய ஜீவனை வெளியே இழுக்கின்றன. சுகமானது எங்கே யொருபொழு

தும் கிடைக்காதோ அங்கே மனிதன் சுகத்தையும் ஆநந்தத்தையும் நாடுகிறான். இது பயனற்றதென்றும், வீண் என்றும் அநேக யுகங்களாக நாம் எல்லோரும் கற்பிக்கப்பட்டு வருகிறோம். இங்கே ஆநந்தம் இல்லை.

ஆனால், நம்மால் அறிந்துகொள்ள முடியவில்லை; நம்முடைய சொந்த அநுபவங்களின் மூலமாக அன்றி அப்படிச் செய்தல் நமக்குச் சாத்தியமல்ல; நாம் முயற்சிக்கின்றோம்; ஒரு அடி விழுகின்றது; அப்பொழுதாவது நாம் அறிந்துகொள்கிறோமா? அப்பொழுதுகூட அறிந்துகொள்கிறதில்லை. நெருப்பின்மீது வந்து விழும் விட்டிற்பூச்சிகளைப்போல நாம் 'இந்திரிய போகங்களிலே திருப்தி அடையலாம்' என்று நம்பி, மேலும் மேலும் நாம் அவற்றில் விழுந்துகொண்டிருக்கிறோம். நாம் மேலும் மேலும் புதிய சக்தியுடன் திரும்பிவருகிறோம். இவ்விதமாக நாம் நசுக்குண்டு ஏமாற்றமடைந்து மறிக்கின்றோம்; இதுதான் மாயை என்பது.

277. 'பிரபஞ்ச ரகஸ்யங்களைக் கண்டுபிடிக்க வேண்டும்' என்ற நம்முடைய ஆசையில் நாம் கேள்வி கேட்காமலிருக்கமுடியாது. 'நாம் தெரிந்துகொள்ள வேண்டும்' என்று உணர்கிறோம். 'இனிமேல் அறிவு ஒன்றும் அடையப்பட வேண்டியதில்லை' என்று நம்ப முடியாது. ஒரு சில அடிகள் நடந்தால் நம்மால் கடக்க முடியாத ஆதி அந்தமற்ற காலமாகிற சுவர்

ஒன்று கிளம்புகிறது. ஒருசில அடிகள் நடந்தால், கடக்கப்பட முடியாத எல்லையற்ற இடமாகிற சுவர் ஒன்று தோன்றுகிறது. எல்லாம் காரண காரிய மாகிற அவைகளினால் பந்திக்கப்பட் டிருக்கின்றன. நாம் அவற்றைக் கடந்து அப்பால் செல்ல முடிகிற தில்லை; ஆயினும், நாம் கடினமாக முயற்சி செய்கிறோம். இன்னும் முயற்சி செய்யவேண்டியும் இருக்கிறது; இதுதான் மாயை என்பது.

278. பிரதிசுவாஸத்தடனும், இருதயத் துடிப்பு ஒவ்வொன்றினுடனும், நமது சலனங்கள் ஒவ்வொன்றினுடனும், நாம் ஸ்வதந்திரர்க ளென்று நினைக்கிறோம், அதே சமயத்தில் நாம் ஸ்வதந்திரர்கள் அல்ல என்று நிரூபிக்கப்படுகிறோம். இதுதான் மாயை என்பது.

279. அறிவு என்பது முன் நிலைப்படுத்துவதாம்.

280. வேற்றுமையைப் பற்றிய எந்த எண்ணமும் பயங்கரமானதாம். அவர்சமீபத்திற்கும் சமீபமாயிருப்பவர் ஏகத்வம் என்ற வார்த்தையைத் தவிர இந்த ஸமீபத் தன்மையை வெளிப்படுத்துவதற்கு எந்த பாஷையிலும் வார்த்தை யில்லை. அத்வைதியானவன்: த்வைதி அத்வைதியினுடைய கொள்கையைக் கண்டு நடுங்கி 'அது தெய்வ நிந்தனையானது' என்று நினைக்கிறதுபோல, திருப்தி யடைகிறதில்லை.

281. உனக்கு வேண்டுமென்பதெல்லாவற்றையும் வைத்துக்கொள். இன்னும் அதிகமாகவும் வைத்துக்கொள். உண்மையை மாத்திரம் அறிந்துகொள். அதை அனுபவத்தில் கொண்டுவா. ஐசுவரியமானது எவருக்கும் சொந்தமல்ல. சொந்தக்காரன் என்ற எண்ணத்தை, உடைமையைப்பற்றிய எண்ணத்தை வைத்துக்கொள்ளாதே. உனக்கு மதிப்பில்லை; எனக்கும் மதிப்பில்லை; எவருக்கும் மதிப்பில்லை. எல்லாம் ஈசுவரனுக்கே சொந்தம். ஏனெனில், எல்லாவற்றிலும் ஈசுவரனைப் பார்க்க வேண்டுமென்று சாஸ்திரம் கூறுகிறது. ஈசுவரன் நீ அநுபவிக்கின்ற ஐசுவர்யத்தில் இருக்கிறார்; அவர், உனது மனத்தில் கிளம்புகின்ற ஆசையில் இருக்கிறார்; உனது ஆசையைத் திருப்தி செய்துகொள்வதற்கு நீ வாங்குகின்ற வஸ்துக்களில் அவர் இருக்கிறார். அவர் உனது அழகிய ஆடையில், உனது அழகிய அணிகளில் இருக்கிறார். இதுதான் சிந்திக்கவேண்டிய வழி. நீ வஸ்துக்களை அம்மாதிரி பார்க்க ஆரம்பித்துவிட்டால், எல்லாம் மாறுதலடைந்துவிடும். உனது ஒவ்வொரு சலனத்திலும், உனது சம்பாஷணையிலே, உனது வடிவத்திலே, ஒவ்வொன்றிலும் நீ ஈசுவரனை வைத்துவிட்டால், காட்சி முழுதும் மாறுதலடைந்துவிடுகிறது; உலகமானது, துக்கமும் துன்பமும் உள்ளதாகத் தோன்றுவதற்குப் பதிலாக, ஒரு ஸ்வர்க்க லோகமாகிவிடும்.

282. துக்கத்துக்கு ஒரே காரணம் உண்டு. நாம் பற்றுதலுள்ளவர்களாயிருக்கிறோம்; நாம் பிடிபடுகிறோம். ஆகையால், கீதை சொல்லுகிறது யாதெனில்: இடைவிடாமல் வேலை செய்யுங்கள்; வேலை செய்யுங்கள்; ஆனால், பற்றுதலுடையவர்களாயிராதீர்கள்; அகப்பட்டுக் கொள்ளாதீர்கள். ஒரு வஸ்து எவ்வளவு பிரியமானதாயிருந்தாலும், ஆத்மாவானது அதனிடத்து எவ்வளவுதான் அவாக்கொண்டிருந்த போதிலும், நீ அதை விட்டுப் பிரிவதினால் உனக்குத் துக்க வேதனை எவ்வளவு அதிகமாயிருந்தபோதிலும், அந்த வஸ்துவினிடமிருந்து உன்னைப் பிரித்துக்கொள்ளுவதற்குள்ள சக்தியை உடைத்தாயிரு; ஆயினும், உனக்கிஷ்டப்படுகிறபொழுது, அதை விட்டுவிடும்படியான சக்தி உனக்கிருக்கட்டும். இங்கே, இவ்வுலகில், அல்லது எவ்வுலகிலும் பலஹீனர்களுக்கு இடம் கிடையாது. பலஹீனமானது அடிமைத்தனத்தை நோக்கியிட்டுச் செல்கிறது. பலஹீனமானது, சாரீரமானவும், மானசீகமானவுமான பல விதமான துன்பங்களுக்கு இட்டுச் செல்கின்றது. பலஹீனமானது மரணமாம். நம்மைச் சுற்றிலும் லக்ஷக்கணக்கான பூச்சிகள் இருக்கின்றன. ஆனால், அவை, நாம் பலஹீனர்களாய் விட்டாலொழிய, சரீரமானது அவற்றை ஏற்றுக்கொள்வதற்குத் தயாரானாலொழிய, நமக்குத் தீங்கு செய்ய முடியாது. நம்மைச் சுற்றிலும் கோடிக்கணக்கான துக்கப் பூச்சிகள் மிதந்துகொண்டிருக்க

லாம், அவற்றை லக்ஷியம் செய்யாதே! அவை நம்மை நெருங்கி வரத் துணியா; மனமானது பல ஹீனப் படுத்தப்பட்டா லொழிய, நம்மைப் பற்றிக் கொள்வதற்கு அவற்றுக்குச் சக்தியில்லை. இதுதான் பெரிய உண்மை. பலமே ஜீவிதம்: பலஹீனமே மரணம்; பலமே ஆநந்தம், நித்திய வாழ்க்கை, அமிருதம்; பலஹீனமே இடைவிடாத் துன்பமும் துக்கமுமாம்; பலஹீனமே மரணமாம்.

283. பற்றுதலே நமது சுகங்களெல்லாவற்றுக்கும் உற்பத்தி ஸ்தானமாம். நாம் நமது பந்துக்களிடத்தே, நமது நண்பர்களிடத்தே பற்றுதலுடையவர்களா யிருக்கிறோம்; நாம் நமது புத்தி வேலைப்பாடுகளிடத்தும், ஞான வேலைப்பாடுகளிடத்தும் பற்றுத லுடையவர்களா யிருக்கிறோம்: நாம் அவற்றிலிருந்து சுகம் அடையலாமென்று வெளியேயுள்ள வஸ்துக்களினிடத்தில் பற்றுதல் உள்ளவர்களா யிருக்கிறோம். இன்னும், இந்தப் பற்றுதலைத் தவிர, துன்பத்தை யளிப்பது யாதுள்ளது? நாம் ஆநந்த மடையும்பொருட்டு, நம்மை நாமே பிரித்துக் கொள்ளவேண்டியிருக்கிறது. சங்கற்பமாத்திரத்தில் நம்மை நாமே பிரித்துக்கொள்ளும்படியான சக்தி நமக்குமாத்திரம் இருந்தால், துக்கமென்பதே யிராது. எவனொருவன் ஒரு விஷயத்தினிடத்தில் தனது சக்தி முழுவதுடனும் பற்றுள்ளவனாகும்படி சக்தியையுடைத்தாகித், தான் பற்றறவேண்டியபொழுது தன்

னைத் தானே பிரித்துக்கொள்ளும்படியான சக்தியை யும் உடைத்தாயிருக்கிறதோ, அவன் ஒருவனே பிர கிருதியில் மிகமிகச் சிறந்ததை யடைய வல்லவ னவான். கஷ்டம் யாதெனில், பிரித்துக்கொள்வ தற்கு எவ்வளவு சக்தி யிருக்கிறதோ பற்றுதலுக்கும் அவ்வளவு சக்தி யிருக்கவேண்டும். எதனாலும் ஒரு பொழுதும் ஆகருஷிக்கப்படாத மனிதர்கள் இருக் கிறார்கள்; அவர்களால் ஒருபொழுதும் நேசிக்க முடி யாது; அவர்கள் கடின ஹிருதய முடையவர்கள்; இரக்க மற்றவர்கள்; அவர்கள் வாழ்க்கைத் துன்பங்க ளில் பெரும்பான்மையினின்றும் தப்பித்துக்கொள் கிறார்கள். ஆனால், சுவரான்து ஒருபொழுதும் துக் கத்தை யுணர்கிறதில்லை; சுவர் ஒருபொழுதும் நேசிக் கிறதில்லை; அது ஒருபொழுதும் துன்புறுத்தப்படுகிற தில்லை; ஆனால், அது சுவர்தானே. நிச்சயமாய், சுவராயிருப்பதைப் பார்க்கிலும் பற்றுதலடைந்து அகப்பட்டுக்கொள்வது சிறந்ததே. ஆகையால், ஒரு பொழுதும் நேசிக்காத மனிதன் - கடினமான, கல் போன்ற மனமுடைய மனிதன் - வாழ்க்கைத் துன் பங்களில் பெரும்பான்மையினின்றும் தப்பித்துக் கொண்டாலும், அதன் சுகங்களினின்றும்கூடத் தப் பித்துக்கொள்கிறான். நாம் அதை விரும்புகிறதில்லை; அது பலஹீனம்; அது மரணம். பலஹீனத்தை யொருபொழுதும் உணராத, துக்கத்தை யொரு பொழுதும் உணராத ஜீவன் விழித்துக்கொள்ள

வில்லையென்றே சொல்லவேண்டும்; அது ஒரு பொறுப்பற்ற நிலைமை. நாம் அதை விரும்புகிறதில்லை.

284. நாம் எல்லோரும் பிச்சைக்காரர்களே. நாம் எது செய்தாலும், அதற்குப் பிரதிப்பிரயோசனத்தை விரும்புகிறோம். நாம் எல்லோரும் வியாபாரிகள். நாம், வாழ்க்கையில் வியாபாரிகள்; நாம், புண்ணியத்தில் வியாபாரிகள்; நாம், மதத்தில் வியாபாரிகள். அந்தோ! நாம் அன்பிலும் வியாபாரிகளாயிருக்கிறோம்.

285. தங்கள் வாழ்க்கையின் ஆரம்பத்திலே இரக்க முள்ளவர்களாயும், பிரிய முள்ளவர்களாயும், சாதாரணமானவர்களாயும், கபடு அற்றவர்களாயும் இருந்த ஜனங்கள் விருத்தாப்பிய பர்வத்திலே பொய் வேஷமிடும் புருஷர்களாவதை நாம் பார்க்கிறோம். அவர்களுடைய மனங்கள் ஒரு குழப்பக் கூட்டமாயிருக்கின்றது. பகிரங்க தந்திரம் ஏராளமாயிருக்கலாம். அவர்கள், கொதிக்கும் மூளைகளுள்ளவர்களல்லர்; அவர்கள் பேசுகிறதில்லை; ஆனால், அவர்கள் பேசினால் நலம்; அவர்களுடைய ஹிருதயங்கள் மரித்தவையா யிருக்கின்றன; ஆகையால், அவர்கள் பேசுகிறதில்லை. அவர்கள் சபிக்கிறதில்லை, கோபமடைகிறதில்லை; ஆனால், அவர்கள் கோபமுடையவர்களாவது மேலாம்; சபிக்கச் சக்தி யுடையவர்களாவது ஆயிரம் மடங்கு மேலாம். அவர்களால் முடி

யாது. ஹிருதயத்திலே மரணம் ஏற்பட்டுவிட்டது; ஏனெனில், குளிர்ந்த கைகள் அதைப் பற்றிவிட்டன; அது இனிமேல் வேலை செய்ய முடியாது, சபிக்கக் கூட முடியாது; ஒரு கடினமான வார்த்தை உபயோகிக்கக்கூட முடியாது.

286. நாம் எதற்குத் தகுந்தவர்களா யிருக்கிறோமோ அதையே நாம் அடைகிறோம். நாம் நமது கர்வத்தை விட்டுவிட்டுத், 'துக்கமானது ஒரு பொழுதும் அதற்கு உரித் தல்லாதவர்களுக்குக் கிடைப்பதில்லை' என்று இதை அறிந்துகொள்வோம். ஒருபொழுதும் உரித்தல்லாத அடி கிடைத்ததில்லை. நான் எனது சொந்தக் கைகளால் வழி செய்ய விடாத தீமை யொருபொழுதும் கிடையாது. நாம் அதை யறிந்துகொள்ளவேண்டும். உன்னை நீயே பிரித்து ஆராய்ந்து பார்! நீ அடைந்த ஒவ்வொரு அடியும் நீ அதற்கு உன்னைத் தயாராக்கிக் கொண்டதினாலேயே உனக்குக் கிடைத்ததென்பதை நீ காண்பாய். நீ பாதி செய்தாய்; பகிர்முக உலகம் பாதி செய்தது; அடிவந்தவாறு அதுதான். அது நம்மைச் சாந்தப்படுத்தும். ஆனால், இதே பாகுபாட்டிலிருந்து நம்பிக்கைத் தொனி யுண்டாகும்; நம்பிக்கைத் தொனியாவது, "பகிர்முக உலகம் எனக்கு அடங்கியில்லை; ஆனால், என்னி லுள்ளதும், எனக்கு மிகச் சமீபத்தி லுள்ளதுமானது எனது சொந்த உலகம், என்க்கு அடங்கியுள்ளது. தவறுதல் உண்டுபண்ணு

தற்கு இரண்டும் சேர்ந்து அவசியமாயிருந்தால், இரண்டும் சேர்ந்து எனக்கு ஒரு அடி கொடுப்பதற்கு அவசியமாயிருந்தால், எனது அடக்கத்திலுள்ள ஒன்றை நான் அளிக்கமாட்டேன் அப்படியானால் அடி எங்கிருந்து வரக்கூடும்? என்னை நான் உண்மையில் அடக்கிக் கொள்வேனானால், அடி யொருபொழுதும் உண்டாகாது.

287. நாம் எதற்குத் தகுந்தவர்களோ அதையே அடைகிறோம். உலகம் கெட்டதென்றும், நாம் நல்லவர்களென்றும் நாம் கூறினால், அது ஒரு பொய். அது ஒருபொழுதும் அப்படி யிருக்க முடியாது. நமக்கு நாமே சொல்லிக்கொள்ளுகின்ற ஒரு பயங்கரமான பொய் அது

288. கற்றுக்கொள்ள வேண்டிய முதலாவது பாடம் இதுதான். வெளியேயுள்ள எதையும் சபிக்காம லிருப்பதற்கு, வெளியேயுள்ள எவர்மீதும் குற்றம் சுமத்தாம லிருப்பதற்குத் தீர்மானித்துக்கொள். ஆனால், மனிதனையிரு! எழுந்து நில்! உன்மீதே குற்றத்தைச் சுமத்திக்கொள்! அது எப்பொழுதும் உண்மை யென்பதை நீ காண்பாய்.

289. இன்னின்ன தீர்க்கதர்சியினால் போதிக்கப்பட்ட புராணக் கதைகளை மனிதர் நம்பவேண்டுமென்று மிக்க மதங்களும் கூறுகின்றன என்ற காரணத்தை வைத்துக்கொண்டு ஜனங்கள் மதத்தைப் பார்த்து நகைப்பார்களானால், இந்தத் தற்காலத்திய

ஜனங்களைக் கண்டு அவர்கள் இன்னும் அதிகமாக நகைக்கவேண்டும். தற்காலத்திலே, ஒருவன் மோஸெஸ், அல்லது ஒரு புத்தர், அல்லது ஒரு கிறிஸ்து இவர்களை யாதாரமாகக் கூறினால், அவன் பரிகாசம் செய்யப்படுகிறான்; ஆனால், அவன் ஹக்ஸ்லி, டின்டால், அல்லது டார்வின் முதலியவர்களுடைய பெயரைக் கூறட்டும், அது உப்பில்லாமல் விழுங்கப்பட்டுவிடுகிறது.

290. அது மத விஷயத்தில் ஒரு மூட நம்பிக்கை; இது கலை விஷயத்தில் ஒரு மூட நம்பிக்கை; அந்த மூட நம்பிக்கையின் மூலமாகவே ஆத்மஞானத்தைப் பற்றிய, உயிரளிக்கும் எண்ணங்கள் உண்டாயின; தற்காலத்திய, இந்த மூட நம்பிக்கையின் மூலமாகக் காமமும் இச்சையும் உண்டாகின்றன. அந்த மூட நம்பிக்கை ஈஸ்வரோபாசனை; இந்த மூட நம்பிக்கை அழுக்காம் பணத்தின், கீர்த்தியின், அல்லது அதிகாரத்தின் உபாசனை. அதுதான் வித்தியாசம்.

291. ஹிந்துக்கள் ஜாதியிலே ஓர் உயர்ந்த பதிவிரதாதர்மத் தன்மையை ஸ்திரப்படுத்திக் கொள்ளும்பொருட்டுக் குழந்தை விவாகத்துக்கு அநுமதி கொடுத்திருக்கிறார்கள்; அது கடைசியாக ஜாதியைக் கீழ்மைப்படுத்திவிட்டது. ஆனால், இந்தக் குழந்தை விவாகமானது ஜாதியை அதிகம் கற்புடையதாகச் செய்கிறதென்பதை நான் மறுக்க முடியாது. உங்களுக்கு என்ன வேண்டும்? ஜன சமுதாயம் அதிகம்

கற்புடையதா யிருக்கவேண்டுமென்று நீங்கள் விரும்பினால், குழந்தை விவாகத்தினால் புருஷர்களையும் ஸ்திரீகளையும் சரீர பல விஷயத்தில் பலஹீனப்படுத்திவிடுகிறீர்கள். ஆனால், இங்கிலாந்தில் நீங்கள் இதைவிட மேலான ஸ்திதியில் இருக்கிறீர்களா? இல்லை. ஏனென்றால், பதிவிரதாதர்மமே ஒரு ஜன சமுதாயத்தின் உயிர். ஒரு ஜன சமுதாயத்தின் முதலாவது மரணக்குறி பதிவிரதாதர்ம மின்மையே யென்பதை நீங்கள் சரித்திரத்தில் பார்க்கவில்லையா? அது நுழைந்துவிட்டால், ஜாதியின் முடிவு தோன்றிவிடுகிறது. அப்படியானால், இந்தத் துக்கங்களுக்கு ஒரு நிவிர்த்தியை நாம் எங்கு அடைவது? பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளுக்குப் புருஷர்களையும் மனைவிகளையும் பொறுக்கி யெடுப்பார்களானால், இந்தத் தீமை குறைவுபடுகிறது. இந்தியாவின் பெண்கள் உணர்ச்சியுள்ளவர்களா யிருப்பதினும் அதிகம் அனுபவ பூர்வமா யுள்ளவர்கள். ஆனால், அவர்களுடைய வாழ்க்கைகளிலே காவிய ருசியில் மிகவும் சொற்பமே யுள்ளது. இன்னும், ஜனங்கள் தங்களுக்குப் புருஷர்களையும் மனைவியர்களையும் தாங்களே தெரிந்தெடுத்துக்கொள்வார்களானால், அது அதிகம் சுகத்தை உண்டு பண்ணுவதாகத் தோன்றவில்லை. இந்திய ஸ்திரீ சாதாரணமாக மிகவும் சந்தோஷமா யிருக்கிறாள்; புருஷனுக்கும் மனைவிக்கும் சச்சரவுகள் அதிகம் கிடையா. ஆனால், ஐக்கிய நாடுகளிலோ

(அமெரிக்காவிலோ)—இங்கு மிகமிக அதிக ஸ்வதந்திரம் வழங்குகின்றது—சந்தோஷமற்ற வீடுகளினுடையவும், விவாகங்களினுடையவும் தொகை அதிகமாயிருக்கிறது. அச் சந்தோஷம் இங்கும் அங்கும் எங்கும் உள்ளது.

292. மார்க்கமானது மாயையுடன் அன்று; ஆனால், அதற்கு நேர் விரோதமாக உள்ளது. இது தெரிந்துகொள்ளவேண்டிய இன்னொரு விஷயம்.

293. ஒரு பசு தத்வக்ஞானம் உள்ளதாயும் மதமுள்ளதாயும் இருப்பதாக வைத்துக்கொள்வோம். அதற்கு ஒரு பசுப் பிரபஞ்சமும், வாழ்க்கை நிலையைப் பற்றி ஒரு பசுத் தீர்மானமும் ஏற்படும்! அது நமது ஈசுவரனைப் பார்க்கவேண்டுமென்பது சாத்தியமல்ல. பூனைகள் தத்வஞானிகளாகின்றன என்று வைத்துக்கொள்வோம். அவை ஒரு பூனைப் பிரபஞ்சத்தைப் பார்க்கும். தவிர, பிரபஞ்சக் கேள்வியைப்பற்றி ஒரு பூனைத் தீர்மானமும் ஏற்படும்; ஒரு பூனை அதையரசாள்வதாகவும் ஏற்படும். ஆதலால், இதிலிருந்து பிரபஞ்சத்தைப்பற்றிய நியாயமானது நியாயத்தின் முழுதுமே யல்லவென்பதைப் பார்க்கிறோம். நமது பார்வையானது ஜகத் முழுதையும் சேர்க்கிறதுமில்லை. மனிதன் எடுத்துக்கொள்ளக்கூடிய அந்த அபாரமான ஸ்வயநல நிலைமையை ஏற்றுக்கொள்வது பெருந் தப்பிதமாம். ஜகத் விசாரணையைப்பற்றி நாம் வெளியிலிருந்து அடையக்கூடிய தீர்மான

மானது ஒரு கஷ்டத்தில் இருக்கிறது; அதாவது, முதலில் நாம் பார்க்கின்ற பிரபஞ்சமானது, நமது சொந்த, பிரத்தியேகமான பிரபஞ்சமாம்; சத்தியத்தைப்பற்றிய நமது சொந்த அபிப்பிராயமாம். அந்தச் சத்தியத்தை நாம் புலன்களால் பார்க்க முடியாது; அதை நாம் அறிய முடியாது. ஐம்புலன்களுள்ள ராசிகளின் பார்வையிலிருந்தே நாம் ஜகத்தையறிகிறோம். நாம் இன்னொரு புலனை யடைவதாக வைத்துக்கொள்வோம். ஜகத் முழுதும் நமக்கு மாறுதலடையவேண்டும்.

294. வட்டத்தின் மத்தியத்துக்கு நாம் எவ்வளவுக்கெவ்வளவு சமீபத்திலிருக்கிறோமோ, மத்திய வரைகளெல்லாம் சந்திக்கின்ற பொது நிலத்தை நாம் அவ்வளவுக்கவ்வளவு சமீபிக்கின்றோம்; நாம் மத்தியத்திலிருந்து எவ்வளவுக் கெவ்வளவு தூரத்தில் போகின்றோமோ, பிறவற்றினின்றும் நமது மத்திய வரையும் அவ்வளவுக்கவ்வளவு பிரிந்தேயிருக்கின்றது. பகிர்முக உலகமானது காட்சி முழுமையினுடையவும் ஒரு பாகமேயாகும்.

295. இந்த உண்மையை அறிந்துகொள்வது மிகவும் கஷ்டம். அநேகர் அதை இடைவிடாது கேட்டும் கூட, அதை யறிந்துகொள்கிறதில்லை; ஏனெனில், பேசுபவர் அற்புத புருஷனா யிருக்கவேண்டும்; கேட்பவரும் அப்படியே யிருக்கவேண்டும். ஆசாரியர் அற்புத புருஷரா யிருக்கவேண்டும்; சிஷ்யரும்

அப்படியே யிருக்கவேண்டும். மனமானது வீண் விவாதத்தினால் கலக்கப்படுத்தப்படக்கூடாது; ஏனெனில், அது அதற்குமேல் விவாதத்தைப்பற்றிய கேள்வியன்று; விஷயத்தைப் பற்றிய கேள்வியாகிறது. நமக்கு நம்பிக்கை யிருக்கவேண்டுமென்று ஒவ்வொரு மதமும் வற்புறுத்திவருவதை நாம் எப்பொழுதும் கேட்டிருக்கிறோம்.

296. மனமானது வீண் விவாதங்களினால் கலக்கமடையக் கூடாது; ஏனெனில், விவாதமானது ஈசுவரனை அறிவதற்கு நமக்கு அநுகூலமாயிருக்கும். அது, விஷயத்தைப்பற்றிய கேள்வி, விவாதத்தைப்பற்றிய கேள்வியன்று.

297. எல்லா அறிவும் சில விஷயங்களின் பார்வையின்மீதே நிற்கவேண்டும்; அதன்மீது நாம் நமது யுக்தியைக் கட்டவேண்டும்.

298. பகிர்முக சாஸ்திரத்தில் போலவே மதத்திலும் நேருக்கு நேர் பார்க்கப்படவேண்டிய சில விஷயங்கள் உண்டு; அவற்றின்மீது மதமானது கட்டப்படும். 'நீங்கள் ஒரு மதத்தின் ஒவ்வொரு கோட்பாட்டையும் நம்பவேண்டும்?' என்று கூறப்படும் மிக்க உரிமையானது மனுஷ்ய மனத்தைத் தாழ்வுபடுத்துகின்றது என்பது உண்மையே. ஒவ்வொன்றையும் நம்பவேண்டுமென்று உங்களிடம் கூறுபவன் தன்னைத் தானே தாழ்த்திக்கொள்கிறது மன்றியில், நீங்கள் நம்பினால், உங்களையும் தாழ்த்திவிடுகிறான்.

299. இந்தியாவிலே முப்பதுகோடி வேதாந்திகள் இருப்பதாகச் சொல்லப்படுகிறது. ஆனால், மதத்தில் ஸ்வானுபூதியை உண்மையில் அடைந்தவர் ஆயிரத்தில் ஒருவர் இருந்தால், இவ்வுலகமானது சீக்கிரத்திலே பெரிய மாறுதலடைந்துவிடும். நாம் எல்லோரும் நாஸ்திகர்களே யாவோம்; ஆயினும், அதை ஒப்புக்கொள்கின்றவனுடன் போராட முயற்சிக்கின்றோம். நாம் எல்லோரும் அந்தகாரத்தில் இருக்கிறோம்; நமக்கு மதமானது வெறும் புத்தி சம்மதமாய், வெறும் பேச்சாய், வெறுமே விலையற்றதாய் உள்ளது. நன்றாகப் பேசக்கூடியவனே மதாபிமான முள்ள மனிதனென்று நாம் அடிக்கடி கருதுகிறோம். ஆனால், இது மதமன்று. "பதங்களைச் சேர்ப்பதிலே அற்புதமான உபாயங்கள், வாக்சாலகம், கிரந்தங்களின் மூலங்களைப் பலமாதிரியாக வியாக்கியானம் செய்தல், இவை வித்துவான்களின் சந்தோஷத்துக்கேயாம்; மதத்துக்காக அன்று"

300. இந்திரிய போகங்கள் சில சமயங்களிலே அபாயகரமானதும் தூண்டுதலுக்கு இடம்கொடுக்கக் கூடியதுமான ஒரு பக்ஷத்தை யடைகின்றன. வாழ்க்கைத் துன்பங்க ளெல்லாம் நீங்கி, அதன் போகங்களும் சுகங்களுமே எஞ்சி, இந்தப் பூவுலகானது ஒரு மோக்ஷலோக மாகும்படியான ஒரு காலம் வருமென்று மிகவும் புராதன காலங்களிலே ஒவ்வொரு ஜாதத்திலும் ஒரு கோட்பாடு இருந்தது என்பதை

நீங்கள் எப்பொழுதும் கேள்விப்படுவீர்கள். நான் அதை நம்பவில்லை. இந்தப் பூவுலகானது இதே உலகமாக எப்பொழுதும் இருக்கும். அது சொல்வதற்கு மிகமிகப் பயங்கரமான விஷயமாம்; ஆயினும், அதினின்றும் நான் வேறுபடுவதற்கு வழி தெரியவில்லை. உலகிலுள்ள துக்கமானது சரீரத்திலுள்ள, ஸ்திரப்பட்ட வாதரோகம்போன்றிருக்கிறது. ஓரிடத்திலிருந்து அதைத் துரத்துங்கள்! அது இன்னொரு இடத்துக்குப் போகின்றது: அங்கிருந்து அதைத் துரத்துங்கள்! வேறெங்கேனும் அதையுணர்வீர்கள். நீங்கள் என்ன செய்தாலும், அது அங்கே யிருக்கிறது.

301. அது எவ்வளவு சூக்ஷ்மமானதா யிருந்தாலும் அது காலத்திலும் தேசத்திலும ஆரம்பத்தை யுடையதா யிருக்கவேண்டும். ஏனெனில், ரூபத்தை யுண்டுபண்ணுவதற்கு அவசியமா யிருந்த வஸ்துக்கள தேசத்திலேயே இருக்கின்றன. இடமின்றி ரூபத்தைப் பற்றி நினைக்க முயற்சிசெய்; அது அசாத்தியம். உருவத்தை யுண்டாக்கும் பதார்த்தங்களில் இடமும் ஒன்று. இது இடைவிடாது மாறிக் கொண்டே யிருக்கிறது. தேசமும் இடமும் மாயையில் இருக்கின்றன; இந்தக் கருத்து, "இங்கு உள்ளது அங்கும் உண்டு" என்ற சுலோகத்திலே கூறப் பட்டிருக்கிறது.

302. தீபேத் தேசத்திலே விவாக சம்பிரதாய மில்லை; பொறுமையு மில்லை; ஆயினும், விவாகமென்பது மிகவும் உயர்ந்ததொரு நிலைமை யென்பது நமக்குத் தெரியும். அற்புதமான சுகத்தை, பதிவிரதா தர்ம புண்ணியத்தை, கற்புடைய ஒரு உத்தம மனைவியை, அல்லது கற்புடைய ஒரு உத்தம புருஷனைக் கொண்டிருத்தலினால் உண்டாகும் ஆநந்தத்தைத் தீபேத்தியர்கள் அறியார்கள். இந்த ஜனங்கள் அதை யுணர முடியாது; அதுபோலவே, அவர்கள் கற்புடைய மனைவியின் அல்லது புருஷனின் அத்தியந்த பொறுமையையோ அல்லது இரு பக்ஷத்திலும் உண்டாகலாமான விசுவாச மின்மையால் ஏற்படும் துக்கத்தையோ உணர்கிறதில்லை; பதிவிரதைத் தன்மையில் நம்பிக்கை யுள்ளவர்கள் அனுபவத்தில் அடைகின்ற ஹிருதயக் கொதிப்புக்களையும் துக்கங்களையும் உணர்கிறதில்லை.

303. நான் சிறுவனாயிருந்தபொழுது, ஒரு வாலிபனுடைய தகப்பனார், ஆதரிப்பதற்கு ஒரு பெரிய குடும்பத்தை வைத்துவிட்டு, அவனை எளியவனாகவும் விட்டுவிட்டு, மரித்துவிட்டார்; அவனுடைய பிதாவின் நண்பர்கள் அவனுக்கு உதவி செய்ய மனமற்றவர்களா யிருந்தார்கள். அவன் ஒரு பாதிரியுடன் சம்பாஷித்துக்கொண்டிருந்தகாலத்து, அந்தப் பாதிரி "ஓ, அதெல்லாம் நன்மைதான்; எல்லாம் நமது நன்மைக்கே அனுப்பப்படுகின்றன" என்று கூறி ஆறுதல்

அளித்தார். அது ஒரு பழம் புண்ணின்மீது ஒரு பொன்தகட்டுத்துண்டைப்போட முயற்சிக்கும் பழய உபாயமாம். அது பலஹீனத்தை, மூடத்தனத்தை ஒப்புக்கொள்ளுதலாம். வாலிபன் போய்விட்டான்; ஆறுமாதங்கட்குப் பிறகு அந்தப் பாதிரிக்கு ஒரு குழந்தை பிறந்தது; அவன் ஒருவிருந்துவைத்து, இந்த வாலிபனையும் அழைத்திருந்தான். பாதிரி, "கடவுளே அவருடைய கிருபைகளுக்காக வந்தனம் செலுத்துவோம்" என்று பிரார்த்தித்தான். வாலிபன் எழுந்து நின்று "நில்லு! இது எல்லாம் துக்கமே" என்று கூறினான். பாதிரி, "ஏன்?" என்று கேட்டான். "ஏனென்றால், உன்னுடைய பிதா மரித்த பொழுது அது தீமையாகத் தோன்றிய பொழுதிலும் நன்மையே யென்று நீ கூறினாய் ஆகையால், இப்பொழுது, இது நன்மையாகத் தோன்றுகிறது; ஆனால், உண்மையில் தீமையே." உலக துக்கத்தைச் சொஸ்தப்படுத்துவதற்கு இதுதானா மார்க்கம்? நல்லவனாயிரு! துன்புறுபவர்களிடத்து இரக்கம் வை.

304. இது நன்மையும் தீமையும் கலந்த ஒரு உலகம். நன்மையுள்ள இடத்திலே தீமையும் பின்தொடர்கிறது; ஆனால், இவ் வெளிப்பாடுகளுக்கெல்லாம் பின்னாலும் அப்பாலும் வேதாந்தமானது அந்த ஏகத்துவத்தைக் கண்டுபிடிக்கிறது. அது, "தீமையை விட்டுவிடு; நன்மையையும் விட்டுவிடு" என்று கூறுகிறது. அப்படியானால், எஞ்சியுள்ளது யாது?

நன்மைக்கும் தீமைக்கும் பின்னால், ஒவ்வொரு தீமைக்கும் அப்பால், ஒவ்வொரு நன்மைக்கும் அப்பால், உண்ணுடையதா யுள்ள ஏதோ ஒன்று, உண்மையான நீ, இருக்கிறது; நன்மையும் தீமையுமாய் வெளிப்படுகின்றது அதுதான். அதை முதலில் அறிந்துகொள்; அப்பொழுது தான் நீ உண்மையானதொரு நம்பிக்கை யுள்ளவனாவாய்; அதற்கு முன்னர் அன்று; ஏனெனில், அப்பொழுது நீ ஒவ்வொன்றையும் அடக்குவதற்கு வல்லவனாவாய். இந்த வெளிப்பாடுகளை யடக்குங்கள்! உங்களால் உண்மையான "நீ"யை வெளிப்படுத்த முடியும்.

305. இந்த ஜீவிதம் ஒரு கடினமான உண்மை; வழி கடினமா யிருந்தாலும், தைர்யமாக அதனூடே உனது வழிபற்றிச் செல்! பாதகமில்லை. ஆத்மா, பலமுள்ளது. அது சிறு தேவதைகளிடத்துப் பொறுப்பைச் சுமத்துகிறதில்லை. ஏனெனில், உங்கள் அதிர்ஷ்டங்களை யுண்டுபண்ணுகிறவர்கள் நீங்களே. நீங்களே உங்களைத் துன்புறுத்திக்கொள்கிறீர்கள்; நீங்களே நன்மையும் தீமையும் செய்துகொள்கிறீர்கள்; உங்களுடைய கைகளை உங்களுடைய கண்களின் முன் வைத்துக்கொண்டு, அந்தகாரமாயிருக்கிறதென்று சொல்கிறவர்களும் நீங்களே. உங்களுடைய கைகளை யெடுத்துவிட்டு, ஒளியைப் பாருங்கள்! நீங்கள் ஒளியுள்ளவர்கள்; முன்னமேயே, ஆதியிலிருந்தே

நீங்கள் பரிபூர்ணர்கள். இப்பொழுது நாம், "இங்கு அநேகத்வத்தை எவன் பார்க்கிறானோ அவன் மரணத்திலிருந்து மரணத்துக்குச் செல்கிறான். அந்த ஏக வஸ்துவைத் தர்சித்து முக்தனாய்விடு" என்றுள்ள சுலோகத்தை அறிந்துகொள்கிறோம்.

306. மிகமிக சிரேஷ்டமான மோக்ஷலோகம் நமது ஆத்மாக்களிலேயே உள்ளது; பூஜிப்பதற்கு மிக மிக உத்தமமான க்ஷேத்திரமானது மனுஷ்ய ஆத்மாவே; இது எல்லா ஸ்வர்க்க லோகங்களினும் பெரியதென்று வேதாந்தம் கூறுகிறது; ஏனெனில், இந்த வாழ்க்கையில்போல, நமது ஆத்மாவில்போல வேறு எந்தலோகத்திலும் எங்கும் நாம் உண்மையை அவ்வளவு தெளிவாகவும் வியக்தமாகவும் அறிய முடியாது. இடங்களை மாற்றுதலினால் மனிதனுக்கு அவ்வளவு அநுகூலம் ஏற்படுகிறதில்லை.

307. புலன்கள் மனுஷ்ய ஆத்மாவினாலே அடிமைகளாக்கப்பெற்று, மனத்தைக் கலைப்பதற்கு அவற்றால் முடியாமற்போகும்பொழுது, யோகியானவன் லக்ஷியத்தை யடைந்துவிட்டான்.

308. எனக்குத் தெளிவாகத் தோன்றுகின்றதும், ஒவ்வொரு தேசத்திலும் ஒவ்வொரு மதத்திலும் மூடநம்பிக்கைக் குவியல்களினூடே வருகின்றதுமான ஒரு பெரிய கருத்து யாதெனில், 'மனிதன் தெய்விகத் தன்மையுள்ளவன், தெய்வீகத் தன்மையே

நமது லக்ஷணம்' என்றுள்ள இந்த ஒளி மிகுந்த கருத்தே.

309. ஸ்வதந்திரமும் பரிசுத்தமுமாகிற இந்த அக்கினியானது ஒவ்வொரு ஆத்மாவினுடையவும் லக்ஷணமாம்; இவை குணமல்ல; ஏனெனில், குணங்கள் அடையப்பட முடியும், ஆகையினால், இழக்கப்படவும் முடியும். ஆத்மாவானது ஸ்வதந்திரத்துடன் ஒன்று யுள்ளது; ஆத்மா சத்துடன் ஒன்று யுள்ளது; ஆத்மா சித்துடன் ஒன்று யுள்ளது. இந்த சச்சிதாநந்தமே ஆத்மாவினுடைய லக்ஷணம்; பிறவி உரிமை; நாம் பார்க்கின்ற வெளிப்பாடுக ளெல்லாம் அதன் விவரணங்களேயாம். அது மங்கலாகவோ அல்லது பிரகாசத்துடனோ வெளிப்படுகின்றது. மரணமும் அந்த உண்மைப் பொருளின் ஒரு வெளிப்பாடே யாம். ஜனனமும் மரணமும், ஜீவிதமும் அழிவும், கீழ்மையும் மேன்மையும், அந்த ஏகத்வத்தின் வெளிப்பாடுகளேயாம். ஆகையால், அறிவானது அறியாமையாகவோ அல்லது கல்வியாகவோ, எப்படி வெளிப்பட்டாலும், அறிவின் சாரமாகிய அதே சித்தின் வெளிப்பாடே யாகும். வித்யாஸமானது அளவிலேயே உள்ளது; மாதிரியில் இல்லை. நமது கால்களின் கீழ் ஊருகின்ற மிகமிகக் கடைப்பட்ட புழுவிற்கும், உலகம் உற்பத்தி செய்யலாமான மிகமிகச் சிறந்த மேதாவிக்கும், அறிவிலே யுள்ள வித்யாஸ

மானது அளவு மாத்திரத்திலே யாரும், மாதிரியில் இல்லை.

310. ஒன்றும் காரண மில்லாமல் உண்டாகிற தில்லை. காரணமே இன்னொரு வடிவத்தில் காரிய மாம்.

311. விராட் சைதன்யமே ஈஸ்வரன் எனப்படு வது. வேறு எந்தப் பெயர் வைத்து அழைத்தாலும் ஆதியில் அந்த அகண்ட சைதன்யம் இருந்தது என் பது அத்யந்த நிச்சயம். இந்த சைதன்யமானது அடங்கிக்கொள்கிறது. அது வெளிப்பட்டு விச்ரிம் பித்துப் பரிபூர்ண புருஷனாய், கிறிஸ்து புருஷனாய், புத்த புருஷனாய் ஆகிவிடுகிறது. பின்னர் அது தனது சொந்த உற்பத்தி ஸ்தானத்திற்குத் திரும்பச் சென்று விடுகிறது. அதனாலேதான் சாஸ்திரங்கள் எல்லாம் "அவரில் நாம் வாழ்கிறோம், சலிக்கிறோம், வசிக் கிறோம்," என்று கூறுகின்றன. அதனாலேதான் சாஸ்திரங்கள் எல்லாம், "நாம் ஈஸ்வரனிடத்தி லிருந்து வந்தோம், ஈஸ்வரனிடம் திரும்பிச் செல்கின் றோம்," என்று போதிக்கின்றன. நீண்ட பதங் களைக் கண்டு பயந்துவிடாதீர்கள்; பதங்கள் உங் களைப் பயப்படுத்துமானால் நீங்கள் தத்துவக்ஞானி களா யிருப்பதற்குத் தகுந்தவர்க ளல்லர்.

312. ஜடம், நினைப்பு, சக்தி, அறிவு முதலியன போன்ற சிருஷ்டி சக்தியும் பலவித வடிவங்கள் எல் லாம் அந்த சைதன்ய வஸ்துவின் அல்லது பரமேசுவர

னின் வெளிப்பாடே என்று நாம் இப்பொழுது பார்க்கிறோம். நீ பார்க்கின்ற, உணர்கின்ற, அல்லது கேட்கின்ற ஒவ்வொன்றும், பிரபஞ்சம் முழுவதுமே அவருடைய சிருஷ்டியாகும்; அல்லது இன்னும் கொஞ்சம் சரியாகச் சொன்னால், அவருடைய விச்ரும்பணமாகும்; அல்லது இன்னும் கொஞ்சம் சரியாகச் சொன்னால் ஈசுவரனேயாகும். சூரியனாகவும், நக்ஷத்திரங்களாகவும் ஒளிர்பவர் அவரே; அவரே பூமாதா; அவரே ஸாகரம். அவர் அமைதியான அழைத்துளிகளாக வருகிறார். நாம் சுவாஸிக்கின்ற அமைதியான காற்றும் அவரே; சரீரத்தில் சக்தியாக வேலை செய்பவரும் அவரே; பேசப்படும் பேச்சும் அவரே; பேசுபவரும் அவரே; இங்குள்ள சபையும் அவரே; நான் நிற்கும் பிரசங்க மேடையும் அவரே; உங்கள் முகங்களைப் பார்ப்பதற்கு எனக்கு அனுகூலமா யிருக்கின்ற வெளிச்சமும் அவரே; எல்லாம் அவரே. அவரே இந்தப் பிரபஞ்சத்திற்கு நிமித்த காரணமாயும், உபாதான காரணமாயும் இருக்கிறார். சூக்ஷ்மமான அறையில் அடங்கிக் கிடந்து மறுமுனையில் வெளிப்பட்டு, மறுபடியும் கடவு ளாகிறவரும் அவரே. கீழே இறங்கி வந்து மிகமிகத் தாழ்ந்த அணுவாகித் தன்னுடைய லக்ஷணத்தை மெல்ல வெளிப்படுத்திக்கொண்டு மறுபடியும் தானேயாய்விடுகிறவரும் அவரே. இதுதான் பிரபஞ்ச ரகஸ்யம்.

313. இந்த மனத்துக்குப் பின்னால் ஒன்று உள்ளது என்பதை நாம் எப்படி அறியமுடியும்? ஏனென்றால், ஸ்வயம் ஜோதியாயும், அறிவுக்கு ஆதாரமாயும் உள்ள ஞானமானது, மந்தமான மறித்த ஜடத்திற்குச் சொந்தமாயிருக்க முடியாது. எந்த ஜடபதார்த்தமும் அறிவைத் தனது சாராம்ஸமாகக் கொண்டிருந்தது என்று ஒருபொழுதும் காணப்பட்டதில்லை. மந்தமான, அல்லது மறித்த ஜடம் எதுவும் தன்னைத் தானே ஒளிரச்செய்துகொள்ள முடியாது. எல்லா ஜடத்தையும் ஒளிரச் செய்வது அறிவேயாகும்.

314 கடன் வாங்கப்பட்ட வெளிச்சத்துக்கே அழிவு சாத்யமாகும்.

315. சரீரம், பகிர்முகவடிவம், ஒளியைத் தனது சாராம்ஸமாகக் கொள்ளவில்லை என்பதும், ஸ்வயம் ஜோதியாயில்லை என்பதையும், தன்னைத் தானே அறிந்துகொள்ள முடியாதிருக்கிறதென்பதையும், மனமும் அப்படியேதான் என்பதையும், இப்பொழுது நாம் பார்க்கிறோம். ஏன் மனத்தினால் முடியாது? ஏனெனில், மனமானது வளர்வதும் குறைவதுமாயிருக்கிறது. ஏனெனில், அது ஒரு சமயத்தில் பலமுள்ளதாயும், இன்னொரு சமயத்தில் பலஹீனமாயுமிருக்கிறது. ஏனெனில், அது எல்லாவற்றாலும் பாதிக்கப்பட முடியும். ஆகையால், மனத்தின் மூலமாகப் பிரகாசிக்கின்ற ஒளியானது அதற்குச் சொந்தமல்ல. அப்படியானால், அது யாருடை-

யது? அது தன்னையே சாராம்சமாகக் கொண் டுள்ளதற்குச் சொந்தமா யிருக்கவேண்டும். அப்படி யானல் அது ஒருபொழுதும் அழியவும் முடியாது, மறிக்கவும் முடியாது, பலமுள்ளதாகவும் முடியாது, பல மில்லாததாகவும் முடியாது; அது ஸ்வயம்ஜோதி யா யுள்ளது; அது ஜோதியேதான். ஆத்மா அறி கிறது என்று இருக்க முடியாது; ஆனல், அது அறிவேதான். ஆத்மாவிற்கு இருப்பு உண்டு என்று இருக்க முடியாது; ஆனல், அது ஸத்தேதான். ஆத்மா ஆனந்தமா யிருக்கிறது என்று இருக்கமுடி யாது; அது ஆனந்தமேதான். எது ஆனந்தமா யுள்ளதோ அது தனது ஆனந்தத்தைக் கடன் வாங் கிக்கொண்டிருக்கின்றது; எது அறிவை உடைத்தா யுள்ளதோ அது தனது அறிவைப் பெற்றிருக்கின் றது; எதற்கு அன்னியோன்ய இருப்பு உண்டோ அதற்குப் பிரதிபலன இருப்பே யுள்ளது.

316. ஆத்மா இராத காலமே இல்லை. ஆத்மாவே இல்லாவிட்டால், காலம் எங்கே யிருக்கும்? கால மானது ஆத்மாவினுள்ளே உள்ளது. ஆத்மாவானது மனத்தின்மீது தனது சக்திகளைப் பிரதிபலிக்கச் செய்ய, மனமானது நினைக்கக், காலம் உண்டாகிறது. ஆத்மா இல்லாவிட்டால் நினைப்பு மில்லை. நினைப்பு இல்லாவிட்டால் காலமும் இல்லை. காலமே ஆத்மாவி லிருக்கிறபொழுது ஆத்மாவானது காலத்தில் இருப்ப தாக எப்படிச் சொல்லப்படக்கூடும்? அதற்கு மரண

மும் இல்லை, ஜன்னமு மில்லை. ஆதலால், அது இவ் வெல்லாப் பலவிதமான நிலைமைகளினூடும் சென்று கொண்டிருக்கிறது.

317. அவருடைய சூரியன், பலஹீனர்களுக்கும் பல முள்ளவர்களுக்கும் பிரகாசிக்கின்றான். அவருடைய காற்று, சாதுவின்மீதும் சண்டாளன்மீதும் ஒரே மாதிரியாக வீசுகின்றது. அவரே எல்லோருக்கும் நாதன், எல்லோருக்கும் பிதா, கிருபாநிதி, பக்ஷபாதம் அற்றவர். சிருஷ்டிக்கே நாதனாகிய அவர் நமது வாழ்க்கையின் சிறு விஷயங்களை நம்மைப்போலவே பார்க்கிறார் என்று நீ கூறுகிறாயா? கடவுளைப் பற்றிய என்ன தாழ்மையான எண்ணம் அது! நாம் இங்கு ஜீவிதமான முயற்சிகள் செய்துகொண்டும், ஈசுவரனும் நம்மைப்போலவே அவ்வளவு தீவிரமாய்க் கருதுவாரென்று மூடத்தனமாக நினைத்துக்கொண்டும், சிறு நாய்க்குட்டிகளைப்போ லிருக்கின்றோம். நாய்க்குட்டிகளின் விளையாட்டிற்குப் பொருள் என்ன என்பது அவருக்குத் தெரியும். அவரைத் தண்டிப்பவராகவும் வெகுமதி அளிப்பவராகவும் செய்து, அவர் மீது குற்றத்தைச் சுமத்துவதற்கு நாம் செய்யும் முயற்சிகள் மூடத்தனம் ஆனவையேயாம். அவர் எவரையும் தண்டிக்கிறது மில்லை; எவருக்கும் வெகுமதியளிக்கிறது மில்லை. அவருடைய அகண்ட கிருபையானது எல்லாக் காலங்களிலும், எல்லா இடங்களிலும், எல்லா நிலைமைகளிலும் தவறாது, பிறழாது

எல்லோருக்கும் வெட்டவெளியா யிருக்கின்றது. நாம் அதை எப்படி உபயோகிக்கிறோ மென்பது நம்மைச் சார்ந்திருக்கிறது. மனிதனையாவது, கடவுளையாவது, அல்லது உலகில் எவரையாவது குறை கூறாதே. நீ துன்பப்படுகிறபொழுது உன்னையே குறை கூறிக்கொள்.

318. மனுஷ்ய அறிவு எல்லாம் அனுபவத்திலிருந்தே உண்டாகிறது; அனுபவத்தின் மூலமாக அன்றி நாம் எதையும் அறிய முடியாது. நமது யுக்தியெல்லாம் பொதுவாக்கப்பட்ட அனுபவத்தையே ஆதாரமாகக் கொண்டுள்ளது. நமது அறிவெல்லாம் ஸமரஸப்படுத்தப்பட்ட அனுபவமே யாகும்.

319. காரியம் என்பது வெளிப்படுத்தப்பட்ட காரணமேயாகும். காரியத்திற்கும் காரணத்திற்கும் முக்கிய வித்தியாஸமே இல்லை.

320. ஒரு நேர் கோட்டில் சலனமே இல்லை. ஒவ்வொன்றும் வட்டமாகவே சலிக்கின்றது; எல்லையிலாது இழுக்கப்பட்ட ஒரு நேர் கோடானது ஒரு வட்ட மாகின்றது. அப்படியானால், எந்த ஆத்மாவிற்கும் நித்திய வீழ்ச்சி ஏற்பட முடியாது.

321. மனுஷ்யனுடைய ஆத்மா காரண காரிய நியதியைக் கடந்திருப்பதினால், அது ஒரு செயற்கைப் பொருள் அன்று; அது என்றும் ஸ்வதந்திரமா யுள்ளது; அது நியதிக்கு உட்பட்ட ஒவ்வொன்றுக்கும் அரசன்; அது ஒருபொழுதும் மறிக்காது. ஏனெனில்,

மரணம் என்றால், சேர்ந்துள்ள பதார்த்தங்களிடம் திரும்பச் செல்லுதல் என்று பொருள்; ஒருபொழுதும் சேர்க்கைப் பொருளாயில்லாதது ஒருபொழுதும் மரிக்க முடியாது; அது மரிக்கிறதென்று சொல்லுதல் வெறும் மூடத்தனமேயாம்.

322. ஜனனமும் மரணமும் ஒரே நாணயத்தின் ஒரு பக்கமும் மறு பக்கமுமாம். ஜனனம் என்பது மரணத்திற்கு இன்னொரு பெயர். மரணம் என்பது ஜனனத்திற்கு இன்னொரு பெயர்.

323. நீங்கள் பாபிகளென்று அற்ப மூடர்கள் உங்களிடம் கூறுகின்றார்கள். நீங்கள் ஒரு மூலையில் உட்கார்ந்து அழுகின்றீர்கள். நீங்கள் பாபிகள் என்று கூறுதல் மூடத்தனமாம், கொடுமையாம், பெரிய போக்கிரித்தனமாம். நீங்கள் எல்லோரும் ஈசுவரனே. நீங்கள் கடவுளைப் பார்த்து அவனை மனிதன் என்று அழைக்கவில்லையா? ஆகையால், உங்களுக்குத் துணிவு இருந்தால் அதன்மீது நில்லுங்கள்! — அதன் மீது உங்கள் வாழ்க்கை முழுவதையும் கட்டுங்கள்! ஒருவன் உங்கள் கழுத்தை அறுத்தால், 'வேண்டாம்' என்று சொல்லாதீர்கள்! ஏனெனில், நீங்கள் உங்கள் சொந்தக் கழுத்தையே அறுத்துக்கொள்கிறீர்கள். நீங்கள் ஒரு ஏழைக்கு உதவி செய்தால், மிகமிகச் சொற்ப கர்வத்தைக்கூட அடையாதீர்கள்! அது உங்களுக்கு உபாஸனையாம்; கர்வத்திற்குக் காரணமாகாது. பிரபஞ்சம் முழுவதும் நீங்களே யல்லவா;

நீங்கள் அல்லாத ஒருவர் எங்கே இருக்கிறார்? நீங்களே இந்தப் பிரபஞ்சத்திற்கு ஆத்மா. நீங்களே சூரியனும், சந்திரனும், நக்ஷத்திரங்களும்; எங்கும் பிரகாசிக்கின்றதும் நீங்களே. பிரபஞ்சம் முழுவதும் நீங்களே. நீங்கள் எவரை விரோதிக்கவோ, அல்லது போராடவோ போகிறீர்கள். அப்படியானால் நீயே அவர் என்று அறிந்துகொள். அதன் பிரகாரம் உன்னுடைய ஜீவிதம் முழுவதையும் அமைத்துக்கொள்! எவனொருவன் இதையறிந்து அதன் பிரகாரம் தனது ஜீவிதத்தை அமைத்துக்கொள்கிறானோ அவன் அந்தகாரத்தில் அலைகிறதில்லை.

324. பிரபஞ்சத்திற்குச் சிருஷ்டி கர்த்தாவும், பரிபாலகரும் ஆகிய ஈசுவரன் பிரகிருதியினின்றும் என்றும் வேறானவரென்றும், மனுஷ்ய ஆத்மாவினின்றும் என்றும் வேறானவரென்றும், துவைதிகள் நம்புகின்றார்கள். ஈசுவரன் நித்தியமானவர்; பிரகிருதி நித்தியமானது; அப்படியேதான் எல்லா ஜீவர்களும். பிரகிருதியும், ஜீவர்களும் வெளிப்பட்டு மாறுகிறார்கள். ஆனால், ஈசுவரன் ஒரே மாதிரியாக இருக்கிறார். இன்னும் துவைதிகள் சொல்லுகிற பிரகாரம் இந்த ஈசுவரன் ஸகுணமாயிருக்கிறார்; அவருக்குச் சரீரமுண்டு என்பதினாலல்ல, அவருக்குக் குணங்கள் உண்டு என்பதினால். அவருக்கு மனுஷ்ய லக்ஷணங்கள் உண்டு. அவர் கிருபை யுடையவராயிருக்கிறார்; அவர் ஞாயமுள்ளவராயிருக்கிறார்; அவர் சக்தி

யுள்ளவரா யிருக்கிறார்; அவர் ஸ
ருக்கு ஸமீபத்தில் போக முடியும்;
தித்துக் கேட்டுக்கொள்ள முடியு
அன்பு செலுத்த முடியும்; அவர்
அன்பு செலுத்துகிறார். ஒரே வா
ஞல் அவர் மனுஷ்ய லக்ஷணமுள்
ஆனால், மனிதனிலும் அநந்த ம
மனிதர்களிடமுள்ள தீய குணங்க
ரிட மில்லை. "அவர் அகண்ட கல்ய
களஞ்சியம்." இதுதான் அவர்
கூறும் லக்ஷணம்.

325. பந்தம் எது? ஜனிப்ப
கும் நேரிடும் ஆவசியகமே.

326. "நான், என்னுடையது
நிலைமையை ஒரு மனிதன் அடை
லாம் ஈஸ்வரனிடம் சமர்ப்பி
பொழுது, அவன் எல்லோரையும்
பலனிடத்து இச்சை யில்லாமல்
தியாகம் செய்யவும் தயாராகிற

பொழுதும் ஒரு ஆதாரத்தை நாடிக்
சிறிய, பலஹீனமான கொடிகளைப்
இருக்கின்றோம். ஒரு "சுககரமான
மென்று நான் எத்தனை தடவைக
டிருக்கிறேன்! மிகவும் சிலரே உண்
ர்கள். இன்னும் சிலரே உண்மையை
ர்கள்; மிகமிகச் சிலரே அனுபவத்
பின்பற்றத் துணிகிறார்கள். அது
ற்றமன்று; அதெல்லாம் மூளையின்
. எந்தப் புதிய நினைப்பும், முக்கிய
மாதிரி புதிய நினைப்பு ஒரு கலக்
ண்ணுகிறது; ஒரு புதிய் கால்வாயை
முயல்கிறது; அது அமைப்பைக்
ர்களை யசைத்து ஆட்டிவிடுகிறது.
திரி சுற்றுப்புறங்களில் பழகியிருக்
ன மூட நம்பிக்கைகளின் ஒரு பெருங்
கர்களின் மூட நம்பிக்கையை, வகு
கையை, நகர மூட நம்பிக்கையை,
க்கையை, எல்லாவற்றுக்கும் பின்

பின்பற்றத் துணிகிறவர்களும் ஆக ஒருசில தீரர்கள் இருக்கிறார்கள்.

329. சில சமயங்களில் படுக்கையில் படுத்துள்ள ஒரு வியாதியஸ்தன், கதவு தட்டுகிற சப்தம் கேட்கலாம். அவன் எழுந்திருந்து அதைத் திறக்கிறான்: அங்கே அவன் எவரையும் காண்கிறதில்லை. அவன் படுக்கைக்குத் திரும்பிச் செல்கிறான். மீண்டும் கதவைத் தட்டுகிற சப்தத்தை அவன் கேட்கிறான். அவன் எழுந்து சென்று கதவைத் திறக்கிறான். அங்கு எவரும் இல்லை. கடைசியாகக் கதவைத் தட்டுகிற சப்தமாகத் தான் நினைத்தது தனது சொந்த ஹிருதயத் துடிப்பேயென்று கண்டுகொள்கிறான். இவ்விதமாக மனிதன் தனக்குப் புறம்பே பல தேவதைகளையும் வீணே நாடி யலுத்து வட்டத்தை முடிக்கிறான். தான் புறப்பட்ட இடமாகிற ஆத்மாவிடம் திரும்பி வருகிறான். மலையிலும் வெளியிலும் தான் நாடிக்கொண்டிருந்த கடவுள், ஒவ்வொரு சிற்றாற்றிலும்-ஒவ்வொரு கோவிலிலும் - தேவாலயங்களிலும்--ஸ்வர்க்க லோகங்களிலும் தான் தேடிக்கொண்டிருந்த கடவுள், ஆகாயத்திலே யுட்கார்ந்துகொண்டு உலகத்தை யாள்வதாகத் தான் கற்பித்துக்கொண்டிருந்த அந்தக் கடவுள், தனது சொந்த ஆத்மாவே யென்று கண்டுகொள்கிறான். நானே அவர், அவரே நான். என்னைத் தவிர வேறெவரும் கடவு ளில்லை. இந்தச் சிறிய "நான்" ஒருபொழுதும் இருந்ததில்லை.

330. "உண்மையை அறிந்து, ஒரு விநாடி நேரத்திலே முக்தனாய்விடு." அந்தகார மெல்லாம் அப்பொழுது மறைந்துவிடும். மனிதன் பிரபஞ்சத்தின் அகண்ட வஸ்துவுடன் தன்னை யொன்றாகக் கண்டுகொண்டபொழுது, வேற்றுமை யெல்லாம் நின்றுவிட்டபொழுது, எல்லாப் புருஷர்களும் ஸ்திரீகளும், எல்லாக் கடவுளர்களும் தேவதூதர்களும், எல்லா மிருகங்களும் செடிகளும், பிரபஞ்சம் முழுதும், அவ்வேகத்துவத்தில் உருகிவிட்டால், அப்பொழுது பயமெல்லாம் மறைந்துவிடுகிறது. நான் என்னையே துன்புறுத்திக்கொள்ள முடியுமா? நான் என்னையே கொன்றுகொள்ள முடியுமா? நான் என்னையே வருத்திக்கொள்ள முடியுமா? நான் எவரைக் கண்டு பயப்படுவது? உன்னையே கண்டு நீ பயப்பட முடியுமா? அப்பொழுது துக்கமெல்லாம் நீங்கிவிடும்.

331. "பிறருக்கு நன்மையைச் செய்" என்று ஒவ்வொருவரும் சொல்வதேன்? இதற்கு நியாயம் என்ன? பெரியோரெல்லோரும், மனுஷ்ய வர்க்கத்தின் சகோதரத் தன்மையைப்பற்றிப் போதித்ததேன்? இன்னும் பெரியோர், ஜீவராசிகள் எல்லாவற்றினுடையவும் சகோதரத் தன்மையைப்பற்றிப் போதித்ததேன்? ஏனெனில், அவர்களுக்குத் தெரிந்தோ தெரியாமலோ, அவை யெல்லாவற்றுக்கும் பின்னே, அவர்களுடைய நியாயமற்ற சொந்த மூட நம்பிக்கைகள் எல்லாவற்றினூடும் ஆத்மாவின் நித்

திய ஒளியானது அநேகத் தன்மை எல்லாவற்றை யும் மறுத்துவிட்டுப், பிரபஞ்சம் முழுதும் ஒன்றே யென்று வற்புறுத்திக் கொண்டு எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தது.

332. மனுஷ்ய சரீரத்தில் ஜடமல்லாததாயுள்ளது ஆத்மா ஒன்றே. அது ஜடமல்லாததினாலே, அது சேர்க்கைப்பொருளா யிருக்க முடியாது: அது சேர்க்கைப் பொருளா யில்லாததினாலே, அது காரண காரிய நியதிக்குக் கீழ்ப்படிகிறதில்லை; ஆகையினால், அது அழிவற்றது.

333. அழிவற்றதற்கு ஆதி யிருக்க முடியாது. ஏனெனில், ஆதியுள்ள ஒவ்வொன்றுக்கும் அந்தம் இருக்கவேண்டும். அது ரூபமல்லாததா யிருக்க வேண்டு மென்றும் ஏற்படுகிறது. ஜட மில்லையேல் எவ்வுருவமும் இருக்க முடியாது. உருவத்தை யுடைய ஒவ்வொன்றுக்கும ஒரு ஆதியும் ஒரு அந்தமும் இருக்கவேண்டும்.

334. தனது வாயிலிருந்தே நூலை யுண்டு பண்ணித் தனது கூட்டைக் கட்டிக், கடைசியாகக் கூண்டுக்குள்ளே அகப்பட்டுக்கொள்ளுகிற சிலந்திப் பூச்சியைப்போல, நாம நமது கர்மங்களினாலே நம்மைக் கட்டிக்கொண் டிருக்கிறோம்; நம்மைச் சுற்றிலும் நமது செய்கைகளாம் வலைப்பின்னலை வீசியிருக்கிறோம். நாம் காரண காரிய நியதியைச் சலனத்துக்கு உட்படுத்திவிட்டோம். நாம் அதிலிருந்து

வெளியேறுவது கடினமாயிருக்க நாம் காண்கிறோம். நாம் சக்கரத்தைச் சலனத்துக்கு உட்படுத்தி விட்டோம். நாம் அதன் கீழ் நசுக்கப்படுகிறோம்.

335. இச்சை, அல்லது விருப்பம் உள்ளவரையில், அதுவே குறைவுள்ளது என்பதற்கு ஒரு நிச்சயமான அறிகுறி. பரிபூர்ண, சுவதந்திர வஸ்துவுக்கு எந்த இச்சையும் இருக்க முடியாது. கடவுள் எதையும் விரும்ப முடியாது. அவர் இச்சித்தால், அவர் கடவுளாயிருக்கமுடியாது; அவர் குறைவுள்ளவராயிருப்பார். ஆகையால், கடவுள் இதையும் அதையும் விரும்புகிறாரென்றும், முறையே கோபமும் சந்தோஷமு மடைகிறாரென்றும் கூறுவதெல்லாம் குழந்தைகளின் பேச்சேயாம். ஆனால், பொருளே யில்லை. ஆகையால், "ஒன்றையும் இச்சிக்காதே; எல்லா இச்சைகளையும் விட்டுவிடு; பரிபூர்ண திருப்தி யடைந்திரு" என்று எல்லா ஆசிரியர்களாலும் போதிக்கப்பட்டிருக்கிறது.

336. சக்தியின் ஒவ்வொரு வெளிப்பாடும் பிராணனே யாகும்; ஒவ்வொரு ஜட வெளிப்பாடும் ஆகாசமாகும்.

337. மரணம் என்றால் நாம் என்ன பொருள் கொள்கிறோம்? பிரிதல்; சேர்க்கையின் பயனாய் ஏற்பட்ட வஸ்துக்களுக்கே அது சாத்தியமாம்; இரண்டு அல்லது மூன்று பதார்த்தங்களினால் ஆக்கப்பெற்ற

எதுவும் பிரிதலடையத்தான் வேண்டும். சேர்க்கையின் பயன் இல்லாததே ஒருபொழுதும் பிரிக்கப்பட முடியாது; ஆகையால், ஒருபொழுதும் மரிக்க முடியாது. அது மரண மற்றது; அது என்றும் இருந்து வருகிறது; அது சிருஷ்டிக்கப்படாதது.

338. வேதாந்த சாஸ்திரத்தின் பிரகாரம், மனிதனே பிரபஞ்சத்தில் மிக மிக சிரேஷ்டமான ஜீவராசி; இந்தக் கர்ம உலகமே அதில் மிகமிகச் சிறந்த இடம்; ஏனெனில், இங்குதான் அவன் பரிபூரணனைவதற்குள்ள மிகமிகப் பெரிய, மிகமிகச் சிறந்த சந்தர்ப்பம் இருக்கிறது. தேவதூதர்கள், அல்லது கடவுளர்கள், நீங்கள் அவர்களை எப்படி யழைத்தாலும் சரி, அவர்கள் பரிபூர்ணர்களாகவேண்டுமானால் எல்லோரும் மனிதர்களாகவேண்டியவர்களே. இது, இந்த மனுஷ்ய வாழ்க்கை பெரிய மத்தியம்; அற்புதமான தராசு, ஆச்சர்யமான சந்தர்ப்பம்.

339. சரீரத்தைப் பார்க்கின்றவன் மனத்தைக் பார்க்கிறதில்லை; மனத்தைப் பார்க்கிறவன் ஆத்மாவைப் பார்க்கிறதில்லை; ஆத்மாவைப் பார்க்கிறவன்—அவனுக்குச் சரீரமும் மனமும் மறைந்துவிட்டன. சலனத்தை மாத்திரம் பார்க்கிறவன் அத்தியந்த அமைதியைப் பார்க்கிறதில்லை; அத்தியந்த அமைதியைப் பார்க்கிறவன்—அவனுக்குச் சலனம் மறைந்துவிட்டது.

340. ஈசுவரனைப் பூஜிக்கையில் நாம் எப்பொழுதும் நம்முள் மறைந்து கிடக்கும் ஆத்மாவையே பூஜித்து வருகிறோம்.

341. எவனொருவன் இன்னொருவனிடத்தில் பாபியைப் பார்க்கிறானோ, அவனே பாபி.

342. ஒரு சமயத்திலே நான் மேற்கு இந்தியாவில் இந்திய மகா சமுத்திரத்தின் கரையோரமாக உள்ள பாலைவனப் பிரதேசத்தில் யாத்திரை செய்து கொண்டிருந்தேன். நான் பாலைவனத்தினூடே அநேக நாட்கள் கால் நடையாக யாத்திரை செய்வது வழக்கம்; ஆனால், தினந்தோறும் அழகிய ஏரிகளையும், அவற்றைச் சுற்றிலும் விருக்ஷங்களையும், தலை கீழாயும் சலித்துக்கொண்டு முள்ள விருக்ஷங்களின் நிழல்களையும் கண்டு ஆச்சர்யப்பட்டேன். "எவ்வளவு ஆச்சர்யமான காக்ஷி! ஜனங்கள் இதை ஒரு பாலைவனப்பிரதேச மென்கிறார்களே!" என்று நானே சொல்லிக்கொண்டேன். நான் இந்த ஆச்சர்யமான ஏரிகளையும் விருக்ஷங்களையும் பார்த்துக்கொண்டே சுமார் ஒரு மாதம் யாத்திரை செய்தேன். ஒரு நாள் எனக்கு மிகவும் அதிகமாகத் தாகம் எடுத்தது; தண்ணீர் குடிக்க விரும்பினேன்; ஆகையால், இந்தத் தெளிவான, அழகிய ஏரிகளில் ஒன்றினிடம் செல்லப் புறப்பட்டேன்; நான் அதைச் சமீபிக்கவே, அது மறைந்துவிட்டது. ஒரு மின்னல் வெட்டுப்போல எனது மூளையில் "நான் எனது வாழ்நாள் முழுதும்

படித்துள்ள கானல் நீர் இதுதான்" என்ற எண்ணம் உண்டாயிற்று; அதனுடனே, இந்த மாதம் முழுதும், தினந்தோறும் நான் இந்தக் கானல் நீரைப் பார்த்துக்கொண்டிருந்தேன்; ஆனால், அறியவில்லை என்ற எண்ணமும் உண்டாயிற்று. மறுநாட் காலையில் நான் நடக்க ஆரம்பித்தேன். மறுபடியும் ஏரி தோன்றிற்று; ஆனால், அதனுடனே கூட, அது கானல் நீர், உண்மையான ஏரியல்ல என்ற எண்ணமும் உண்டாயிற்று. அதுபோலவேதான் உள்ளது பிரபஞ்ச விஷயமும்.

343. இவ்வுலகில் வசிக்கின்ற புருஷர்களிலும் ஸ்திரீகளிலும் கோடியில் ஒருவர் சிறிது யுட்கார்ந்து ஒரு சில நிமிஷ நேரம் "நீங்கள் எல்லோரும் ஈச்வரன்; ஏ, மனிதர்களே! ஏ, மிருகங்களே! ஜீவராசிகளே! நீங்கள் எல்லோரும் ஒரே தெய்வத்தின் வெளிப்பாடுகள்!" என்று கூறுவார்களானால், உலகு முழுதும் அரை மணி நேரத்தில் மாறுதலடைந்து விடும்.

344. இந்த வேதாந்த சாஸ்திரமானது ஆரண்யங்களிலே மாத்திரம் செய்யப்பட்ட தியானத்தின் பலனல்ல என்பதையும், ஆனால், அதில் மிகமிகச் சிறந்த பாகங்கள் தினசரி வாழ்க்கை விஷயங்களிலே மிக மிகச் சுறுசுறுப்பாயிருந்த மூளைகளால் சிந்திக்கப்பட்டு வெளிப்படுத்தப்பட்டன வென்பதை நாம் பல உபநிஷத்துக்களிலும் காண்கிறோம். ஒரு சுயேச்

சாதிபதியாகிய அரசனைப் பார்க்கிலும், லக்ஷக்கணக்கான ஜனங்களை யாள்கின்றவனைப் பார்க்கிலும், சுறுசுறுப்பாயுள்ள ஒரு மனிதனை நாம் கற்பிக்க முடியாது; ஆயினும், இவ்வரசர்களில் சிலர் ஆழ்ந்த சிந்தனை புருஷர்களாயிருந்தார்கள்.

345. வேதாந்தமானது லக்ஷியத்தைப் போதிக்கின்றது; லக்ஷியமானது அநுபவத்துக்கு, உண்மைநிலைக்கு எப்பொழுதும் வெகு தூரத்திலேயே யுள்ளது என்பது நமக்குத் தெரியும். மனுஷ்ய இயற்கையிலே இரண்டு வாசனைகள் உண்டு; ஒன்று, லக்ஷியத்தை வாழ்க்கையுடன் சரிப்படுத்துவது; மற்றது, வாழ்க்கையை லக்ஷியத்தினளவு உயர்த்துவது. இதையறிந்துகொள்ள வேண்டியது ஒரு பெரிய விஷயம். ஏனெனில், முன்னர்க் கூறப்பட்ட வாசனை நமது வாழ்நாட்களின் தூண்டுதலாம்.

346. ஜகத்திலுள்ள சக்திகளெல்லாம் முன்னரே நம்முடையவையே. நாமே நமது கண்களுக்கு முன்னே நமது கைகளை வைத்துக்கொண்டு, அந்தகாரமாயிருக்கிறதென்று கூச்சலிடுகிறோம். நம்மைச் சுற்றிலும் அந்தகாரமேயில்லையென்பதை யறிந்துகொள்ளுங்கள்! கைகளை யெடுத்துவிடுங்கள்! ஆதியிலிருந்து உள்ள ஒளி இருக்கின்றது. அந்தகாரம் ஒருபொழுதும் இருந்ததில்லை; பலஹீனம் ஒரு பொழுதும் இருந்ததில்லை. மூடர்களாகிய நாம் பலஹீனர்க

ளென்று கூச்சலிடுகிறோம்; மூடர்களாகிய நாம் அசுத்தர்களென்று கூச்சலிடுகிறோம்.

347. மாம்ச வினைத்தனங்களை மிகமிக உயர்ந்த லக்ஷியங்களுடன் சமரஸப்படுத்திக் கொள்ளுதல் என்றும், மனுஷ்யனுக்குச் சமானமாக ஈசுவரனைக் கீழே இழுக்கக் கூடிய இந்தப் பொய் எண்ணம் எங்கு உண்டாகிறதோ, அங்கு அழிவு உண்டாகிறது. மனிதன் உலக அடிமைத்தனத்துக்குக் கொண்டு வரப்பட்டுக் கீழ்மைப் படுத்தப்படக் கூடாது; ஆனால், ஈஸ்வரனிடம் உயர்த்தப்பட வேண்டும்.

348. எவரையும் குற்றம் கூறாதே; உன்னால் உதவி செய்ய முடியுமானால், அப்படிச் செய். உன்னால் முடியாவிட்டால் உனது கைகளைக் கட்டிக் கொண்டு, உனது ஸகோதரர்களை ஆசீர்வதித்து, அவர்களுடைய வழியிலே அவர்களைப் போக விட்டு விடு. கீழே இழுத்து விடுவதும், குற்றம் கூறுவதும் வேலை செய்வதற்கு மார்க்கமன்று. வேலை ஒரு பொழுதும் அம்மாதிரி செய்து முடிக்கப்பட்டதில்லை. பிறரைக் குற்றம் கூறுவதிலேயே நாம் நமது சக்திகளைச் செலவழிக்கிறோம். கண்டித்தலும், குற்றம் கூறுதலும் நமது சக்திகளைச் செலவழிக்கும் ஒரு வீண் மார்க்கமேயாம்; ஏனெனில், கடைசியாக, எல்லாரும் ஒரே வஸ்துவைத்தான் பார்க்கிறார்களென்றும், அநேகமாக ஒரே லக்ஷி

யத்தைத்தான் நெருங்கி வருகிறார்களென்றும், நமது வித்தியாசங்களில் பெரும்பான்மையும் சொல்லில் ஏற்பட்ட வித்தியாசங்களே யென்றும், நாம் அறிந்துகொள்கிறோம்.

349. மதமானது எப்பொழுதும் ஒரு அனுபவ சாத்தியமான சாஸ்திரம்; வார்த்தை மாத்திரமா யுள்ள மதம் எப்பொழுதும் இருந்தது மில்லை. அது முதலில் அனுபவம், பின்னர்தான் அறிவு.

350. காரணம் எத்தகையதா யுள்ளதோ, அத் தகையதாகவே காரியமும் இருக்கும். காரணம் முடி வுள்ளதானால், காரியமும் முடிவுள்ளதா யிருக்க வேண்டும். காரணம் நித்தியமானதால், காரியமும் நித்தியமா யிருக்கக்கூடும்; ஆனால், சத்கர்மம் செய்த லும் வேறெல்லா விஷயங்களுமாகிய இக் காரணங்க ளெல்லாம் முடிவுள்ள காரணங்களேயாம்; ஆகையி னாலே முடிவற்ற பயனை யளிக்க முடியாது.

351. வேலை செய்வது, மின்சார சக்தியினுடைய அல்லது வேறெதினுடையவும் வேகத்தினும் அநந்தம் மடங்கு அதிக வேகத்துடனே சலிப்பது உணர்ச்சி யேயாம். நீ உணர்கிறாயா?—அதுதான் கேள்வி. நீ உணர்கிறாயானால், நீ ஈசுவரனைப் பார்ப்பாய். உனக்கு இன்று உள்ள உணர்ச்சிதான் அதிகரித்து, ஈசுவரத் தன்மை யடைந்து, மிகமிக உயர்ந்த மேடை யிலே உயர்த்திவைக்கப்பட்டுக் கடைசியாக அது ஒவ்வொன்றையும் உணர்கிறது; ஒவ்வொன்றினு

மூள்ள ஏகத்துவத்தை யுணர்கிறது; கடைசியில் அது தன்னிலும் பிறரிலும் ஈசுவரனை யுணர்கிறது. புத்தியினால் ஒருபொழுதும் அப்படிச் செய்ய முடியாது. "வார்த்தைகள் பேசுவதிலே வெவ்வேறு விதங்கள், கிரந்தங்களின் மூலங்களை வியாக்கியானம் பண்ணுவதிலே வெவ்வேறு மாதிரிகள் இவை வித்துவான்களுடைய சந்தோஷத்துக்கேயாம், ஜீவனுடைய மோக்ஷத்துக்காகவன்று."

352. தீர்க்கதரிசிகளின் சக்தி எங்கே யிருந்தது என்பதை உலக சரித்திரத்திலிருந்து நீங்கள் தெரிந்து கொள்ளவில்லையா? அது எங்கே யிருந்தது? புத்தியிலா? அவர்களில் எவரேனும் தத்துவ சாஸ்திரத்தைப்பற்றித், தர்க்க சாஸ்திரத்தின் மிகமிகக் குழப்பமான யுக்தி நியாயங்களைப்பற்றி ஒரு நேர்த்தியான புத்தகம் எழுதியதுண்டா? அவர்களில் ஒருவரும் அப்படிச் செய்ததில்லை. அவர்கள் ஒரு சில வார்த்தைகளே பேசினார்கள். கிறிஸ்துவைப்போல உணருங்கள்! நீங்கள் கிறிஸ்துவாய்விடுவீர்கள். புத்தரைப் போல் உணருங்கள்! நீங்கள் புத்தராய்விடுவீர்கள். உயிராய், பலமாய், பிராணாதாரமாய் இருப்பது உணர்ச்சியே; இஃதில்லையேல் எவ்வளவு புத்திச் சுறுசுறுப்பும் ஈசுவரனை யடைவிக்காது.

353. உள்ளதெல்லாம் நீயே; நீ அகண்ட வஸ்து; பகுக்கப்பட முடியாதது; அதற்குப் பாகங்கள் இருக்க முடியா; ஏனெனில், ஒவ்வொரு பாகமும்

அகண்டமாய்விடும்; அப்படியாயின், பாகமானது முழுவதுக்கும் சரியாக ஒற்றுமைப்பட்டுவிடும்; அது கூடாத காரியம். ஆகையால், நீங்கள் அதனுடைய பாகங்கள் என்னும் எண்ணமானது, நீ இன்னார் என்றுள்ள எண்ணமானது, ஒருபொழுதும் உண்மையாயிருக்க முடியாது. அது ஒரு பகற் கனவேயாம்; இதை யறிந்து, முக்தி யடைவாய். இதுதான் அத்வைத முடிபு.

354. முக்தியே பிரகிருதி யெல்லாவற்றினுடையவும் லக்ஷியம்.

355. போதுமான பொருள் இருந்தும் கிரகஸ்தனானவன் தனது பந்துக்களுக்கும் ஏழைகளுக்கும் கொடுத்து உதவாமற் போவானேயானால், அவன் ஒரு மிருகமே யென்று அறிந்துகொள். அவன் மனுஷ்யராசி யல்லன்.

356. விரோதிகள் விஷயத்திலே கிரகஸ்தனானவன் ஒரு வீரனா யிருக்கவேண்டும். அப்பொழுது அவன் எதிர்க்க வேண்டும். கிரகஸ்தனுடைய தர்மம் அதுதான். அவன் ஒரு மூலையில் உட்கார்ந்து அழுதுகொண்டு, எதிர்க்காதிருத்தல் என்பதைப் பற்றி மூடத்தனம் பேசக்கூடாது. அவன் அவனுடைய நண்பர்களிடத்தும் பந்துக்களிடத்தும் ஒரு ஆட்டுக்குட்டியைப் போல அமைதியா யிருக்க வேண்டும்.

கொடியவர்களுக்கு மரியாதை செய்யாதிருத்த லே கிரகஸ்தனுடைய தர்மம்; ஏனெனில், அவன் உலகத்திலுள்ள கொடிய ஜனங்களை மரியாதை செய்வானானால், அவன் கொடுமையை ஆதரித்தவனாகிறான்; மரியாதைக்கு உரியவர்களை, நல்ல ஜனங்களை, அவன் அவமதிப்பானானால், அது ஒரு பெருந் தப்பிதமாம். அவன், நட்பிலே அளவுக்கு மிஞ்சியவனா யிருக்கக் கூடாது; அவன், வழி தவறி எங்குப் பார்த்தாலும் ஸ்நேகிதர்களை உண்டுபண்ணிக்கொண்டே போகக் கூடாது; அவன் யாருடன் நட்புக்கொள்ள விரும்புகிறானோ அவர்களுடைய செய்கைகளையும், அவர்கள் பிறரிடத்தில் நடந்துகொள்ளும் மாதிரிகளையும் கவனித்து, அவற்றை ஆராய்ந்து பார்த்து, பின்னர் ஸ்நேகம் செய்துகொள்ளவேண்டியது.

அவன் இந்த மூன்று விஷயங்களையும் பற்றிப் பேசக்கூடாது. அவன் தனது சொந்தக் கீர்த்தியைப் பற்றிப் பகிரங்கமாகப் பேசக்கூடாது; அவன் தனது சொந்தப் பெயரைப்பற்றியாவது, அல்லது தனது சொந்த சக்திகளைப்பற்றியாவது பிரசங்கிக்கக் கூடாது; அவன், தன்னுடைய சொந்த ஐசுவரியத்தைப்பற்றியாவது, அல்லது தன்னிடம் தனிமையில் சொல்லப்பட்ட எதைப்பற்றியேனும் பேசக் கூடாது.

357. கிரகஸ்தனே ஜன சமுதாயம் முழுதுக்கும் அஸ்திவாரமாய், ஆதாரமாய் உள்ளவன்; அவனே

முக்கியமாகச் சம்பாதிப்பவன். எளியவர்களும், பல ஹீனர்களும், குழந்தைகளும், வேலை செய்யாத ஸ்திரீக ளும்—எல்லோரும் கிரகஸ்தனைச் சார்ந்தே ஜீவிக் கின்றனர்; ஆகையால், அவன் செய்ய வேண்டிய சில தர்மங்கள் இருக்கவேண்டும்; அவன் அவற்றைச் செய்வதற்கு வன்மை யுள்ளவனே யென்று இந்தத் தர்மங்கள் அவனை யுணரச் செய்யவேண்டும்; இவை அவன் தன்னுடைய லக்ஷியத்துக்குக் கீழ்ப்பட்ட விஷயங்களைச் செய்கிறதாக அவன் நினைத்துக் கொள்ளுமாறு செய்யக்கூடாது. ஆகையால், அவன் பலஹீனமான எதையேனும் செய்துவிட்டால், அல் லது எதேனும் தப்பிதம் செய்துவிட்டால், அவன் அதைப் பகிரங்கமாகச் சொல்லக்கூடாது; அவன் எதேனும் ஒரு முயற்சியி லிறங்கியிருந்து, அதில் அவன் தவறுவது நிச்சயமென்று தெரிந்துகொள் வானேயானால், அவன் அதைப்பற்றிப் பேசக்கூடாது. அப்படித் தன்னைத்தானே குறை கூறிக்கொள்ளுதல் அநாவசிய மென்பது மாத்திரமன்று; அந்த மனித னுக்கு எக்கத்தை யுண்டுபண்ணி வாழ்க்கையிலே அவன் நியாயமாகச் செய்ய வேண்டிய கடமைகளைச் செய்வதற்கு அவனைத் தகுதியற்றவனாகவும் செய்து விடுகிறது. அதே காலத்தில் அவன், முதலாவது அறிவு, இரண்டாவது ஐசுவர்யம் இவற்றை அடைவ தற்கு அவன் அரும்பாடு படவேண்டும். அது அவனுடைய தர்மம்; அவன் தன்னுடைய தர்

மத்தைச் செய்யாமற்போனால், அவனுக்கு உலகிலே இடமில்லை. ஐசுவர்யம் அடைய அரும்பாடு படாத கிரகஸ்தன் துன்மார்க்கனே யாவன் அவன் சோம் பேறியாகிச், சோம்பர் வாழ்க்கை வாழ்வதிலே திருப்தியுற்றிருந்தால், அவன் துன்மார்க்கனே யாவன்; ஏனெனில் நூற்றுக் கணக்கானவர்கள் அவனைச் சார்ந்திருக்கிறார்கள்.

358. இந்த நகரத்திலே நூற்றுக்கணக்கானவர்கள் பணக்காரர்களாக முயன்றும், பணத்தைச் சம்பாதித்தும் இராவிட்டால், இந்த நாகரிகமும்-இந்தச் சத்திரங்களும் - பெரு வீடுகளும் எல்லாம் எங்கே யிருக்கும்?

359. மனிதனானவன் உலகினரின் பரிகாசத்தையும் சேவையையும் கவனியாமல் தனது கடமைகளைச் செய்துகொண்டு செல்லல்வேண்டும்.

360. நினைப்புக்கும் யுக்திக்கும் அப்பாலுள்ள அவஸ்தையே மிகமிகச் சிரேஷ்டமான அவஸ்தையென்பதற்கு யாது பிரமாணமுள்ளது? முதலாவது: உலகத்துப் பெரியோரெல்லோரும்—வெறும் பேச்சுப் பேசுகிறவர்களைப் பார்க்கிலும் அதிகம் பெரியோர்—உலகை அசைத்தவர்கள், ஸ்வயநலப் பயனை ஒருபொழுதும் கருதாதவர்கள், இந்த ஜீவிதமானது அதீதமாயுள்ள அகண்ட வஸ்துவை நோக்கிச் செல்லும் மார்க்கத்திலே ஒருபடி மாத்திரமேயாம் என்று கூறியிருக்கிறார்கள். இரண்டாவது: அவர்கள் அப்

படிச் சொல்வது மாத்திர மில்லை; எல்லோரும் அவர்களுடைய அடிச்சுவடுகளைப் பின்பற்றி நடக்க முடியும்படி, ஒவ்வொருவருக்கும் வழியைக் காண்பித்துத், தங்களுடைய உபாயங்களை விவரித்துக் கூறுகிறார்கள். மூன்றாவது: வேறு மார்க்கம் சொல்லப்படவே யில்லை. வேறு நியாயமே யில்லை.

361. ஓங்காரத் தியானமும் ஈசுவரனிடத்தில் சரணாகதியும் மனத்தைப் பலப்படுத்திப், புதிய சக்தியை அளிக்கும்.

362. சத்திய சக்தியானது உன்னிடத்தில் ஸ்தாபிக்கப்பட்டுவிட்டால் அப்பொழுது நீ கனவில் கூட ஒருபொழுதும் அசத்தியம் சொல்லமாட்டாய். நீ நினைப்பிலும் வாக்கிலும் செய்கையிலும் உண்மையாயிருப்பாய். நீ சொல்வதெல்லாம் சத்தியமே யாய் விடும். நீ ஒருவனை நோக்கி, "ஆநந்தமாயிரு" என்று சொல்லலாம்; அவன் ஆநந்த மடைந்துவிடுவான். ஒருவன் வியாதியாயிருந்து, நீ அவனை நோக்கிச், "சுகமடைந்து விடு" என்று சொன்னால், அவன் உடனே சொஸ்தமடைந்துவிடுவான்.

363. பிரமச்சரிய மூலைக்கு அபாரமான ஊக்கமும், ராக்ஷதத்தன்மை வாய்ந்த சங்கற்ப சக்தியும் உண்டு. பிரமச்சர்ய மில்லையேல், ஆத்மீக பல முண்டாதல் முடியாது. இந்திரிய நிக்கிரகமானது மனுஷ்ய வர்க்கத்தை யடக்கி யாள்வதற்கு ஒரு அற்புதமான சக்தியை அளிக்கிறது. மனுஷ்யர்களுடைய

ஆத்மீகத் தலைவர்களெல்லாம் ஜிதேந்திரியர்களாகவே யிருந்திருக்கிறார்கள்; இது அவர்களுக்குச் சக்தியை அளித்தது. ஆகையால், 'யோகியானவன் ஜிதேந்திரியனா யிருக்கவேண்டும்.

364. கத்தி முனைபோன்ற கூர்மையாய்க், கடப்பதற்குக் கடினமானதாய் முக்தி மார்க்கம் உள்ளது.

365. மனிதன் தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் ஏஜனானவன் ஆகிறான்.

366. ஸ்வதந்திரமா யுள்ளது யாது? ஸ்வதந்திரமாயுள்ளது நிச்சயமாய்க் காரண காரியத்துக்கு அதீதமா யிருக்கவேண்டும்.

367. வேறெல்லாச் சப்தங்களும் வெளிப்பாடுகளா யிருக்கவேண்டுமென்று சொல்வதற்கு ஆதாரமாய் மூல சப்தம் ஏதேனும் ஒன்று, மிகமிக இயற்கையான சப்தமாய் ஒன்று உண்டா? ஓங்காரமானது அத்தகைய சப்தம்; எல்லா சப்தங்களினுடையவும் அஸ்திவாரம். முதலாவது எழுத்தாகிய அகாரமானது, மூல சப்தமா யிருக்கிறது; திறவுகோல் போன் றிருக்கிறது; நாக்கின் எந்தப் பாகத்தையாவது, அல்லது அண்ணத்தையாவது தொடாமல் உச்சரிக்கப்படுகிறது. மகாரமானது, உதடுகள் மூடுகின்றதினால் உண்டாகின்றது; ஆதலால், கடைசி சப்தத்தைக் குறிப்பிடுகின்றது; உகாரமானது, மூலத்திலிருந்தே வாயின் சப்த முனை வரையில் உருண்டு வருகிறது. இவ்விதமாக ஓங்காரமானது

சப்த உற்பத்திக் காக்ஷி முழுவதையும் குறிப்பிடு கிறது.

368. நிஷ்டையிலிருக்கும் அவஸ்தையே வாழ்க்கையில் மிகமிக உயர்ந்த அவஸ்தையாகும். இச்சையுள்ளவரையில் உண்மையான ஆநந்தம் உண்டாகவே முடியாது. விஷயங்களைச் சிந்தனை செய்து, சாக்ஷி போன்று இருந்து செய்யும் ஆராய்ச்சியே உண்மையான சுகத்தையும் போகத்தையும் அளிக்கின்றது. மிருகத்துக்கு ஐம்புலன்களிலே ஆநந்தம்; மனிதனுக்குப் புத்தியிலே ஆநந்தம்; தேவருக்கு ஆத்மீக நிஷ்டையிலே ஆநந்தம்.

369. யோகியானவன் எப்பொழுதும் அநுஷ்டானம் செய்ய வேண்டும். அவன் ஏகாந்தத்தில் வாழ முயற்சிக்க வேண்டும்; வெவ்வேறு விதமான ஜனங்களுடைய சகவாசமானது மனத்தைக் கலைத்து விடுகிறது; அவன் அதிகமாகப் பேசக் கூடாது; ஏனெனில், பேசுவது மனத்தைக் கலைத்துவிடுகிறது; அதிகமாக வேலை செய்யக் கூடாது; ஏனெனில், அளவுக்கு மிஞ்சிய வேலையானது மனத்தைக் கலைத்துவிடுகிறது; நாள் முழுதும் கடினமாக வேலை செய்த பின்னர், மனமானது அடக்கப்பட முடியாது. மேற் சொன்ன விதிகளை யநுசரிப்பவன் யோகியாய்விடுகிறான்.

370. நான் உன்னிடம் பேசிக்கொண்டிருக்கிறேன். நான் என்ன செய்ய முயற்சிக்கிறேன்?

சொல்லப்போனால், நான் எனது மனத்தை ஒருவித சலன ஸ்திதிக்குக் கொண்டுவருகிறேன்; அந்த ஸ்திதிக்கு அதைக் கொண்டுவருவதிலே நான் எவ்வளவுக் கெவ்வளவு அதிகமாக ஜயமடைகிறேனோ அவ்வளவுக் கவ்வளவு அதிகமாக நான் சொல்வதினால் நீ பாதிக்கப்படுவாய். நான் என்று அதிக உற்சாகத்தோடு இருக்கிறேனோ அன்று நீங்களும் பிரசங்கத்திலே ஆனந்த மடைகிறீர்க ளென்பதை நீங்கள் எல்லோரும் அறிவீர்கள். நான் உற்சாகக் குறைவாயிருந்தால் நீங்களும் சந்தோஷக் குறைவை யுணர்கிறீர்கள்.

371. உலகிலே ராக்ஷதத் தன்மை வாய்ந்த சங்கற்ப சக்தியை யுடைய புருஷர்கள், உலக சலன கர்த்தாக்கள் தங்கள் பிராணனை ஓர் உயர்ந்த சலன ஸ்திதிக்குக் கொண்டுவருதல் முடியும்; பிறரை ஒரு நொடியிலே பற்றிக்கொள்ளும்படி அது அவ்வளவு மிக்கதாயும் சக்தி வாய்ந்ததாயும் இருக்கிறது; ஆயிரக் கணக்கானவர்கள் அவர்களிடத்தே ஆகருஷிக்கப்படுகிறார்கள்; அவர்கள் நினைக்கிறபடியே உலகில் அனேகமாக ஜனங்கள் நினைக்கிறார்கள். உலகத்துப் பெரிய தீர்க்கதரிசிகள் பிராணனை மிகமிக ஆச்சர்யமாய் அடக்கி யாண்டுவந்தார்கள்; அது அவர்களுக்கு அபாரமான சங்கற்ப சக்தியை அளித்தது; அவர்கள் தங்கள் பிராணனை மிகமிக உயர்ந்த சலன ஸ்திதிக்குக் கொண்டுவந்துவிட்டார்கள். இதுதான்

அவர்களுக்கு உலகை யளிக்கும்படியான சக்தியை அளித்தது. இப்படி யடக்கி யாள்வதிலிருந்துதான் சக்தியின் வெளிப்பாடுகளெல்லாம் கிளம்புகின்றன. மனிதர்கள் ரகஸ்யத்தை யறியார்கள்; ஆனல், இது தான் காரணம்.

372. நீ உலகுக்கு ஏதேனும் செய்ய வேண்டுமென்ற எண்ணத்தை உனது மனத்திலிருந்து துரத்திவிடு; உலகமானது உன்னிடமிருந்து எவ்வித உதவியையும் நாடுகிறதில்லை. எந்த மனிதனும் தான் உலகுக்கு உதவி செய்யப் பிறந்திருப்பதாக நினைப்பது முழு மூடத்தனமேயாம்; அது கர்வமேயாம்; அது நற்குணம் போன்று நடிக்கும் ஸ்வயநலமேயாம்.

373. ஹடயோகியின் முக்கிய கருத்து, ஒரே லக்ஷியம், சௌக்கியமா யிருப்பதேயாம். 'வியாதியில் விழக்கூடாது' என்று அவன் தீர்மானித்துக் கொள்கிறன்; அவன் ஒருபொழுதும் வியாதியில் விழுகிறதில்லை. அவன் நெடுநாள் ஜீவிக்கின்றன்; நூறு வருஷம் அவனுக்கு ஒரு பெரிதன்று; அவனுக்கு நூற்றைம்பது வயதாகியும் ஒரு ரோமம்கூட நரைக்காமல் மிகவும் பால்யமாயும் புதியவன் போன்றும் இருக்கிறன். ஆனல், அவ்வளவுதான். ஒரு ஆலமரம், சில வேளைகளில் 5000 வருஷங்கள் ஜீவிக்கின்றது; ஆனல், அது ஒரு ஆலமரமே யொழிய வேறென்று மில்லை. அப்படியே ஒரு மனிதன் நெடு

நாள் ஜீவித்தால், அவன் சௌக்கியமாயுள்ள ஒரு மிருகமேயாவன்.

374. "இயற்கையிலே நீண்ட காலத்தில் செய்து முடிக்க வேண்டியதைச் செய்கையின் நெருக்கத்திலே சொற்ப காலத்துக்குள் செய்து முடிக்க முடியும்" என்று யோகி கூறுகிறான்.

375. ஈஸ்வரோபாசனையானது ஸ்துதியினாலும், தியானத்தினாலும், பக்தியினாலுமாகும்.

376. நெருப்புள்ள இடத்திலே, அல்லது தண்ணீரிலே, அல்லது சருகுகள் நிறைந்த இடத்திலே, அநேக எறும்புப் புற்றுக்கள் உள்ள இடத்திலே, துஷ்டமிருகங்கள் அல்லது அபாயமுள்ள இடத்திலே, நான்கு தெருக்கள் சந்திக்கின்ற இடத்திலே, அளவுக்கு மிஞ்சிய சப்தம் உள்ள இடத்திலே, அநேக துஷ்டர்கள் உள்ள இடத்திலே, யோகமானது அநுஷ்டிக்கப்படக்கூடாது.

377. எந்தப் பைத்தியக்காரனும் இந்த அறைக்குள்ளே வந்து தன்னைச் சுற்றிலும் தேவதூதர்களைக் காண்பதாகக் கூறலாம்; அது பிரமாண மாகாது. முதலாவது: அது உண்மையறிவா யிருக்கவேண்டும்; இரண்டாவது: அது முன்னிருந்த அறிவுக்கு விரோதமா யிருக்கக் கூடாது; மூன்றாவது: அதை வெளியே கூறுகிற மனிதனுடைய நடத்தையைப் பொறுத்திருக்கவேண்டும். மனிதனுடைய நடத்தையானது அவன் சொல்வதைப் போன்று அவ்வளவு முக்கிய

மான தல்ல என்று சொல்லக் கேட்டிருக்கிறேன்; அவன் என்ன கூறுகிறனென்பதை நாம் முதலில் கேட்கவேண்டும். இது வேறு விஷயங்களில் உண்மையா யிருக்கலாம். ஒருவன் கொடியவனு யிருக்கலாம்; ஆயினும், வானசாஸ்திர விஷயத்திலே நூதனமாக ஒன்றைக் கண்டுபிடிக்கலாம்; ஆனல், மத விஷயத்திலே அது வேறு விதம். ஏனெனில், எந்த அசுத்த மனிதனுக்கும் மத உண்மைகளை யடைவதற்குச் சக்தி கிடையாது. ஆகையால், எவனொருவன் தான் ஆப்தனென்று சொல்லிக்கொள்கிறனே அவன் பரிபூரணமாய்த் தன்னலமற்றுப் பரிசுத்த புருஷனு யிருக்கிறனு என்பதை நாம் எல்லாவற்றுக்கும் முதலில் பார்த்துக் கொள்ளவேண்டும்; இரண்டாவது: 'அவன் பஞ்சேந்திரிய அனுபவங்கட்கு அதீதமாய்விட்டானு?' என்பதைப் பார்க்கவேண்டும். மூன்றாவது: 'அவன் கூறுவது மனுஷ்ய வர்க்கத்தின் முந்திய அறிவுக்கு விரோதமா யில்லையா?' என்பதையும் பார்க்கவேண்டும். புதிதாகக் கண்டு பிடிக்கப்பட்ட எந்த உண்மையும் முன்னர்க் கண்டு பிடிக்கப்பட்ட உண்மைக்கு நேர்விரோதமா யிராது. நான்காவது: அந்த உண்மைக்குப் பிரமாண சாத்திய மிருக்கவேண்டும்.

378. தேவர்களும் மற்றவர்களும் யோகிக்குத் தூண்டுதல் கொடுத்து அவனைக் கெடுப்பதற்கு வருவார்கள். எவரும் பரிபூர்ண முக்தர்களாக அவர்கள்

விரும்புகிறதில்லை. நம்மைப் போலவே அவர்கள் பொறாமை யுள்ளவர்கள். சில சமயங்களில் நம்மிலும் அதிகம் பொறாமை யுள்ளவர்களுமாம். அவர்கள் தங்களுடைய ஸ்தானங்களை இழந்துவிடுவோமோ என்று மிகவும் பயப்படுகிறார்கள். பரிபூர்ணத்துவம் அடையாத யோகிகள் மரித்துத் தேவர்களாகிறார்கள்; நேரான ரஸ்தாவை விட்டுவிட்டு, அவர்கள் பக்கத்துத் தெருக்களில் ஒன்றில் நுழைந்து, இந்தச் சக்திகளை யடைகிறார்கள். அவர்கள் மறுபடியும் பிறக்க வேண்டியிருக்கிறது. ஆனால், இந்தத் தூண்டுதல்களை எதிர்த்து நிற்பதற்குப் போதிய பலம் வாய்ந்து, லக்ஷியத்தை நேராக நோக்கிச் செல்கிறவனே முக்தனாகிறான்.

379. இந்த வேதாந்த சாஸ்திரமானது ஆரண்யங்களில் மாத்திரம் செய்யப்பட்ட சிந்தனையின் பலனல்ல வென்பதையும், ஆனால், அதன் மிகமிகச் சிறந்த பாகங்கள் தினசரி வாழ்க்கை விஷயங்களிலே மிக மிகச் சுறுசுறுப்பாக இருந்த மூளைகளினால் ஆலோசிக்கப்பட்டு வெளிப்படுத்தப்பட்டவையே என்பதையும் பல உபநிஷத்துக்களிலும் நாம் காண்கிறோம். தன்னிச்சைபோல் செங்கோல் செலுத்தும் அரசனைப் பார்க்கிலும், லக்ஷக் கணக்கான ஜனங்களை யாட்சி புரிகின்ற ஒருவனைப்பார்க்கிலும், அதிக சுறுசுறுப்பு வாய்ந்த ஒரு மனிதனை நாம் கற்பித்துக்கொள்ளக்

கூடக் கூடாது; ஆயினும், இவ்வரசர்களிற் சிலர் ஆழ்ந்த சிந்தனை புருஷர்களா யிருந்தார்கள்.

380. மரணத் தன்மை என்பதினால் நாம் என்ன பொருள் கொள்கிறோம்? பிரிந்துவிடுதலே; அது சேர்க்கையின் பயனாக உண்டாயிருக்கும் வஸ்துக்களுக்கே சாத்தியமாம்; இரண்டு மூன்று பொருள்களால் ஆக்கப்பட்ட எதுவும் பிரிவை யடையத்தான் வேண்டும்; சேர்க்கையின் பயனாக எது இல்லையோ அது ஒருபொழுதும் பிரிக்கப்பட முடியாதது; ஆகையால், அது ஒருபொழுதும் மரிக்க முடியாது. அது அமரத்தன்மை வாய்ந்தது. அது என்றும் நித்தியமாய் இருந்துகொண்டே யிருக்கிறது. அது சிருஷ்டிக்கப்பட்டதன்று. சிருஷ்டிக்கு உட்பட்ட ஒவ்வொரு பொருளும் ஒரு சேர்க்கையேயாம்; சூந்யத்திலிருந்து சிருஷ்டி யுண்டாயதை எவரும் எப்பொழுதும் பார்த்ததில்லை. சிருஷ்டியைப்பற்றி நாம் அறிந்துள்ளதெல்லாம் முன்னமேயே உள்ள வஸ்துக்கள் சேர்ந்து இன்னும் புதிய வடிவங்களை யடைகின்றன என்பதேயாம்.

381. இந்தப் பிரபஞ்சம் முழுதும் சூந்யத்திலிருந்து உண்டுபண்ணப்பட முடியாது. காரணம் இன்றி யொன்றும் உண்டாகிறதில்லை; காரணமானது இன்னொரு வடிவத்தில் உண்டாகும் காரியமேயாம்.

382. காரியம் வெளிப்படுத்தப்பட்ட காரணமாம். காரியத்துக்கும் காரணத்துக்கும் முக்கியமான வித்தியாசம் கிடையாது.

383. தங்களுடைய சொந்த அகம்பாவத்தன்மையைப்பற்றிச் சிறிதும் நினைக்காதவர்களே உலகில் மிகமிகப் பெரிய வேலைகளைச் செய்திருக்கிறார்கள். மனிதன் தான் நேசிக்கும் வஸ்துவானது தாழ்ந்த, சிறிய, மரிக்கும்படியான எந்த வஸ்துவும் அல்லவென்று காண்கிறபொழுதுதான், நேசிக்கிறான். தான் நேசிக்கும் வஸ்துவானது ஒரு மண்கட்டியன்றென்றும், ஆனால், கடவுளேயென்றும் மனிதன் காண்கிறபொழுதுதான், நேசிக்கிறான்.

384 அது (வேதாந்தமானது) பாபம் உண்டென்று ஒப்புக்கொள்கிறதில்லை; அது தப்பிதத்தைத் தான் ஒப்புக்கொள்கிறது; நீ பலஹீனனென்றும், நீ ஒரு பாபியென்றும், அக்கிரமமான ஜந்துவென்றும், உனக்குச் சக்தியில்லையென்றும், நீ இதையும் அதையும் செய்ய முடியாதென்றும் சொல்வதே மிகமிகப் பெரிய தப்பிதமென்று வேதாந்தம் கூறுகிறது. நீ அம்மாதிரி நினைக்கிற ஒவ்வொரு தடவையும், உன்னைக் கட்டிக் கீழே தள்ளுகிற சங்கிலியில் இன்னும் ஒரு வளையத்தை மாட்டிக்கொள்கிறாய்; உனது ஆத்மாவுக்கு இன்னும் ஒரு மாயைத் திரையைச் சேர்த்துக் கொள்கிறாய். ஆகையால், தான் பலஹீனனென்று எவன் நினைக்கிறானோ, அவன் தப்பிதம் செய்தவனாகி

றான். எவன் தான் அசுத்தனென்று நினைக்கிறனோ அவன் தவறு செய்தவனாகிறான்; உலகிலே ஒரு தீய நினைப்பை வீசுகிறான்.

385. "ஆழ்ந்த ஆரண்யங்களிலாவது அல்லது குகைகளிலாவது இது அநுபூதிக்குக் கொண்டுவரப் படக் கூடுமென்பது மாத்திரமல்ல; வாழ்க்கையின் சாத்தியமான எல்லாவித அவஸ்தைகளிலுமுள்ள மனிதர்களாலும் அநுபூதிக்குக் கொண்டுவரப்பட முடியும்" என்றும் வேதாந்தம் கூறுகிறது. இவ் வுண்மைகளைக் கண்டவர்கள் குகைகளிலாவது ஆரண் யங்களிலாவது வசித்துக்கொண்டிருக்கவில்லை யென் பதையும், வாழ்க்கையின் சாதாரணத் தொழில்களை யநுசரித்தவர்களு மல்லரென்பதையும், ஆனால், மிக மிகச் சுறுசுறுப்பான வாழ்க்கை வாழ்ந்தவர்களென் றும், படைகளை நடத்திச் சிம்ஹாசனங்களில் உட் கார்ந்து லக்ஷக்கணக்கான ஜனங்களுடைய நன்மை யைக் கவனிப்பவர்களா யிருந்தார்க ளென்றும், — அதுவும், இதெல்லாம் அரசன் சுயேச்சாதிபத்தியம் வகித்துவந்த நாட்களிலேயாம் அரசன் அநேகமாய்ப் பெயருக்கு ஒரு உருவம் மாத்திரமாயிருக்கும் இந்நாட் கள் போல அந்நாட்கள் அல்ல — நாம் நம்புவதற்கு அநேக காரணங்கள் உள்ளன என்பதையும் நாம் கண்டிருக்கிறோம். ஆயினும், இவ்வெண்ணங்களை யெல்லாம் சிந்தித்து, அவற்றை யநுபவத்தில் கொண்டு வந்து, அவற்றை மனுஷ்ய வர்க்கத்துக்கு உப

தேசிப்பதற்குக் காலம் செலவழிக்க அவர்களால் முடிந்தது.

386. உயிருள்ள கடவுள் உன்னுள்ளேயே இருக்கிறார்; ஆயினும், நீங்கள் ஜபாலயங்களையும் கோவில்களையும் கட்டி வைத்துக்கொண்டும், 'நானுவிதக் கற்பனை மூடக்கதனங்களை யெல்லாம்' நம்பிக் கொண்டுமிருக்கிறீர்கள். பூஜிப்பதற்கு உள்ள ஒரே கடவுள் யாரெனில், மனுஷ்ய சரீரத்திலுள்ள மனுஷ்ய ஆத்மாவே. எல்லா மிருகங்களும் க்ஷேத்திரங்களேயா மென்பதில் சந்தேகமில்லை; ஆனால், மனிதனோ மிகமிகச் சிரேஷ்டமானவன். க்ஷேத்திரங்களுக்குள் தாஜ் மஹால், நான் அதில் பூஜிக்க முடியாவிட்டால், வேறெந்த க்ஷேத்திரமும் எவ்விதப் பயனு முடையதாயிராது. ஒவ்வொரு மனுஷ்ய சரீர க்ஷேத்திரத்திலும் ஈசுவரன் உள்ளதாக நான் அநுபவத்தில் அறிந்து கொள்கிற நிமிஷத்திலேயே, ஒவ்வொரு மனுஷ்ய ராசியின் முன்னும் நான் பக்தியுடன் நின்று அவனிடத்தில் கடவுளைப் பார்க்கிற நிமிஷத்திலேயே—அந்த நிமிஷத்திலேயே நான் பந்தத்தினின்றும் விமுக்தியடைந்தவனாகிறேன்; பந்திக்கின்ற ஒவ்வொன்றும் மறைந்துவிடுகிறது; நான் முக்தனாய்விடுகிறேன்.

387. ஆத்மாவைப்பற்றிய மிகமிகப் பூர்வீகக் கொள்கையானது தன்னொற்றுமையாகிற நியாயத்தின்மீது கட்டப்பட்டது என்பது உண்மையே—"நான் நானேயா யிருக்கிறேன்,"—நேற்றிருந்த நான்

தான் இன்றுள்ள நான்; இன்றுள்ள நான்தான் நாளை யிருக்கப்போகும் நான்; சரீரத்துக்கு எத்தனையோ மாறுதல்கள் ஏற்பட்டபொழுதிலும் நான் ஒரே நானாயிருக்கிறேன் என்று நான் நம்புகிறேன்.

'388. நன்மை யெல்லாவற்றினுடையவும், நல்லொழுக்கப் பயன் எல்லாவற்றினுடையவும் பிரதான சப்தம் யாதெனில்—நான் என்பது அன்று; ஆனால், நீ என்பதேயாம். 'ஸ்வர்க்கம் என்று ஒன்று உண்டா? நரகம் என்று ஒன்று உண்டா?' என்பதைப்பற்றி எவர் கவனிக்கின்றனர்? 'ஆத்மாவென்று ஒன்று உண்டா இல்லையா?' என்பதைப்பற்றி எவர் கவனிக்கின்றனர்? 'மாறுதலற்ற வஸ்து ஒன்று உண்டா இல்லையா?' என்பதைப்பற்றி எவர் கவனிக்கின்றனர்? இதோ உலகம் உள்ளது; அது துக்கம் நிறைந்ததாயிருக்கிறது. புத்தரைப்போல உலகினுள் சென்று, அந்தத் துக்கத்தைக் குறைக்கப் பாடுபடு, அல்லது அந்த முயற்சியில் மரித்துவிடு. உங்களை நீங்களே மறந்துவிடுங்கள்; நீ ஆஸ்திகனாயிருந்தாலும் சரி, நாஸ்திகனாயிருந்தாலும் சரி; நீ சம்சயவாதியாயிருந்தாலும் சரி, வேதாந்தியாயிருந்தாலும் சரி; கிறிஸ்தவனாயிருந்தாலும் சரி, அல்லது முகம்மதியனா யிருந்தாலும் சரி; கற்கவேண்டிய முதலாவது பாடம் இதுதான். எல்லோருக்கும் தெளிவாயுள்ள ஒரு பாடம் யாதெனில், சிறிய "நான்" என்பதை யழித்து, உண்மையான ஆத்மாவை உறுதிப்படுத்துதலேயாம்.

389. நம்மிடத்தில் நாமே நம்பிக்கை யுண்டுபண்ணிக்கொள்வதற்கு நாம் ஏன் இந்த 'அருவருப்பான அநுபவங்களை யெல்லாம் அடையவேண்டும்? மனிதனுக்கும் மனிதனுக்கு முள்ள வித்தியாச மெல்லாம் அவனுக்குத் தன்னிடத்தில் நம்பிக்கை யுள்ளதினாலும் இல்லாததினாலுமே யுண்டாகின்றது. நம்மிடத்தில் நமக்கு நம்பிக்கை யிருந்தால், அது எல்லாம் செய்ய வல்லது. நான் எனது சொந்த வாழ்க்கையில் அவ்வநுபவத்தில் பார்த்திருக்கிறேன்; இன்னும் பார்த்துக்கொண்டு வருகிறேன்; எனக்கு வயது ஆக ஆக அந்த நம்பிக்கையானது மேன்மேலும் பலமாய்க் கொண்டுவருகிறது. தன்னிடத்தில் தானே நம்பிக்கை வைக்காதவன் நாஸ்திகனேயாம். ஈசுவரனிடத்தில் நம்பிக்கை வைக்காதவன் நாஸ்திகனென்று பழைய மதங்கள் கூறின. தன்னிடத்தில் நம்பிக்கை வைக்காதவன் நாஸ்திகனென்று புதிய மதம் கூறுகிறது. ஆனால், அது ஸ்வயநல நம்பிக்கை யன்று; ஏனெனில், வேதாந்தமானது ஏகத்துவக் கொள்கையேயாம். அது எல்லோரிடத்தும் நம்பிக்கையென்றே பொருள் படுகின்றது; ஏனெனில், நீங்கள் எல்லாமா யிருக்கிறீர்கள்.

390. இவ்வுலகில் நமக்குள்ள அறிவெல்லாம் எங்கேயிருந்து வந்தது? அது நம்முள்ளேயே இருந்தது. எந்த அறிவு வெளியே யிருக்கிறது? எந்த அறிவு மில்லை. அறிவு ஜடத்தி லில்லை; அது அப்

பொழுதெல்லாம் மனிதனிடத்திலேயே யிருந்தது. எவரும் எப்பொழுதாவது அறிவைச் சிருஷ்டித்த தில்லை; மனிதன் அதை யுள்ளிருந்துகொண்டு வருகி றான். அது அங்கே கிடக்கின்றது.

391. போட்டிக்கு உண்மையான மாற்று அன்பிலே யுள்ளது; தீமைக்கு உண்மையான மாற்று வயநலமற்ற தன்மையிலே உள்ளது.

392. நம்முடைய கொள்கை ஒப்புக்கொள்ளுத லேயாம்; தள்ளிவிடுத லன்று. தாராளத்துவம் மாத் திரமன்று; ஏனெனில், தாராளத்துவ மெனப்படுவது அநேகமாக நிந்தனையேயாம்; எனக்கு அதில் நம் பிக்கை கிடையாது. நான் சம்மதம் என்னும் தர்ம த்தை நம்புகிறேன். நான் ஏன் தாராளமா யிருக்க வேண்டும்? நீ தப்பு செய்வதாக நான் நினைத்தும் உன்னைக் கிடக்கிறது என்று விட்டுவிடுவதுபோல் தாராளத்துவம் பொருள்படும். நீயும் நானும் மற்ற வர்களை யிருக்கவிடுகிறோமென்று நினைப்பது நிந்தனை யில்லையா? நான் முன் இருந்த எல்லா மதங்களையும் ஒப்புக்கொள்கிறேன்; அவற்றுட னெல்லாம் பூஜிக் கிறேன்; அவை கடவுளை எந்த வடிவத்திலே பூஜித்த பொழுதிலும் நான் அவை யொவ்வொன்றுடனும் சேர்ந்து ஈஸ்வரனை யுபாசிக்கிறேன். நான் மகம் மதியர்களுடைய பள்ளிவாசலுக்குச் செல்வேன்; நான் கிறிஸ்தவர்களுடைய ஜபாலயத்துக்குள் சென்று, சிலுவையின் முன்னே முழந்தாளிடுவேன்;

நான் பௌத்த க்ஷேத்திரத்தினுள்ளே சென்று, புத்தரிடத்திலும் அவருடைய நியதியிலும் சரணாகதி யடைவேன். நான் ஆரண்யத்தினுள்ளே சென்று, ஒவ்வொருவருடைய ஹிருதயத்தையும் பிரகாசிக்கும்படி செய்கின்ற ஜோதியைத் தரிசிப்பதற்கு முயற்சிக்கின்ற ஹிந்துவுடனேகூட நிஷ்டையி லிருப்பதற்கு உட்காருவேன்.

393. புருஷன் என்றால் பிரக்ஞையல்ல; ஏனெனில், பிரக்ஞை ஒரு சேர்க்கைப் பொருளாகும்; ஆனால், பிரக்ஞையில் ஒளியாயும் நன்மையாயும் உள்ளதெல்லாம் புருஷனுக்குச் சேர்ந்ததே. புருஷன் பிரக்ஞை யுள்ளவ னல்லன்; ஆனால், அறிவில் ஒளியாயுள்ளது எதுவோ அது புருஷனுக்குச் சேர்ந்தது. உணர்வு புருஷனிடத்தி லுள்ளது; ஆனால், புருஷன் அறிவுள்ளவனல்லன்; அறிகிறவனல்லன். புருஷனிடத்துள்ள சித்தும் பிரகிருதியும் சேர்ந்ததைத் தான் நாம் நம்மைச் சுற்றிலும் பார்க்கிறோம். ஜகத்திலே சுகமாயும் ஆநந்தமாயும் ஒளியாயும் உள்ளதெல்லாம் புருஷனுக்குச் சேர்ந்ததே; ஆனால், அது ஒரு சேர்க்கைப் பொருளாகும்; ஏனெனில், அது புருஷனும் பிரகிருதியும் சேர்ந்ததாம். "எங்கெல்லாம் ஏதேனும் சுக முள்ளதோ, எங்கேனும் ஏதேனும் ஆனந்தம் உண்டோ, அங்கெல்லாம் ஈசுவரன் என்ற அந்த அமிரத்துவத்தின் ஒரு பொறி யுள்ளது." புருஷனே ஜகத்தினுடைய மகா ஆகருஷணமாகும்;

ஜகத்தினுல் ஸ்பர்சிக்கப்படாமலும், ஜகத்துடன் சேராமலு மிருந்தாலும், அது ஜகத் முழுமையும் ஆகருஷிக்கின்றது.

394. நூறு ஜன்மங்களைத் தியாகம் செய்தாயி னும்' ஒரு சிறிய பிராணிக்கு உதவி புரிய முடியு மானல்; அப்படிச் செய்திருக்கக்கூடிய, பூர்வகாலத்து அந்தப் பெரிய பழைய தீர்க்கதர்சிகளிலும் மகாத்மாக் களிலும் சிலரைப் போன்று, அதிகம் சன்மார்க்க புருஷர்களை உலகில் நான் பார்க்க விரும்புகிறேன். சன்மார்க்கத்தையும் பிறருக்கு நன்மை செய்வதையும் பற்றிப் பேச்சு! இக்காலத்து வெட்டிப் பேச்சு!

395. நான் உண்ணும்பொழுது, நான் உண்பது தாக என்னையே நினைத்துக்கொள்கிறேன் — நான் உண்பதுடனே ஒற்றுமைப்படுத்திக்கொள்கிறேன். நான் ஓடும்பொழுது, நானும் ஓடுதலும் இரண்டு வேறு விஷயங்களல்ல. இதனால், ஸ்வய ஒற்றுமையி லிருந்து ஏற்படுகின்ற வாதம் மிகவும் பலமுள்ள தாகத் தோன்றவில்லை. ஞாபகத்திலிருந்து ஏற்படு கின்ற மற்ற வாதமும் பலஹீனமா யிருக்கின்றது. எனது இருப்பின் ஒற்றுமைத் தன்மை எனது ஞாப கத்தினல் குறிப்பிடப்படுகிறதானல், நான் மறந்து விட்ட அநேக விஷயங்கள் அந்த ஒற்றுமைத் தன்மையினின்றும் இழக்கப்பட்டவை யாகின்றன. சில சந்தர்ப்பங்களிலே ஜனங்கள் தங்கள் முந்திய செய்கைகள் முழுவதையும் மறந்துவிடுவது நமக்குத்

தெரியும். பைத்தியம் பிடித்துள்ள அநேக சந்தர்ப்பங்களில் ஒரு மனிதன் தன்னைக் 'கண்ணாடியினால் ஆக்கப்பட்டவன்போல, அல்லது ஒரு மிருகம்போல நினைத்துக்கொள்வான்; அந்த மனிதனுடைய இருப்பு ஞாபகத்தைச் சார்ந்திருக்குமானால், அவன் கண்ணாடியாய்விடுகிறான்; ஆனால், அது அப்படி யல்லாததினாலே, ஆத்மாவின் ஒற்றுமைத் தன்மையை ஞாபகம்போன்ற ஒரு சிறிய பொருளின்மீது சார்ந்திருக்கும்படி நாம் செய்யக்கூடாது.

396. நான் என்னைச் சரீரம்போன்று நினைக்கிறபொழுது, நான் ஒரு சரீரமாகவே யிருக்கிறேன்; நான் வேறேதேனுமா யிருக்கிறே னென்று சொல்வது பொருளற்றதாகும். நான் என்னை ஆத்மாவாக நினைத்துக்கொள்கிறபொழுது, சரீரம் மறைந்துவிடுகிறது; சரீரத் தோற்றம் இருப்பதில்லை. சரீரத் தோற்றம் மறைந்தாலொழிய, எவரும் ஆத்மதர்சனம் அடைய முடியாது. குணங்களின் விளக்கம் மறைந்தா லொழிய, எவரும் பொருளின் தோற்றத்தை யடைதல் முடியாது.

397. ஹிருதயத்தின் மூலமாகவே ஈசுவரன் தரிசிக்கப்படுகிறார், புத்தியின் மூலமாக அன்று. புத்தி, தெரு சுத்தம் செய்பவன் போன்றதே, நமக்கு வழியைச் சுத்தம் செய்துகொடுக்கலே, இரண்டாந்தர வேலைக்காரனே, போலீஸ்காரனே; ஆனால், போலீஸ்காரன் ஜனசமுதாயம் நன்கு நடைபெறுதற்கு அவசி

யம் வேண்டியவனல்லன். அவன், கலகங்களை யடக்கவே, தப்பிதமான செய்கைகளைக் கண்டிக்கவே யிருக்கிறான்; அதுதான் புத்தி செய்யவேண்டிய வேலையெல்லாம். நீங்கள் புத்தி விளக்கமான புத்தகங்களைப் படிக்கிறபொழுது, நீங்கள் அவற்றைப் படித்துத் தீர்த்துவிட்டால், "நான் அவற்றுக்கு வெளியே யிருப்பதற்காக ஈசுவரனுக்கு வந்தனம்" என்று நீங்கள் நினைக்கிறீர்கள். ஏனெனில், புத்தி குருடானது; தானே அசைய முடியாதது; அதற்குக் கைகளும் இல்லை, கால்களும் இல்லை.

398. பிரபஞ்சத்தின் ஏகத்துவத்தையும் தன்னம்பிக்கையையும் தவிர மத விஷயத்திலே போதிக்கப்படுதற்கு வேறு யாதுள்ளது? சென்ற ஆயிரக்கணக்கான வருஷங்களாக மனுஷ்ய வர்க்கத்தின் வேலைகளெல்லாம் இந்த ஒரு லக்ஷியத்தை நோக்கியே இருந்திருக்கின்றன.

399. ஏகத்துவத்துக்கு இட்டுச் செல்வதெல்லாம் சத்தியமே. அன்பே சத்தியம், பகைமையே பொய்; ஏனெனில், பகைமை அநேக தத்துவத்துக்கு இடங் கொடுக்கின்றது. மனிதனிடத்திலிருந்து மனிதனைப் பிரிப்பது பகைமையே. ஆகையால், அது தப்பு, பொய்; அது ஒரு பிரிவினைச் சக்தி; அது பிரித்து அழிக்கின்றது.

400. வேதாந்தமானது லக்ஷியத்தைப் போதிக்கின்றது; லக்ஷியமானது எப்பொழுதும் உண்மை

யானதற்கு, அநுபவ சாத்திய மானதற்கு எப்பொழு தும் அதிகம் முற்போக்காகவே யிருக்கிறதென்பது நமக்குத் தெரியும். மனுஷ்ய ஸ்வபாவத்தில் இரண்டு தன்மைகள் உண்டு. ஒன்று, லக்ஷியத்தை ஜீவிதத் துடன் ஒற்றுமைப்படுத்துவது; மற்றது, ஜீவிதத்தை லக்ஷியம் வரையில் உயர்த்துவது.

401. மிகமிக உயர்ந்த லக்ஷியத்தின் நிலைமையி லிருந்து பார்த்தால், மிகமிகத் தாழ்ந்த மிருகமும், மிகமிக சிரேஷ்டமான மனிதனும் ஒன்றாகவே யிருக்கிறார்கள். கடவுள் ஒருவர் உண்டென்று நீ நம்பினால் மிருகங்களும் மிகமிக உயர்ந்த பிராணிகளும் ஒன்றேயா யிருக்கவேண்டும். மனிதர்கள் என்று அழைக்கப்படுகின்ற குழந்தைகளிடம் பக்ஷபாத மாயும், மிருகங்கள் என்று அழைக்கப்படுகின்ற குழந்தைகளிடம் கொடூரமாயும் உள்ள ஒரு கடவுள் பைசாசத்தைப்பார்க்கிலும் இழிந்தவர். அத்தகைய ஒரு கடவுளைப் பூஜிப்பதிலும் நான் ஒரு நூறுதரம் மரிக்கவும் செய்வேன். எனது ஜீவிதம் முழுதும் அத்தகைய கடவுளுடன் போராட்டமாகவே யிருக் கும்; ஆனால், வித்தியாசம் கிடையாது; வித்தியாசம் உண்டென்று சொல்கிறவர்கள் பொறுப்பற்ற, ஹிரு தயமற்ற ஜனங்கள்; அறியாதவர்கள். அநுபவ சாத்தியம் என்பது தப்பிதமான பொருளில் உப யோகப்படுத்தப்பட்டிருப்பதற்கு உதாரணம் இதோ இருக்கிறது. நானே மிகவும் கண்டிப்பான சாகசு

பக்ஷணி யல்லன் ; ஆனல், நான் லக்ஷியத்தை யறிகி றேன். நான் மாம்சம் சாப்பிடுகிறபொழுது, அது தப்பு என்று எனக்குத் தெரியும். சில சந்தர்ப்பங் களிலே நான் அதை யுண்ணும்படி நேரிட்டாலும் கூட, அது கொடுமை யென்று எனக்குத் தெரியும். நான் எனது லக்ஷியத்தை அனுபவத்துக்கு இழுத் துக்கொண்டுவந்துவிட்டு, இம்மாதிரி எனது பலஹீன மான நடத்தைக்கு மன்னிப்புக் கேட்டுக்கொள்ளக் கூடாது. லக்ஷியமென்பது மாம்சம் உண்ணாதிருத்த லேயாம் ; எந்தப் பிராணிக்கும் இம்சை செய்யாதிருத் தலேயாம் ; ஏனெனில், எல்லா மிருகங்களும் எனது சகோதரர்களே. நீ அவற்றை உனது சகோதரர்களாக நினைக்க முடியுமானல், ஜீவர்கள் எல்லோருடையவும் சகோதரத்துவத்தை நோக்கிக் கொஞ்சதூரம் சென்று விட்டாய், மனுஷ்ய சகோதரத்துவத்தைப்பற்றிப் பேசுவதென்ன ? அது குழந்தை விளையாட்டு.

402. நீ முக்தனாய்விட்டால், எல்லோரும் சீக்கி ரத்திலாவது பின்னராவது அப்படி யாய்விடுவார்க ளென்பதை நீ அறிந்துகொள்ளவேண்டும் ; நீ முக்த னாய்விட்டால், நீ அநித்தியமானதை எப்படிப் பார்க்க முடியும் ? உண்மையில் நீ சுத்தமானல், நீ அசுத் தத்தை எப்படிப் பார்க்கிறாய் ? ஏனெனில், உள்ளே யுள்ளது வெளியே யிருக்கிறது. அசுத்தத்தை நம் முள்ளே வைத்துக்கொண்டிருந்தா லொழிய நாம் அசுத்தத்தைப் பார்க்க முடியாது.

403. பரிபூர்ண சமத்துவம் நமக்கு அழிவையே உண்டுபண்ணும்.

404. ஒவ்வொரு மதத்திலும் மூன்று பாகங்கள் உண்டு; அவை: தத்துவஞானம், புராணம், கர்மம் என்பவையாம். தத்துவஞானமே ஒவ்வொரு மதத்தினுடையவும் சாராம்சம் என்பது உண்மையே; புராணமானது மகான்களுடைய பௌராணிக சரித்திரங்களின் மூலமாக, ஆச்சரியமான விஷயங்களைப்பற்றிய கதைகளைமூலமாகவும், மற்றும் திருஷ்டாந்தப்படுத்தி விவரிக்கின்றது; கர்மமானது அந்தத் தத்துவசாஸ்திரத்துக்கு எல்லோரும் அதைக் கிரகிக்கும்படி ஒரு ஸ்தூல வடிவம் கொடுக்கின்றது.

405. பாஷையானது உடன்படிக்கையின் முடிவன்று; எப்பொழுதாவது ஜனங்கள் சில கருத்துக்களைச் சில வார்த்தைகளால் குறிப்பிட ஒப்புக்கொண்டார்கள் என்பதல்ல; ஒருபொழுதுமே அதற்குத் தகுந்த பதமில்லாமல் ஒரு எண்ணமும் இருந்ததில்லை; அதற்குத் தகுந்த எண்ணமில்லாமல் வார்த்தையும் இருந்ததில்லை; எண்ணங்களும் வார்த்தைகளும் இயற்கையிலேயே பிரிக்கப்பட முடியாதனவை.

406. ஒவ்வொருவரும் பிரபஞ்சத்திலே கர்மம் செய்யவேண்டும். எவர் ஆத்மாவினிடத்திலே பரிபூர்ண திருப்தி யடைந்திருக்கிறார்களோ, எவருடைய இச்சைகள் ஆத்மாவுக்கப்பால் செல்கின்றதில்லையோ, எவருடைய மனமானது ஆத்மாவை விட்டு ஒரு

பொழுதும் விலகிச் செல்கிறதில்லையோ, எவருக்கு ஆத்மாவே சமஸ்தமுமாயிருக்கிறதோ அவர்கள் மாத்திரம் கர்மம் செய்கிறதில்லை. மற்றவர்கள் கர்மம் செய்யத்தான் வேண்டும்.

407. நம்முடைய அறிவெல்லாம் அநுபவத்தை யாதாரமாகக் கொண்டுள்ளது.

408. இரவு பகலாக மாறுகிற சமயத்தும், பகல் இரவாக மாறுகிற சமயத்தும், ஒருவித அந்யோந்ய சம்பந்த அமைதி யுண்டாகிறது. அதிகாலையும் அதி மாலையும் அமைதிக்கு இரண்டு காலங்களாம்.

409. உங்களில் முடியுமானவர்கள் இந்த அப்பியாசத்துக்கென்றே தனியே ஒரு அறை வைத்துக் கொள்ளுதல் நலம்; அந்த அறையில் உறங்காதீர்கள்! அது பரிசுத்தமாய் வைக்கப்படவேண்டும். நீ ஸ்நானம் செய்து சரீரத்திலும் மனத்திலும் பரிபூர்ணமாய்ச் சுத்தமாயிருந்தாலொழிய அந்த அறையினுள் நுழையக்கூடாது. அந்த அறையில் எப்பொழுதும் புஷ்பங்களை வை; அவை ஒரு யோகிக்கு மிகமிகச் சிறந்த சுற்றங்களாகும்; சந்தோஷகரமான படங்களையும் மாட்டு. காலையிலும் மாலையிலும் தூபம் ஏற்று. அந்த அறையிலே சண்டை யிடாதே! கோபத்துக்கு இடங்கொடுக்காதே! அசுத்த நினைப்புக்கு இடங் கொடுக்காதே! உன்னைப்போன்று ஒரே நினைப்புள்ளவர்களையே அந்த அறையினுள் நுழையவிடு! அப்படியானால், வரவர, அந்த அறையிலே ஒரு பரிசுத்த

ஆகாயம் ஏற்படும். நீ துன்புற்று, துக்கமுற்று, அல்லது சந்தேகமுற் றிருக்கிறபொழுது, அல்லது உன் மனது கலங்கியிருக்கிறபொழுது, நீ அந்த அறையினுள் நுழைந்துவிட்டால், அதுவே உன்னை அமைதிப்படுத்திவிடும். க்ஷேத்திரமும் கோவிலும் ஏற்படுத்தப்பட்டதின் தாத்பர்யம் இதுதான்.

410. எவனொருவன் எல்லாப் பற்றுதலையும்-எல்லாப் பயத்தையும்-எல்லாக் கோபத்தையும் தியஜித்துவிடுகிறானோ, எவனுடைய ஆத்மா முழுதும் ஈச்வரனிடம் சென்றுவிட்டதோ, எவன் ஈச்வரனிடத்தில் சரணாகதி யடைந்துவிட்டானோ, எவனுடைய ஹிருதயம் பரிசுத்தமாய்விட்டதோ, அவன் எந்த இச்சையுடனே ஈச்வரனிடத்துக்கு வந்தாலும், ஈச்வரன் அவனுக்கு அதை யளிப்பார். ஆகையால், அவரை ஞானத்தின் மூலமாக, அன்பின் மூலமாக, அல்லது தியாகத்தின் மூலமாகப் பூஜிப்பாய்.

411. நாரதர் என்ற பெரிய தேவரிஷி யொருவர் இருந்தார். மனுஷ்ய வர்க்கத்திலே மகான்கள், பெரிய யோகிகள் இருப்பதுபோலவே, தேவர்களுக்குள்ளும் பெரிய யோகிகள் உண்டு. நாரதர் ஒரு நல்ல யோகி; மிகவும் பெரியவர். அவர் எங்கும் யாத்திரை செய்தார். ஒருநாள் அவர் ஒரு ஆரண்யத்தினூடே சென்றுகொண்டிருக்கையில், அங்கு நிஷ்டையிலிருந்த ஒருவரைக் கண்டார்; கறையான்கள் அந்த நிஷ்டா புருஷருடைய சரீரத்தைச் சுற்றிலும் ஒரு பெரிய

புற்று வைத்திருந்தன ; அவர் அந்த நிலைமையில் நெடுங்காலம் உட்கார்ந்துவந்தார். அவர், நாரதரைப் பார்த்து, "நீ எங்கே போகிறாய் ?" என்று கேட்டார். "நான் பிரஹ்மலோகம் செல்கிறேன்" என்று நாரதர் மறுமொழி யளித்தார். "அப்படியானால், ஈச்வரனுக்கு என்மீது எப்பொழுது கிருபை யுண்டாகும்? எப்பொழுது எனக்கு முக்தி யுண்டாகும் என்பதைக் கேட்டுவாருங்கள்." மேலே செல்ல, நாரதர் இன்னொருவரைக் கண்டார். அங்கு மிங்கும் குதித்துக்கொண்டும் - பாடிக்கொண்டும் - ஆடிக்கொண்டு மிருந்த அவர், "ஏ நாரதரே! எங்கே போகிறீர் ?" என்று கேட்டார். அவருடைய குரலும் அவருடைய பாவனைகளும் முரடாயிருந்தன. "நான் பிரஹ்மலோகம் செல்கிறேன்" என்று நாரதர் சொன்னார். "அப்படியானல் எனக்கு எப்பொழுது முக்தி கிடைக்கும்? என்று கேட்டுவாரும்." நாரதர் போய்விட்டார். சின்னாட்கள் பொறுத்து அவர் அதே ரஸ்தாவின் வழியாக மறுபடியும் வந்தார். தன்னைச் சுற்றிலும் எறும்புப் புற்று குவிந்திருக்கத், தியானம் செய்துகொண்டிருந்த மனிதன் உட்கார்ந்திருந்தான். அவன், "ஏ, நாரதரே! என்னைப்பற்றி ஈச்வரனிடம் கேட்டீரா ?" என்று கேட்டான். "ஆம், கேட்டேன்." "அவர் என்ன சொன்னார் ?" "இன்னும் நான்கு ஜன்மங்களில் நீ முக்தியடைவாய் என்று ஈச்வரன் என்னிடம் சொன்னார்." அப்பொழுது

அந்த மனிதன் "நான் என்னைச் சுற்றிலும் கறையான் புற்று உண்டாகும் வரையிலும் தியானம் செய்திருக்கிறேன். இன்னும் நான்கு ஜன்மங்கள் இருக்கிறதாம்!" என்று சொல்லி யழுது புலம்ப ஆரம்பித்தான். நாரதர் மற்றவனிடம் போனார். "நான் கேட்டனுப்பியதை நீங்கள் கேட்டீரா?" "ஆம், கேட்டேன், இதோ இருக்கிறதே இந்தப் புளியமரம்; இந்த மரத்தில் எத்தனை இலைகள் இருக்கின்றனவோ அத்தனை ஜன்மங்கள் நீ எடுக்கவேண்டும்; பின்னர் தான் நீ முக்தி யடைவாய் என்று நான் சொல்ல வேண்டியிருக்கிறது." அந்த மனிதன் ஆநந்தத்தினால், "அவ்வளவு சிறிது காலத்துக்குள் எனக்கு முக்தி கிடைக்கும்" என்று சொல்லிக் கொண்டு ஆட ஆரம்பித்தான். "குழந்தாய்! இந்த நிமிஷத்திலேயே உனக்கு முக்தி" என்று ஒரு சப்தம் கேட்டது. அவனது இடைவிடா முயற்சிக்கு அதுதான் வெகுமதி. அந்த ஜன்மங்களினூடெல்லாம் வேலை செய்வதற்கு அவன் தயாராயிருந்தான்; அவனுக்கு ஏக்க முண்டாகவில்லை. ஆனால், முதலாவது மனிதன், நான்கு ஜன்மங்கள்கூட அதிகமே யென்று உணர்ந்தான். எண்ணற்ற ஜன்மங்கள் காத்திருக்கச் சம்மதித்த மனிதனுடையது போன்ற விடா முயற்சியே மிகமிகச் சிரேஷ்டமான பலனை யளிக்கிறது.

412. அறிவே சக்தியாம்; நாம் ஒரு விஷயத்தை அறிய ஆரம்பித்தவுடனே, நமக்கு அதன்

மீது சக்தி யுண்டாகிறது; அப்படியே, மனமும் வெவ்வேறு வஸ்துக்களைச் சிந்திக்க ஆரம்பிக்கிற பொழுது, அதற்கு அவற்றின் மீது சக்தி யுண்டாகிறது.

413. சந்தோஷகரமான உணர்ச்சியே சாத்வீக லக்ஷணம். சாத்வீக புருஷனுக்கு ஒவ்வொன்றும் சந்தோஷகரமா யிருக்கின்றது; இது உண்டாகிற பொழுது நீ யோகத்திலே அபிவிருத்தி யடைகிறு யென்று அறிந்துகொள். துக்கமெல்லாம் தமோ குணத்தினு லுண்டாகிறது; ஆகையால், நீ அதை நீக்கிவிட வேண்டும்; மந்தமா யிருப்பது தமோ குணங்களின் பலன்களுள் ஒன்று. புலவான்கள், நல்ல சரீரக் கட்டுடையவர்கள், வாலிபர்கள், சுக சரீர முடையவர்கள், தீரர்கள் இவர்களே யோகிக ளாவதற்குத் தகுந்தவர்கள். யோகிக்கு எல்லாம் ஆநந்தமே. அவன் பார்க்கின்ற ஒவ்வொரு மனுஷ்ய முகமும் அவனுக்கு உற்சாகத்தை யளிக்கின்றது. அது சற்புருஷனுடைய லக்ஷணம். துக்கம் பாபத்தினு லுண்டாகிறது; வேறு எக்காரணத்தினு மில்லை. வாடிய முகங்களுடன் உங்களுக்கு என்ன வேலை? அது பயங்கரமானது. உனது முகம் வாடி யிருந்தால், அன்று நீ வெளியே போகாதே, உனது அறைக்குள்ளே அடைந்திரு.

414. நான் ஒரு சமயத்தில் காசியிலிருந்த பொழுது, ஒரு பக்கத்திலே ஒரு பெரிய குளமும், இன்னொரு பக்கத்திலே ஒரு உயர்ந்த சுவரு

முடைய ஒரு இடத்தின் வழியாகச் சென்றேன். அங்கே அநேக குரங்குகள் இருந்தன. காசிமா நகர்க் குரங்குகள் பெரிய மிருகங்கள்; சில சமயங்களில் அக்கிரம குணங்களு முடையவை. என்னைத் தங்கள் தெரு வழியாகப் போகவிடக் கூடாதென்று அவைகள் நினைத்துக்கொண்டன. ஆகையால், அவை ஊளையும் கூச்சலு மிட்டுக்கொண்டு எனது கால்களைப் பற்றின. அவை கிட்ட நெருங்க நெருங்க, நான் ஓட ஆரம்பித்தேன். ஆனால், நான் எவ்வளவுக் கெவ்வளவு வேகமாக ஓடினேனோ, அவ்வளவுக் கவ்வளவு வேகமாகக் குரங்குகள் வந்தன; அவை என்னைக் கடிக்க ஆரம்பித்தன. தப்புவது அசாத்தியம் போலத் தோன்றிற்று; ஆனால், அப்பொழுது நான் ஒருவரைச் சந்தித்தேன்; அவர் என்னை நோக்கி, "மிருகங்களை எதிர்த்து நில்" என்று கூறினர். நான் திரும்பிக் குரங்குகளை எதிர்த்து நின்றேன; அவை பின் திரும்பி ஓடின. இதுதான் ஜீவிதம் முழுதுக்கும் ஒரு பாடம். பயங்கரமானதை எதிர்த்துநில்! தைர்யமாய் எதிர்த்து நில்! நாம் ஜீவித கஷ்டங்களைக் கண்டு ஓடாது நின்று விடுகிறபொழுது, அவை குரங்குகளைப்போலப் பின் வாங்கும்.

415. எவரேனும் ஒருவருடைய முன்னோர்கள், அவர்கள் மிருகப்பிராய முடையவர்களா யிருந்தாலுங்கூட, அவர்கள் கொள்ளைக்காரர்களாய் - கொள்

ஸோக்காரப் பிரபுக்களாயிருந்தாலும் கூட, ஜனசமுகத்திலை கௌரவப்படுத்தப்பட்ட மனிதர்களாயிருந்தால், நம்மில் ஒவ்வொருவரும் அவர்களுடைய சந்ததி யென்று கூற முயற்சிப்போம்; மனுஷ்ய அறிவீனம் அத்தகையதா யிருக்கிறது.

416. ஒருவன் மிகமிகச் சிரேஷ்டமானதை யடைந்துவிட்டபொழுது, அவன் புருஷனையாவது-ஸ்திரீயையாவது-ஆண் பெண் என்ற வேற்றுமையை யாவது-வகுப்பையாவது-நிறத்தையாவது - பிறப்பை யாவது-இந்த வித்தியாசங்களில் எதையும் பாராமல் அதீதமாய்ச் சென்று, ஒவ்வொரு மனுஷ்ய ராசியின் பின்னுமுள்ள உண்மையான புருஷனுகிய அந்தத் தெய்வீகத்துவத்தைக் கண்டு பிடிக்கிறபொழுது,— அப்பொழுதுதான் சமஷ்டி சகோதரத்துவத்தை யடைந்தவனுகின்றான்; அந்தப் புருஷனே வேதாந்தி.

417. புரொபஸர் மாக்ஸ் முல்லர் தம்முடைய புத்தகங்களில் ஒன்றில் ஒரு கதை, ஒரு பழைய கிரேக்க கதை சொல்லியிருப்பது எனக்கு ஞாபகம் வருகிறது; ஆதேன்ஸ் மாநகரத்திலே ஸாக்ரடீஸை ஒரு பிராமணர் கண்டு பேசிய விவரம் அதிலே கூறப்பட்டிருக்கிறது. பிராஹ்மணர், "மிகமிக சிரேஷ்டமான அறிவு யாது?" என்று கேட்டார். ஸாக்ரடீஸ், "மனிதனை யறிவதே அறிவெல்லாவற்றினுடையவும் முடிபாகும்" என்று மறுமொழி கூறினர். "ஆனல், கடவுளை யறியாமல் நீங்கள் மனிதனை எப்படி யறிய

முடியும்?" என்று பிராஹ்மணர் பதில் கேட்டார். ஒருபக்ஷம், தற்காலத்திய யூரோப்பாவினால் குறிக்கப் படுகிற கிரேக்கபக்ஷம் மனிதனைப்பற்றிய அறிவை வற்புறுத்திற்று; உலகின் பழைய மதங்களினால் அநேகமாய்க் குறிக்கப்படுகின்ற இந்திய பக்ஷமானது ஈச்வரனைப்பற்றிய அறிவை வற்புறுத்திற்று. ஒருவன் பிரகிருதியில் கடவுளைப் பார்க்கிறான்; மற்றவன் ஈச்வரனில் பிரகிருதியைப் பார்க்கிறான்

418. சிருஷ்டி யென்றால் திரும்பவும் முக்தி பெறுதற்குச் செய்யப்படும் பெரு முயற்சி யென்றே பொருள்.

419. இந்த ஜகத் எதிலிருந்து உண்டாகிறது? எதிலே யுள்ளது? எதனிடம் திரும்பிச் செல்கிறது? என்ற கேள்வி கேட்கப்படுகிறது. மறுமொழியாவது, அன்பிலிருந்து உண்டாகிறது; அன்பிலே அது உள்ளது; திரும்பவும் அன்பினிடமே அது செல்கிறது.

420. ஈச்வரனை யடைவதற்குப் படித்து வித்துவானா யிருக்கவேண்டு மென்பது அவசியமேயில்லை. ஒரு மகாத்மா ஒரு சமயத்தில் என்னை நோக்கி, "பிறரைக் கொல்ல வேண்டுமானால் மனிதனுக்குக் கத்திகளும் கேடயங்களும் வேண்டும்; ஆனால், தற்கொலை செய்துகொள்வதற்கு, ஒரு ஊசியே போதும்; அப்படியே, பிறருக்குப் போதிப்பதற்கு அதிகம்

புத்தியும் படிப்பும் அவசியம்; ஆனால், நீ ஸ்வானுபூதியடைதற்கு அவை அவசியமில்லை" என்றார்.

421. இந்த அமெரிக்க பூமியிலே, ஒரு மனிதனுடைய விசேஷத் தன்மைகளைப்பற்றிக் கேள்வி கேட்கப்படுகிறதேயில்லை. மனிதனாயிருந்தால் போதும். அவர்கள் அவனைத் தங்கள் ஹிருதயங்களுள் எடுத்துக்கொண்டுவிடுகிறார்கள்; உலகில் வேறெந்தத் தேசத்திலும் நான் பார்த்தேயிராத விஷயம் அது.

422. இந்தப் பிரஹ்ம நிஷ்டர்கள் தங்களுடைய சுவாசப் பைகள் மாத்திரமே சுவாசிக்கும்படியான உயரங்கட்கு ஏறிச் சென்றார்களென்றும், அந்த இடங்களிலே மற்றப் பிராணிகளுடைய சுவாசப்பைகள் வெடித்திருக்குமென்றும், ப்ரொபஸர் மாக்ஸ் மூல்லர் நன்றாகச் சொல்லியிருக்கிறார். இந்தத் தீரர்கள், 'என்னவாயினும் சரியே' என்று, யுக்தியானது இட்டுச் சென்ற விடமெல்லாம் பின் தொடர்ந்து சென்றார்கள். தங்களுடைய மிகமிக அரிய மூட நம்பிக்கைகளெல்லாம் தகர்த்தெறியப்பட்டாலும் லக்ஷியம் செய்யவில்லை; ஜன சமூகம் தங்களைப்பற்றி என்ன நினைக்கும்? என்ன பேசும்? என்பதைப்பற்றி யொருபொழுதும் லக்ஷியம் செய்யவில்லை; ஆனால், அவர்கள் எதைச் சரியென்றும், நியாயமென்றும் நினைத்தார்களோ அதைப் போதித்தார்கள், பேசினார்கள்.

423. உலகுக்கு நன்மை செய்வதென்ற இந்த மூடப் பேச்சையெல்லாம் நாம் விட்டுவிட வேண்டும். உன்னுடைய, அல்லது என்னுடைய உதவிக்கு அது காத்துக்கொண் டிருக்கவில்லை ; ஆயினும், நாம் கர்மம் செய்து, இடைவிடாது நன்மையைச் செய்ய வேண்டும். ஏனெனின், அது நமக்கே நன்மையைத் தருவதாம். நாம் பரிபூரண ராவதற்கு அது ஒன்றே வழி.

424. "ஏ, பிரபு! எனக்காக இந்தச் சூர்யனையும், எனக்காக இந்தச் சந்திரனையும் நீ சிருஷ்டித்திருக்கிறாய்" என்று பிரார்த்திக்கும்படி மூடப் பெற்றோர் குழந்தைகளுக்குப் போதிக்கின்றனர் ; இந்தக் குழந்தைகளுக்கு ஒவ்வொன்றையும் சிருஷ்டித்துக் கொடுப்பதைத் தவிர கடவுளுக்கு வேறு வேலையில்லை போலும். உங்கள் குழந்தைகளுக்கு அச்சகைய மூடத்தனத்தைப் போதிக்காதீர்கள். இன்னும் வேறொரு விதத்திலே மூடர்களாயுள்ள ஜனங்கள் உண்டு : "இந்த மிருகங்களெல்லாம் நாம் கொன்று தின்பதற்காகவே சிருஷ்டிக்கப்பட்டிருக்கின்றன" என்றும், "இந்தப் பிரபஞ்சமே மனுஷ்யனுடைய போகத்துக்குத்தான்" என்றும் அவர்கள் நமக்குப் போதிக்கிறார்கள். அவை எல்லாம் மூடத்தனமேயாம்.

425. இவ்வுலகில் ஏதேனும் ஒரு விஷயத்தைப் பற்றிய அறிவில் ஒரு அநுபவம் உண்டாயிருந்தால்

அந்த அநுபவமானது அதற்கு முன் லக்ஷக்கணக்கான தடவைகளில் சாத்தியமா யிருந்திருக்கிறதென்றும், என்றென்றும் சாத்தியமாமென்றும் ஏற்படுகிறது. ஒரே தன்மைதான் பிரகிருதியின் கடுமையான நியதி; ஒருதரம் நேர்ந்தது எப்பொழுதும் நேரக்கூடும்.

426. ஈச்வரன் பெயரால் என் இவ்வளவு கலகம், இவ்வளவு போராட்டம், இவ்வளவு சச்சரவு? வேறெந்தக் காரணத்தில் பார்க்கிலும் ஈச்வரன் பெயராலேயே அதிகம் ரத்தம் சிந்தப்பட்டிருக்கிறது. ஏனெனில், ஜனங்கள் எப்பொழுதும் உற்பத்தி ஸ்தானத்துக்குச் சென்றதில்லை. அவர்கள் தங்கள் முன்னோர்களுடைய வழக்கங்களுக்கு மனத்தினல் சம்மதம் கொடுக்கவே திருப்தி யடைந்திருந்தார்கள்; பிறரும் அப்படிச் செய்யவேண்டுமென்று விரும்பினர்கள். மனிதன் ஆத்மாவை யுணராவிட்டால் தனக்கு ஆத்மா என்று ஒன்று இருக்கிற தென்றுவது, அல்லது ஈச்வரனைத் தரிசிக்காவிட்டால், ஈச்வரன் உண்டு என்றுவது சொல்வதற்கு மனிதனுக்கு என்ன பாத்தியதை யிருக்கிறது? கடவுள் என்று ஒருவர் இருந்தால், நாம் அவரைப் பார்க்கவேண்டும்; ஆத்மா என்று ஒன்றிருந்தால, நாம் அதைக் காணவேண்டும்; இல்லையேல், நம்பாதிருத்தல் நலம். ஒரு வேஷதர்ரியா யிருப்பதினும் வெளிப்படையான நாஸ்திகஞ யிருப்பது நலம்.

427. தீய வழக்கங்களை யொழிப்பதற்கு ஒரே நிவிர்த்தி எதிர் வழக்கங்களாம்; சம்ஸ்காரங்களை வைக்கும் தீய வழக்கங்களெல்லாம் நல்ல வழக்கங்களால் அடக்கப்படவேண்டும். நன்மையைச் செய்து கொண்டே போ! இடைவிடாது பரிசுத்த நினைப்புகளை நினைத்துக்கொண்டே போ! இழிந்த சம்ஸ்காரங்களை யடக்குவதற்கு அது ஒன்றே மார்க்கம். எந்த மனிதனும் நம்பிக்கை யற்றவனென்று ஒரு பொழுதும் சொல்லாதே; ஏனெனில், புதிய, நல்ல வழக்கங்களினால் அடக்கப்படக்கூடிய ஒரு குவியல் வழக்கங்களை, ஒரு நடத்தையையே அவன் குறிப்பிடுகிறான். நடத்தை யென்பது அடிக்கடி யநுஷ்டிக்கப்படும் வழக்கங்களே; அடிக்கடி யநுஷ்டிக்கப்படும் பழக்கங்களே நடத்தையைச் சீர்திருத்த முடியும்.

428. தேவர்களின் அதிபனாகிய இந்திரன் ஒரு காலத்தில் பன்றியாகிச், சேற்றி லுழன்றுகொண்டிருந்தானென்று ஒரு கதை யுண்டு; அவனுக்கு ஒரு பெண் பன்றியும், அநேக குட்டிப் பன்றிகளும் இருந்தன; அவன் வெகு சுகமா யிருந்தான். அப்பொழுது சில தேவர்கள் அவனுடைய ஸ்திதியைக் கண்டு, அவனிடம் வந்து, "நீ தேவர்களின் அதிபன்; உன் ஆக்ஞையின் கீழ்த்தேவாக ளெல்லோரும் இருக்கிறார்கள். நீ ஏன் இங்கே வந்திருக்கிறாய்?" என்று கேட்டார்கள். ஆனால், இந்திரன், "பாதகமில்லை; நான் இங்குச் சௌக்கியமா யிருக்கிறேன். எனக்கு இப் பெண்

பன்றியும், இச் சிறிய பன்றிக் குட்டிகளும் உள்ள வரையில், எனக்குத் தேவலோகம் லக்ஷியமில்லை" என்றான். எளிய தேவர்களுக்கு இன்னது செய்வதென்று தெரியவில்லை. கொஞ்சக்காலத்துக்குப் பின், அவர்கள் பன்றிகளெல்லாவற்றையும் ஒன்றன்பின் ஒன்றாகக் கொல்லத் தீர்மானித்தார்கள். எல்லாம் மரித்துவிட்டபொழுது இந்திரன் அழுது புலம்பத் தொடங்கினான். அப்பொழுது தேவர்கள் அவனுடைய பன்றிச் சரீரத்தைப் பிளந்தார்கள்; அவன் அதனின்றும் வெளியே வந்து, தான் அடைந்திருந்த பயங்கரமான கனவை யறிந்து சிரிக்கத் தொடங்கினான்; தேவர்களின் அதிபனாகிய அவன் பன்றியாகிப், பன்றி வாழ்க்கையே வாழ்க்கை யென்று நினைத்தான்! அது மாத்திரமல்ல; பிரபஞ்சம் முழுதுமே பன்றி வாழ்க்கைக்கு வரவேண்டுமென்று விரும்புவது!

429. ஒவ்வொரு ஆத்மாவும் அந்தர்க்கதமாக ஈச்வரத் தன்மை வாய்ந்தது. லக்ஷியம் யாதெனில், புறத்தும் அகத்துமாய பிரகிருதியை அடக்குவதினால் உள்ளே யுள்ள இந்த ஈச்வரத் தன்மையை வெளிப்படுத்துவதேயாம். கர்மத்தினாலாவது, உபாசனையினாலாவது, யோகத்தினாலாவது, அல்லது ஞானத்தினாலாவது, அல்லது இவை யெல்லாவற்றினாலுமாவது இப்படிச் செய்து, முக்தனாவாய். இதுதான் மதம்.

430. "மனத்தை யடக்குபவனே ஜடத்தையும் அடக்குகிறான்" என்று யோகி கூறுகிறான்.

431. உள்முகப் பிரகிருதியை ஜயித்தவனே ஜகத் முழுதையும் அடக்கி யாள்கிறான்; அது அவனுடைய வேலையாளாய்விடுகிறது.

432. கோழைகள் ஒருபொழுதும் ஜயமடைகிறதில்லை.

433. அமைதியான புருஷன் மந்தமான மனிதன் அல்லன்.

434. ஆகாரத்தைப்பற்றிச் சில நியமங்கள் அவசியமாம்; நமக்கு மிகமிகப் பரிசுத்தமான மனத்தை யளிக்கின்ற ஆகாரம் எதுவோ, அதையே நாம் உபயோகிக்கவேண்டும். நீ ஒரு மிருகக் காட்சிச் சாலைக்குச் சென்றால், நீ, இது உடனே ருசப்படுத்தப்படக் காண்பாய். யானைகள் பெரிய மிருகங்களாயிருந்தும் அமைதியாயும் அடக்கமாயும் இருக்க நீ பார்க்கிறாய்; நீ சிங்கங்களினுடையவும் புலிகளினுடையவும் கூண்டுகளை நோக்கிச் சென்றால், அவை அமைதியற்றிருக்க நீ காண்கிறாய். ஆகாரத்தினால் எவ்வளவு வித்தியாசம் உண்டாகிறது என்பது விளங்குகிறது. இந்தச் சரீரத்தில் வேலை செய்து வரும் சக்திகளெல்லாம் ஆகாரத்திலின்றும் உண்டாயிருக்கின்றன; நாம் அதைத் தினந்தோறும் காண்கிறோம். நீ பட்டினி கிடக்க ஆரம்பித்தால், உனது சரீரம் பலஹீனமடையும்; ஸ்தூல சக்திகள் குறைவுறும்; பின்னர், சின்னாட்

களுக்குப் பிறகு, மனோ சக்திகளும் குறைவுறும். முதலாவது, ஞாபகம் தவறும்; பின்னர், நீ ஆலோசிக்க முடியாத, அதிலும், ஒன்றுமே செய்ய முடியாத ஒரு நிலை யுண்டாகிறது. ஆகையால், ஆரம்பத்தில் நாம் எத்தகைய ஆகாரம் உண்கிறோ மென்பதைப் பற்றி நாம் ஜாக்கிரதையாயிருத்தல் வேண்டும்; நமக்குப் போதிய பலம் உண்டாய்விட்டபொழுது, நமது அநுஷ்டானம் நன்றாக அபிவிருத்தி யடைந்துவிட்டபொழுது, நாம் இந்த விஷயத்தில் அவ்வளவு ஜாக்கிரதையா யிருக்கவேண்டாம். செடி வளர்கிறபொழுது, அதற்குத் துன்பம் நேரிடாதபடி, சுற்றி வேலி கட்டவேண்டும்; ஆனால், அது மரமாகிவிட்டால், வேலிகள் எடுக்கப்படவேண்டும்; அது எல்லா அடிகளையும் எதிர்த்து நிற்பதற்குப் போதிய பலமுள்ளதாகிறது.

435. நான் இந்தத் தேசத்தில் (அமெரிக்காவில்) மாமர்ன் ஜாதியைச் சேர்ந்த ஒருவரைச் சந்தித்தேன். அவர் என்னைத் தம்முடைய மதத்தில் சேரும்படி தூண்ட முயன்றார். நான், "உங்கள் அபிப்பிராயங்களில் எனக்கு அதிக மதிப்பு உண்டு; ஆனால், சில விஷயங்களில் நாம் ஒத்துக்கொள்கிறதில்லை. நான் சந்நியாச வகுப்பைச் சேர்ந்தவன்; நீங்கள் அநேக மனைவிகளை விவாகம் செய்து கொள்வதில் நம்புகிறீர்கள். ஆனால், நீங்கள் ஏன் போதிப்பதற்கு இந்தியாவுக்குச் செல்லவில்லை?" என்று கேட்டேன்.

அப்பொழுது அவர் ஆச்சர்ய மடைந்தார்; அவர், "என்ன, நீங்கள் விவாகத்திலேயே நம்புகிற தில்லையே; நாங்கள் அநேக மனைவியர்களை வைத்துக் கொள்பவர்கள்; அப்படி யிருந்தும் நீங்கள் என்னை உங்களுடைய தேசத்துக்குப் போகும்படிச் சொல்லி றீர்கள்" என்று சொன்னார். நான் கூறியதாவது: "ஆம்; மதக் கொள்கை எங்கேயிருந்து வந்தாலும் என்னுடைய தேச ஜனங்கள் அதைக் கேட்பார்கள்; நீங்கள் இந்தியாவுக்குப் போகவேண்டுமென்று நான் விரும்புகிறேன்; முதலாவது, நான் அநேக வகுப்புக் கள் ஏற்படுவது நல்லது என்று நம்புகிறவன். இரண் டாவது, இப்பொழுதுள்ள வகுப்புக்களிலே சற்றும் திருப்தியடையாத ஜனங்கள் இந்தியாவிலே அநேகர் இருக்கிறார்கள்; இந்த அதிருப்தியினாலே, அவர்கள் மதத்தை விட்டுவிட்டார்கள்; அவர்களிற் சிலர் உங் களைப் பின்பற்றுவதற்குக் கிடைக்கலாம்."

436. நாம் நினைக்கிறதுபோலவே ஒவ்வொரு வரும் ஏன் நினைக்கவேண்டும்? எனக்குக் காரணம் தெரியவில்லை. நான் ஒரு புத்தியுள்ள மனிதனானால் நான் நினைப்பதுபோல அவர்கள் நினைக்கவில்லை யென்பதுபற்றி நான் சந்தோஷப்படவேண்டும். சவக்குழி போன்றுள்ள ஒரு பூமியில் வசிக்க நான் விரும்பவில்லை; மனிதர்களுள்ள ஒரு உலகத்திலே ஒரு புருஷனாயிருக்க நான் விரும்புகிறேன். மூளை யுள்ள பிராணிகள் வித்தியாசப்படத்தான் வேண்டும்;

வித்தியாசமே ஆலோசனைக்கு முதலாவது அறிகுறி. நான் ஆலோசனையுள்ள மனிதனானால், அபிப்பிராய வித்தியாசங்களுள்ள ஆலோசனை புருஷர்களின் மத்தியில் வசிக்க விரும்பவேண்டும்.

437. மனிதன் தனக்குத்தானே செய்துகொள்கின்ற நியதிகளைத் தவிர, வேறெந்த நியதிகளினாலும் கட்டுப்படாதவன்.

438. இந்த வெளிப்பாட்டுக்கு விரோதமாயுள்ள ஒவ்வொரு செய்கையும் தீய செய்கை யெனப்படுகிறது; அப்படியேதான் நினைப்புக்களும். ஜீவன் தனது உண்மைத் தன்மையை வெளிப்படுத்துவதற்கு அநுகூலமா யிருக்கின்ற ஒவ்வொரு செய்கையும் ஒவ்வொரு நினைப்பும் நல்லதேயாம்.

439. இதோ இந்த உலகம் இருக்கிறது. கடவுள் இல்லை யென்று சொல்கிற மனிதன் மூடனேயாவன்; ஏனெனில், உலகமென்று ஒன்று இருந்தால், அதற்கு ஒரு காரணம் இருக்கவேண்டும்; அதுதான் கடவுள் எனப்படுகிறது. காரணம் ஒன்று உண்டு என்று தெரிந்துகொள்ளாமல், உனக்கு ஒரு கார்யமும் உண்டாகாது. இவ்வுலகம் மறைந்துவிடுகிறபொழுதுதான் கடவுள் மறைந்துவிடுவார்; அப்பொழுது நீயே கடவுளாய்விடுகிறாய்; அப்புறம் உனக்கு இவ்வுலகம் கிடையாது.

440. இந்த மத விஷயங்களிலே ஹிந்துக்கள் எப்பொழுதும் அமிதவாதத்தையே பின்பற்றுகிறார்

கள். தங்களுடைய கைகள் வாடி விழுந்து மரிக்கிறவரையில், தங்கள் வாழ்நாட்களெல்லாம் தங்கள் கைகளை உயரத் தூக்கிக்கொண்டு நிற்கும் மனிதர்களை நீங்கள் காண்பீர்கள். தங்கள் பாதங்கள் வீங்குகிறவரையில், மனிதர்கள் நின்றுகொண்டே யிருக்கிறார்கள்; அவர்கள் உயிருட னிருந்தால், இந்த நிலைமையிலே கால்கள் மிகவும் முரடாய்விடுகின்றன; அவர்கள் அவற்றை அப்புறம் வளைக்க முடிகிறதில்லை. ஆனால், தங்கள் வாழ்நாட்களெல்லாம் நின்றுகொண்டேதான் இருக்கவேண்டியிருக்கிறது. இம்மாதிரி கைகளைத் தூக்கிக்கொண்டிருந்த மனிதர் ஒருவரை நான் ஒரு ஸமயம் கண்டேன்; அவர் முதலில் அப்படிச் செய்ய ஆரம்பித்தபொழுது எப்படி யிருந்ததென்று அவரைக் கேட்டேன். அது பயங்கரமான சித்திரவதையா யிருந்ததென்று அவர் சொன்னார். அவர் ஒரு ஆற்றுக்குச் சென்று தண்ணீரில் இறங்கி நிற்கவேண்டியிருக்கும்படி அத்தகைய சித்திரவதையா யிருந்ததாம்; அது அந்த நோவைக் கொஞ்சம் சாந்தி செய்தது. ஒரு மாதமாகவே அவர் அதிகம் கஷ்டப்படவில்லை. அத்தகைய அப்பியாசங்களினால் சித்திகள் அடையப்படக்கூடும்.

441. "நல்ல சம்ஸ்காரங்களினால் அபாரமான சக்தியை அடைய வல்லவர்களாயுள்ளவர்கள் மரிக்க வேண்டி யிராதென்றும், ஆனால், இதே ஜன்மத்தில் தங்கள் சரீரங்களைத் தேவ சரீரங்களாக மாற்றிக்

கொள்ள முடியும்" என்றும் யோகிகள் கூறுகிறார்கள்.

442. நாம் எதையும் குருட்டுத்தனமாகப் பின்பற்றக்கூடாது. யோகியானவன் தர்க்க அவஸ்தையைக் கடந்து பாறைகள் போன்ற அசையாத ஒரு முடிவுக்கு வந்திருக்கிறான். அவன் இப்பொழுது செய்ய விரும்பும் ஒரே விஷயம் யாதெனில், அந்த முடிவை உறுதிப்படுத்துவதேயாம். உன்னுடன் எவரேனும் வாதிக்க வந்து வற்புறுத்தினால் "வாதிக்காதே; மௌனமாயிரு." என்று அவன் கூறுகிறான். எந்த நியாயத்துக்கும் பதில் கூறாதே; ஆனால், அமைதியாய்ப் போய்விடு; ஏனென்னில், வாதங்கள் மனத்தைக் கலக்கத்தான் செய்கின்றன. அவசியமாயுள்ள ஒரே விஷயம் யாதெனில், புத்தியைப் பயிற்றுவிப்பதேயாம். அதைப் பிரயோசன மில்லாமல் கலக்கி விடுவதில் யாது பயன்? புத்தியானது ஒரு பலஹீனமான கருவி; புலன்களுக் குட்பட்ட அறிவையே அது நமக்கு அளிக்கக்கூடும். யோகியானவன் புலன்களைக் கடந்து செல்ல விரும்புகிறான்; ஆகையினால், அவனுக்குப் புத்தியினால் பிரயோசன மில்லை.

443. மனத்தில் உனக்கு உள்ள ஒவ்வொரு எண்ணத்துக்கும் மறுபாகமாக ஒரு வார்த்தையுண்டு; பதமும் நினைப்பும் பிரிக்கப்பட முடியாதன. ஒரே விஷயத்தின் வெளிப்பாகத்தை நாம் பதம் என்கிறோம், உள் பாகத்தை நாம் நினைப்பு என்கிறோம்.

எந்த மனிதனும் பாகுபாடு முறையினுலே எண்ணத்தைப் பதத்திலிருந்து பிரிக்க முடியாது. பாஷையானது மனிதர்களால் சிருஷ்டிக்கப்பட்டது—சில மனிதர்கள் ஒன்ருய் உட்கார்ந்துகொண்டு வார்த்தைகளை நிர்மாணித்தார்கள்—என்ற கருத்து தப்பு என்று ருசுப்படுத்தப்பட்டுவிட்டது. மனிதன் உள்ள நாளிலிருந்து, வார்த்தைகளும் பாஷையும் இருந்தே வருகின்றன. எண்ணத்துக்கும் பதத்துக்கும் என்ன சம்பந்தம்? ஒரு நினைப்புடன் ஒரு வார்த்தையும் எப்பொழுதும் இருந்தே தீரவேண்டும் என்பதை நாம் அறிகிறபொழுதிலும் அந்த நினைப்புக்கு அதே வார்த்தைதான் வேண்டும் என்பது அவசியமில்லை. இருபது வெவ்வேருன தேசங்களில் நினைப்பு ஒன்ரேயாயிருக்கலாம்; ஆயினும், பாஷை வேறு.

444. ஒருவன் எப்பொழுதாவது அந்த ஸ்திதியை அடைந்தானென்ற விஷயமே, ஒவ்வொருவரும் அப்படிச் செய்வது சாத்திய மென்பதை ருசுப்படுத்துகிறது.

445. புஸ்தகங்களினிடம் ஒட்டிக்கொள்ளுதல் மனுஷ்ய மனத்தைத் தாழ்மைப்படுத்துகிறது.

446. யோகசாஸ்திரமானது என்ன போதிக்கின்றது? இந்த அறிவெல்லாம் நியாய வாதத்துக்கு அப்பாலிருந்து தங்களுக்கு வந்ததென்றும், தங்களுக்குள்ளிருந்தே அது வந்ததென்றும் யோகிகள் கூறுவது சரியென்று அது போதிக்கின்றது.

447. மனுஷ்ய சரீரத்திலேயுள்ள சக்திகளெல்லாவற்றிலும், யோகிகள் எதை ஓஜஸ் என்று கூறுகிறார்களோ அதுவே மிகமிக சிரேஷ்டமானதென்று அவர்கள் சொல்கின்றனர். இப்பொழுது இந்த ஓஜஸ் மூளையிலே சேர்த்துவைக்கப்படுகிறது. ஒரு மனிதனுடைய சிரசிலே எவ்வளவுக் கெவ்வளவு அதிகமாக ஓஜஸ் இருக்கிறதோ அவன் அவ்வளவுக் கவ்வளவு சக்தி வாய்ந்தவனாகிறான்; அவ்வளவுக் கவ்வளவு புத்திசாலியாகிறான்; அவ்வளவுக் கவ்வளவு ஆத்மீக பலமுள்ளவனாகிறான். ஒருவன் அழகிய நினைப்புக்களையும் அழகிய பாஷையையும் பேசலாம்; ஆனால், அவை ஜனங்களுடைய மனத்தில் ஆழமாகப் பதிகிறதில்லை. இன்னொருவன் அழகிய பாஷையும் பேசுகிறதில்லை; அழகிய நினைப்புக்களையும் வெளியிடுகிறதில்லை; ஆயினும், அவனுடைய வார்த்தைகள் பிரமிப்பித்துவிடுகின்றன. அவனுடைய ஒவ்வொரு செய்கையும் சக்தி வாய்ந்ததா யிருக்கிறது. அது தான் ஓஜஸின் சக்தி.

448. மனுஷ்ய சக்தியில் இந்திரியமாக வெளிப்படுகின்ற அந்தப் பாகமானது அடக்கி யாளப்படுகிறபொழுது சுலபமாக ஓஜஸாக மாறிவிடுகிறது.

449. ஓஜஸைக் கொண்டுபோய் மூளையில் சேர்த்து வைப்பதற்கு ஜிதேந்திரியர்களாலே முடியும்; அதனால்தான் பிரஹ்மச்சர்யத்துவம் எப்

பொழுதும் மிக்மிகச் சிரேஷ்டமானதாகக் கருதப் பட்டு வருகிறது.

450. குண்டலினி சக்தியைக் கிளப்பிவிடுவது ஒன்றேதான் ஈசவரஞானம் அடைவதற்கு, பிரக்ஞாதீத தர்சனம் அடைவதற்கு, ஆத்மானுபூதி யடைவதற்கு வழி. அப்படிக் கிளப்பிவிடுதல் பல வழிகளில் உண்டாகலாம். ஈச்வர பக்தியினாலே, பரிபூர்ண மகாத்மாக்களின் கிருபாகடாட்சத்தினாலே, அல்லது தத்துவஞானியின் பாகுபாடுச் சக்தியினாலே உண்டாகலாம்.

451. ஒரு மனிதன் நன்றாகப் பிராணனை யறிந்து அடக்க முடியுமானால், பூமியிலே எந்தச் சக்தி அவனுடைய தல்லாததா யிருக்கும்? சூர்யனையும், நட்சத்திரங்களையும் அவற்றின் இடங்களிலிருந்து மாற்றிவிட அவன் வல்லவனாவான்; அணுக்கள்முதல் மிகமிகப் பிரமாண்டமான சூர்யர்கள்வரைப் பிரபஞ்சத்திலுள்ள ஒவ்வொன்றையும் அவன் அடக்கியாள வல்லவனாவான்; ஏனெனில், அவன் பிராணனை யடக்குவான். இதுதான் பிராணாயாமத்தின் முடிப்பு.

452. பிராணனைக் கிரகித்துவிட்டவன் பிரபஞ்சத்திலே யுள்ள மானசிக, அல்லது ஸ்தூலமான சக்திகளெல்லாவற்றையும் கிரகித்துவிட்டவனாகிறான். பிராணனை யடக்கியவன், தனது மனத்தையும், உள்ள எல்லா மனங்களையும் அடக்கியவனாகிறான். பிராணனை யடக்கியவன், தன்து சரீரத்தையும், உள்ள

எல்லாச் சரீரங்களையும் அடக்கியவனாகிறான். ஏனெனில், பிராணனே சக்தியின் பொதுப்படை வெளிப்பாடாம்.

453. "ஜாதியின் அழிவு சமுதாய அழிவுக்குக் காரணமாய்விடும்" என்று அவர்கள் கூறுகிறார்கள்; தங்களுடையதே மிகமிக நெடுங்காலமாக இருந்து வருகிற சமுதாய மென்றுள்ள சரித்திர விஷயத்தை அவர்கள் தைர்யமாக எடுத்துக் காட்டுகிறார்கள்.

454. ஒரு அரசன் இருந்தான். அவனிடத்திலே முகஸ்துதி செய்து பிழைப்பவர்கள் ஏராளமா யிருந்தார்கள். இவர்களில் ஒவ்வொருவனும் தான் தன் எஜமானனுக்குத் தனது உயிரைத் தத்தம் செய்வதற்குத் தயாராயிருப்பதாகவும், தான் ஒருவனே மிகமிக உண்மையான விச்வாச முள்ளவனென்றும் சொல்லி வந்தான். கொஞ்சக் காலம் கழிய, ஒரு சந்நியாசி அவ்வரசனிடம் வந்தார். தன்னிடத்திலுள்ள பரிவாரத்தினரைப்போன்று எந்த அரசனும் எப்பொழுதும் உடைத்தாயிருந்ததில்லை யென்று அந்த அரசன் அவரிடம் கூறினான் சந்யாசி புந்நகை புரிந்து கொண்டு, தாம் அதை நம்பவில்லை யென்று கூறினார். "வேண்டுமானால் பரீட்சை பண்ணிப் பார்க்கலாம்" என்று அரசன் சந்யாசியினிடம் சொன்னான். ஆகையால், சந்யாசி தாம் ஒரு பெரிய யாகம் செய்யப் போவதாயும், "அதனால் அரசனுடைய ஆட்சி நெடுங்காலம் நீடிக்கும்படிச் செய்யப்படும்" என்

றும், "ஆனால் ஒரு நிபந்தனை யுண்டு" என்றும், "ஒரு சிறு குளம் வெட்டி அதில் பரிவாரத்தினருள் ஒவ்வொருவனும் நடு ராத்திரியில் ஒரு குடம் பால் கொண்டுவந்து கொட்டவேண்டும்" என்றும் கூறினார். அரசன் புன்னகை புரிந்து, "இதுதானா பரீக்ஷை?" என்று கேட்டான். அவன் தனது பரிவாரத்தினரை யழைத்துச், செய்யவேண்டிய தின்னதென்று சொன்னான். அவர்க ளெல்லோரும் அதற்கிணங்கித் தங்கள் சந்தோஷகரமான சம்மதத்தைத் தெரிவித்துவிட்டுத் திரும்பி வந்துவிட்டார்கள். அர்த்த ராத்திரியில் அவர்கள் சென்று, தங்கள் குடங்களிலுள்ள பாலைக் குளத்திலே கொட்டினார்கள். ஆனால், காலையில், அந்தக் குளத்தில் தண்ணீர் மாத்திரம் தான் காணப்பட்டது. பரிவாரத்தினர் கூட்டப்பட்டு விஷயத்தைப்பற்றி விசாரிக்கப்பட்டனர். அவர்களில் ஒவ்வொருவனும் எத்தனையோ குடம் பாலில் தன்னுடைய தன்னுடைய தண்ணீர் கண்டு பிடிக்கப்பட முடியாது என்று நினைத்துவிட்டான்.

455. ஹிருதயமே லக்ஷியத்தினிடம் சென்று அடைகிறது; ஹிருதயத்தைப் பின்பற்றுங்கள்! பரிசுத்தமான ஹிருதயமானது புத்திக்கப்பால் பார்க்கிறது; அது அருள் பெற்றுவிடுகிறது; யுக்தியினால் ஒருபொழுதும் அறிய முடியாத விஷயங்களை அது அறிந்துகொள்கிறது; பரிசுத்தமான ஹிருதயத்துக்கும் புத்திக்கும் சச்சரவு ஏற்பட்டால், உன்னு

டைய ஹிருதயம் செய்வது நியாயத்துக்குப் பொருந்தாதது என்று நீ நினைத்தால்கூட, எப்பொழுதும் பரிசுத்தமான ஹிருதயத்தின் பக்கமே சேர்ந்து நில்.

456. "ஈச்வரன் உண்டு என்பதற்குப் பிரமாணம் யாது?" பிரத்தியக்ஷ தர்சனமே.

457. தேவ வடிவத்திலே கர்மம் செய்வதில்லை; மனிதனே கர்மம் செய்கிறான். கர்மம் என்றால் காரியத்தை யுண்டுபண்ணும்படியான செய்கையே யாம். ஒருவன் இறந்து தேவனாகிறபொழுது அவனுக்குச் சுகானுபவத்துக்கு மாத்திரம் காலம் இருக்கிறது; அச் சமயத்திலே அவன் புதிய கர்மம் செய்கிறதில்லை; அவன் முன் செய்துள்ள சற்கருமத்துக்கு அது பலன் மாத்திரமே யாகும். சற்கர்மானுபவம் தீர்ந்த பிறகு, பாக்கியுள்ள கர்மம் பலன் பெற ஆரம்பிக்கிறது; அவன் பூமிக்கு வந்து சேர்கிறான்; அவன் மறுபடியும் மனிதன் ஆகிறான். அவன் மிகவும் நல்ல கர்மங்களைச் செய்து தன்னைப் பரிசுத்தப்படுத்திக் கொள்வானானால், அவன் பிரஹ்மலோகம சென்றுவிடுகிறான், திரும்ப வருகிறதில்லை.

458. நிர்க்குணப் பிரஹ்மோபாசனை யென்பது யாது? "ஏ, பிரபு! நான் ஒன்றுமே யில்லை; என்மீது கிருபை பாலிக்க வேண்டும்—" என்ற மாதிரி அடிமைத்தனமே யங்கில்லை. ஆங்கிலத்திலே மொழி பெயர்க்கப்பட்டிருக்கிற பழைய பாரசீகக் கவி உங்களுக்குத் தெரியும். "நான் எனது காதலியைப் பார்க்க

வந்தேன். கதவுகள் சாத்தப்பட்டிருந்தன. நான் தட்டினேன்; 'நீ யார்?' என்று ஒரு சப்தம் உள்ளேயிருந்து வந்தது. 'நான் இன்னார்.' கதவு திறக்கப்படவில்லை. இரண்டாம முறை நான் வந்து, கதவைத் தட்டினேன்; அதே கேள்வி கேட்கப்பட்டேன்; அதே மறுமொழி கொடுத்தேன்; கதவு திறக்கப்படவில்லை. நான் மூன்றாவது தடவை வந்தேன். அதே கேள்வி வந்தது. நான் 'எனது அன்பே! நான் நீயே' என்றேன்; கதவு திறக்கப்பட்டது." நிர்குணோபாசனை சத்தியத்தின் மூலமாகத்தான். சத்தியம் யாது? 'நானே அவர்' என்பதுதான்.

459. ஒவ்வொன்றுக்கும் பின்னால், ஒரே தெய்வத்தன்மைதான் உள்ளது; இதிலிருந்து நல்லொழுக்கத்துக்கு ஆதாரம் ஏற்படுகிறது. இன்னொருவருக்கு இம்சை செய்யாதே. ஒவ்வொருவரையும் உன்னைப்போலவே கருதி அன்பு செலுத்து; ஏனெனில், ஜகத் முழுதும் ஒன்றே. இன்னொருவரைத் துன்புறுத்தினால், நான் என்னையே துன்புறுத்திக்கொள்கிறேன்; இன்னொருவரை நேசிப்பதினால் நான் என்னையே நேசித்துக் கொள்கிறேன்.

460. சுவாசம் பிராணனுடைய ஒரு கார்யமாம்.

461. நாம் ஈச்வரனைப் பார்ப்பதெல்லாம் ஒரு பாகமேயாகும்; நாம் பிரபஞ்சத்தில் ஒரு பாகத்தைப்

பார்ப்பதுபோல்; மற்றவை யெல்லாம் மனுஷ்ய அறிவுக்கு அப்பா லுள்ளவை.

462. சாஸ்திரங்களைக் கடந்து செல்! ஏனெனில், அவை பிரகிருதி வரையில்தான், முக்குணங்கள் வரையில்தான் போதிக்கின்றன. நாம் அவற்றைக் கடந்து அப்பால் சென்றால், நாம் சமரசத்தைப் பார்க்கிறோம்; அதற்கு முன் அல்ல.

463. நமது சாஸ்திரங்களிலே எங்கெல்லாம் ஈச்வரன் என்ற பதம் உபயோகப்படுத்தப்பட்டிருக்கிறதோ அங்கெல்லாம் அதன் பொருள் யாதெனில், "முக்தி யடைந்த மனுஷ்ய ராசிகள்" என்பதே என்று கபிலர் கூறுகிறார்.

464. மூன்று வஸ்துக்கள் இருக்கின்றன. அகண்டமாய், ஆனால் மாறுத லுள்ளதாய் இதோ பிரகிருதி யிருக்கிறது. பிரகிருதி முழுதும் ஆதியுமற்று, அந்தமுமற்று இருக்கிறது; ஆனால், அதனுள் எண்ணற்ற மாறுதல்கள் இருக்கின்றன. அது ஆயிரக்கணக்கான வருஷங்களாகச் சமுத்திரத்தினிடம் ஓடிக்கொண்டிருக்கின்ற நதிபோன் றிருக்கிறது. அது எப்பொழுதும் ஒரே நதிதான்; ஆனால், அது ஒவ்வொரு நிமிஷமும் மாறிக்கொண்டிருக்கிறது. ஜலத்துளிகள் தங்கள் நிலையை இடைவிடாது மாற்றிக்கொண்டிருக்கின்றன. பின்னர், மாறுத லற்றவராய், அதிபதியாய், கடவுள் இருக்கிறார்; கடவுளைப் போலவே மாறுத லற்றதாய், நித்தியமாய், ஆனால்,

அதிபதியின் ஆட்சிக்குட்பட்டதாய் ஆத்மா இருக்கிறது. ஒன்று எஜமானன், மற்றது பணியாளன், மூன்றாவது பிரகிருதி.

465. புத்தகங்கள் ஒருபொழுதும் மதங்களையுண்டாக்கியதில்லை. ஆனால், மதங்களே புத்தகங்களையுண்டாக்குகின்றன. நாம் அதை மறக்கக்கூடாது. எந்தப் புத்தகமும் எப்பொழுதேனும் ஈச்வரனைச் சிருஷ்டிக்கதில்லை. ஆனால், ஈச்வரனே எல்லாப் பெரிய கிரந்தங்களுக்கும் அருள் கொடுத்தவர். எந்தப் புத்தகமும் ஒருபொழுதும் ஆத்மாவைச் சிருஷ்டித்ததில்லை. நாம அதை மறக்கக்கூடாது. எல்லா மதங்களினுடையவும் நோக்கம் ஆதமாவில் ஈச்வராநுபூதி யடைதலேயாம். அது ஒன்றே சர்வ சமரச மதம்.

466. ஒருவன் உலகிலுள்ள எல்லாக் கோவில்களிலும் நம்பிக்கை வைக்கலாம். எழுதப்பட்டுள்ள பரிசுத்த கிரந்தங்கள் அனைத்தையும் அவன் தனது தலையில் தூக்கிச் செல்லலாம். உலகிலுள்ள பரிசுத்த நதிகளெல்லாவற்றிலும் அவன் முழுகியிருக்கலாம்; ஆயினும், அவனுக்கு ஈச்வர தர்சனம் ஏற்படாவிட்டால், நான் அவனை மிகமிகப் பெரிய நாஸ்திகவாதியென்றே கூறுவேன்.

467. உண்மையான போதனைக்கு முதலாவது பரீக்ஷை யாதாயிருக்கவேண்டுமெனில், அந்த உப

தேசம் நியாயத்துக்கு விரோதமா யிருக்கக்கூடாது என்பதே.

468. யுக்தியானது கொஞ்சதூரம்தான் செல்ல முடியும்; பிறகு நின்றுவிடுகிறது; அதற்கு மேல் அது போக முடியாது; அதை முன் தள்ள முயற்சித்தால், பலன் பெருங் குழப்பமே; யுக்தியே யுக்தியல்லாததாய்விடுகிறது. தர்க்கமானது சுற்றிச்சுற்றி வரும் வாதமாய்விடுகிறது.

469. ஜடம் என்பது என்ன? சக்தியினல் பாதிக்கப்படுவது. சக்தி என்பது யாது? ஜடத்தைப் பாதிப்பது.

470. நம்மை உருவமுள்ள ராசிகளாக்கிவைத்திருப்பது யாது? பேதமே. பரிபூர்ண சமத்துவம் நமது அழிவாய்விடும்.

471. இப் பிரபஞ்சத்திலே சலனம் சாத்தியமா யிருப்பதற்குக் காரணம் யாது? சமத்துவ மின்மையே. இந்தப் பிரபஞ்சம் அழிந்தால்தான் ஒரே மாதிரி தன்மை யுண்டாகும்; இல்லையேல், அது அசாத்தியமாம்.

472. உதவி வெளியிலிருந்து வருகிறதில்லை, நம்முள்ளிருந்தே உண்டாகிறது. பிரபஞ்சத்திலுள்ள கடவுளர்களை யெல்லாம் நோக்கிக் கதறுங்கள்! நான் அநேக வருஷங்கள் கதறினேன்; கடைசியில் எனக்கு உதவி கிடைத்ததெனக் கண்டேன். ஆனல், உதவி உள்ளிருந்து வந்தது.

473. எல்லா அறிவும் எதிர்ச் செய்கையினுலாகிறது.

474. சிருஷ்டிக்கு ஆதியு மிருக்க முடியாது; அது ஒரு நித்திய நடையாம்.

475. ஏன் ஸைஹுக் குணக்காரவர்கள் காலின் கீழே போட்டு மிதிக்கப்படுகிறார்கள்? பட்டினி கிடக்கிறார்கள்? இவர்கள் இப்படிக் கஷ்டங்கள் அநுபவிக்க ஒன்றும் செய்ததில்லையே! யார் உத்தரவாதி. எனக்கு அதிலே பொறுப்பு இல்லாவிட்டால், நிச்சயமாய்க் கடவுள்தான் உத்தரவாதி யாவார். ஆகையால், மிகவும் உத்தமமான நியாயம் யாதெனில், நான் அநுபவிக்கின்ற துன்பங்களுக்கு நானே உத்தரவாதி யென்பதாம், நான் ஸுதந்தரத்தைச் சலனத்துக்கு உட்படுத்திவிட்டால், பலன்களுக்கு நானே உத்தரவாதி. நான் துக்கத்தை யுண்டுபண்ண முடியுமானால், நான் அதை நிறுத்தவும் முடியும். இதனால் நான் ஸ்வதந்திரன் என்பது அவசியமாய் ஏற்படுகிறது. விதியென்று ஒன்று இல்லை. நம்மைக் கட்டாயப்படுத்துவதற்கு ஒன்றுமில்லை. நான் செய்துள்ளதை நான் அழிக்க முடியும்.

476. மிகமிகத் தாழ்ந்த பொருளிலேகூட ஆநந்தம் என்பதெல்லாம் அவனுடைய பிரதிபலனமேயாம். நன்மையா யுள்ளதெல்லாம் அவனுடைய பிரதிபலனமேயாம்; அந்தப் பிரதிபலனம் சாயையா யுள்ளபொழுது, அது தீமை யெனப்படுகிறது.

477. நாம் ஒவ்வொன்றையும் ஆத்மாவிலும் ஆத்மாவாகவும் அநுபவித்தோமானல், துக்கமாவது எதிர்ச் செய்கையாவது உண்டாகாது. இதுதான் பரிபூர்ண ஆநந்தம்.

478. எது உண்மையா யுள்ளது? ஒருபொழுதும் மாறுத லற்றதே. மனுஷ்யனுடைய ஆத்மா, பிரபஞ்சத்தின் பின்னே யுள்ள பிரஹ்ம சொரூபம்.

479. மலை போன்று கஷ்டங்கள் தோன்றினலும், எல்லா வஸ்துக்களும் பயங்கரமாயும் கவலைக்கிடமுள்ளன போலும் தோன்றினலும், அவை மாயையேயாம். பயப்படாதே,—அது ஒழிந்துவிடுகிறது. அதைத் நசுக்கிவிடு, அது மறைந்துவிடுகிறது. அதன்மீது எறி மிதி, அது மரித்துவிடுகிறது. பயப்படாதே. எத்தனை தடவை தவறுகிறு யென்பதைப் பற்றி நினைக்காதே. பாதகமில்லை. காலம் அநந்தம். மேலே செல்; மறுபடியும் மறுபடியும் உன்னை உறுதிப்படுத்திக்கொள்; ஜீவன் உண்டாகத்தான் வேண்டும். பிறந்துள்ள ஒவ்வொருவரையும் நோக்கி நீ பிரார்த்திக்கலாம்; ஆனல், உனக்கு உதவி செய்வதற்கு எவர் வருவார்? ஒருவரும் தப்புவிக்க முடியாத மரண மார்க்கத்தைப்பற்றி என்ன? உன்னலே உனக்கு உதவி செய்துகொள். நண்பா! வேறெவரும் உனக்கு உதவி செய்ய முடியாது. ஏனெனில், நீயே உனக்கு மிகமிகப் பெரிய சத்துரு; நீயே உனக்கு மிகமிகப் பெரிய நண்பன். அப்படியாயின்,

ஆத்மாவைப்பற்றி நில்! எழுந்து நில்! பயப்படாதே! எல்லாத் துன்பங்களுக்கும் எல்லாப் பலஹீனத்துக்கும் மத்தியில், ஆத்மா, மூகனில் மங்கலாயும் மறைவாயும் வந்தாலும், வெளியே வரட்டும். நீ தைர்யம் பெறுவாய்; கடைசியாக ஒரு சிங்கத்தைப் போல, "நானே அது! நானே அது!" என்று கர்ச்சிப்பாய்! "நான் புருஷனுமில்லை, ஸ்திரீயுமில்லை, தேவனுமில்லை, பைசாசமு மில்லை, மிருகங்களில் செடிகளில் அல்லது மரங்களில் எதுவும் இல்லை; நான் ஏழையுமில்லை, பணக்காரனுமில்லை; வித்துவானுமில்லை, மூடனுமில்லை. நான் உள்ளபடி என்னுடன் ஒப்பிட்டுப் பார்த்தால், இவ்வஸ்துக்கள் எல்லாம் அற்பமேயாம். ஏனெனில், நான் அதுவே! நானே அது! சூர்யனையும், சந்திரனையும், நக்ஷத்திரங்களையும் பாருங்கள்! அவற்றில் பிரகாசிக்கின்ற ஒளி நானே! அக்கினியில் அழகாயிருப்பது நானே! ஜகத்தில் சக்தியாய் விளங்குவது நானே! ஏனெனில், நானே அது, நானே அது!"

480. அவ் ஏக வஸ்துவை அநேகத்துக்குள் எவன் பார்க்கிறானோ, மாறுதலுள்ள பிரபஞ்சத்திலே மாறுதலற்ற அவ்வொன்றைப் பார்க்கிறானோ, எவனொருவன் அதைத் தனது ஆத்மாவுக்கும் ஆத்மாவாகப் பார்க்கிறானோ, அவனுக்கே நித்திய சாந்தி ஏற்படுகிறது—வேறெவருக்கு மில்லை.

481. அநந்தம் அந்தமா யிருக்கிறது, அந்தம் அநந்தமா யிருக்கிறது. இதுதான் நமது வாழ்க்கை.

482. "எவரேனும் சட்டத்தை உடைக்கக் கூடியவர்கள் இல்லையா?" மனுஷ்ய ஹிருதயத்திலிருந்து உண்டாகும் கூச்சல் இதுதான். சட்டத்தை உடைக்கின்ற எவரேனும் இருக்கமாட்டார்களா என்று நாம் எப்பொழுதும் தேடிக்கொண்டிருக்கிறோம். வேகமாகப் போகின்ற இயந்திரமானது இருப்புப்பாதை வழியே வெகு வேகமாகச் செல்கிறது; சிறிய புழு அதன் வழியிலிருந்து வெளியே ஊர்ந்து வந்துவிடுகிறது. "இயந்திரம் மரித்த ஜடம், ஒரு யந்திரமே; புழுவுக்கு உயிர் இருக்கிறது" என்று நாம் உடனே கூறுகிறோம். ஏனெனில், அந்தப் புழு சட்டத்தை உடைக்க முயன்றது; இயந்திரத்துக்கு எவ்வளவு சக்தியும் பலமும் இருந்தபொழுதிலும் சட்டத்தை ஒருபொழுதும் உடைக்க முடியாது. மனிதன் விரும்புகிற எந்த வழியிலும் அது போகும்படிச் செய்யப்படுகிறது; அது வேறு வழியாய்ப் போக முடியாது. ஆனால், புழுவானது சிறியதாயிருந்தாலும் சட்டத்தை உடைத்து அபாயத்தை நீக்கிக்கொள்ள முயற்சித்தது.

483. மதம் என்பது அனுபவமேயாம். பேச்சன்று, கொள்கையன்று. எவ்வளவு அழகிய கோட்பாடுகளுமன்று. அது கேட்டலுமன்று, ஒப்புக்கொள்ளுதலுமன்று, அப்படியே ஆய்விடுதலாம்; ஆனால், ஆத்மா முழுதுமே தான் எதை நம்புகிறதோ அதுவே யாய்விடுகிறதாம். அதுதான், மதம்.

484. இந்த ஏகாக்கிர சக்தி எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாக இருக்கிறதோ, அவ்வளவுக்கவ்வளவு அதிகம் அறிவு அடையப்படுகிறது; ஏனெனில், அறிவை யடைதற்கு இது ஒன்றே மார்க்கம்.

485. எல்லாத் துக்கமும் துன்பமும் பற்றுதலினாலே யுண்டாகின்றன.

486. இந்த நான்கு (கர்மம, பக்தி, யோகம், ஞானம்) மார்க்கங்களிலும் சமரச மடைதலே நான் மதத்தைப்பற்றிக் கொண்டுள்ள லக்ஷியம்.

487. வெளியே யுள்ள குரு என்ன செய்ய முடியும்? இடையூறுகளைக் கொஞ்சம் நீக்கிக் கொடுப்பதற்கு அவரால் முடியும்; அதனுடன் அவருடைய கடமை முடிந்துவிடுகிறது. ஆகையால், உன்னால் முடியுமானால் உதவி செய்; ஆனால், அழிக்காதே. நீ மனிதர்களை ஆத்மீகமாக்க முடியுமென்ற எண்ணங்களை யெல்லாம் விட்டுவிடு.

488. உன்னால் முடியுமானால், உதவி செய்; உன்னால் முடியாவிட்டால், உனது கைகளைக் கட்டிக்கொண்டு ஒதுங்கி நின்று, விஷயங்கள் நடைபெறுவதைப் பார். உன்னால் உதவி செய்ய முடியாவிட்டால், இம்சை செய்யாதே. ஒருவனுக்குத் திடநிச்சயமாயுள்ள கொள்கைகளில் அவன் உண்மையாயிருக்கும் வரையில், அவற்றுக்கு விரோதமாக ஒரு வார்த்தையும் பேசாதே. இரண்டாவது, மனிதன்

எங்கே நிற்கிறானோ அங்கே அவனைப் பிடித்து அங்கிருந்து அவனைத் தூக்கிவிடு.

489. ஈச்வரன் வெவ்வேறு பாத்திரங்களில் நிரம்புகின்ற தண்ணீர்போன்றிருக்கின்றார்; ஈச்வர தர்சனம் பாத்திரத்தின் வடிவமாக உண்டாகிறது.

490. தியாகமும் ஆத்மஞானமும் இந்தியாவின் இரண்டு பெரிய எண்ணங்களாகும்; இந்தியா இவ்வெண்ணங்களை விடாது பற்றி நிற்றலினால்தான், அது செய்யும் தப்பிதங்கள் அற்பமாகப் போய்விடுகின்றன.

491. வேற்றுமையே ஜீவிதத்துக்கு அறிகுறி; அது இருக்கத்தான் வேண்டும்.

492. மாறுதலென்பது எப்பொழுதும் மாறுதலடையாத, அல்லது குறைந்த மாறுதலுடைய வஸ்துவைப்பற்றியதுதான்.

493. ஒவ்வொரு சிறிய துண்டும் பிரபஞ்சத்தினுள் உள்ள ஒவ்வொரு அணுவும் இடைவிடாது மாறுதலையும் சலனத்தையும் உடையதாயிருக்கிறது. ஆனால், பிரபஞ்சமானது முழுதுமாக எடுத்தால் மாறுதலற்றதாயிருக்கிறது. ஏனெனில், சலனம் அல்லது மாறுதல் அந்யோந்ய சம்பந்தப்பட்ட விஷயமாம்; சலிக்காத ஒன்றுடன் ஒப்பிட்டுத்தான் நான் ஒன்றைச் சலிப்பதாக நினைக்க முடியும். சலனத்தை யறிவதற்கு இரண்டு விஷயங்கள் வேண்டும்.

494. எவரோ சொன்னாரென்று இருபதுகோடி கடவுள்களைக் குருட்டுத்தனமாக நம்புவதினும் மனுஷ்ய வர்க்கமானது நியாயத்தைப் பின்பற்றி நாஸ்திகராய்விடுவது மேன்மையேயாம். நாம் விரும்புவது முன்னேற்றம், அபிவிருத்தி, ஸ்வானுபூதி. எந்தக் கொள்கைகளும் எப்பொழுதேனும் மனிதர்களை உயர்ந்தவர்களாக்கிவிட்டதில்லை. எத்தனைப் புத்தகங்கள் படித்தாலும் அவற்றால் நம்மைப் பரிசுத்தர்களாகச் செய்ய முடியாது. உள்ள ஒரே சக்தி அநுபவத்தில்தான் உள்ளது; அது நம்மிடத்திலேயே உள்ளது. ஆலோசனையிலிருந்து உண்டாகிறது. மனிதர்கள் ஆலோசிக்கட்டும். ஒரு மண் கட்டி எப்பொழுதும் ஆலோசிக்கிறதில்லை. ஆனால், அது மண்கட்டியாகவேதான் இருக்கிறது. மனிதன் ஆலோசனை சக்தியுள்ளவன் என்பதிலேதான் அவனுடைய பெருமை உள்ளது.

495. தோற்றத்தில் நாம் வெவ்வேறாயிருக்கிறோம்; ஆனால், நமது உண்மை ஒன்றே; அவ் ஏக வஸ்துவிலிருந்து நாம் வேறென்று நினைக்காதவரையில், அவ்வளவும் நமக்கு நல்லதே.

496. நாம் சமஷ்டியினின்றும் வேறென்று எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாக நினைக்கிறோமோ, அவ்வளவுக்கவ்வளவு அதிக துக்கமுடையவர்கள் ஆகிறோம்.

497. "நம்பிக்கையை விட்டுவிடு" என்று வேதாந்தம் சொல்கிறது. நீ ஏன் நம்பவேண்டும்? உன்னிடம் எல்லாம் உள்ளன: நீ எல்லாமா யிருக்கிறாய். நீ எதை நம்பிக்கொண்டிருக்கிறாய்? ஒரு அரசன் பித்துப் பிடித்துத், தனது தேசத்து அரசனைக் காண முயன்று ஓடினால், அவன் ஒருபொழுதும் காணமாட்டான்; ஏனெனில், அவனே தானே அரசன். நாம் கடவுளே யென்று அறிந்துகொண்டு, மூடத்தனமாக அவரைத் தேடுகின்ற இதை விட்டுவிடுதல் நலம்; நாம் ஈச்வரனே யென்று அறிந்து கொண்டால், நாம் ஆநந்தமும் திருப்தியும் அடைந்துவிடுகிறோம். இந்தப் பைத்திய ஓட்டங்களை யெல்லாம் விட்டுவிட்டு, நாடக மேடையில் ஒரு நடிகனைப்போல், பிரபஞ்சத்தில் உனது வேலையைச் செய்வாய்.

498. ஒரே வார்த்தையில் வேதாந்தத்தின் லக்ஷியம் என்னவென்றால், மனிதனை உள்ளபடியே அறிதலாம்; "உனது சகோதர மனுஷ்யனை, பிரத்தியட்சமா யிருக்கும் கடவுளை நீ பூஜிக்க முடியாவிட்டால், பிரத்தியக்ஷ மல்லாத ஒரு கடவுளை நீ எப்படிப் பூஜிக்க முடியும்?" என்ற இதுதான் வேதாந்தம் கூறுவது.

499. நியதியை உனது காலின் கீழே போட்டு மிதித்துத் துவைத்துவிடு. மனுஷ்ய இயற்கையிலே நியதி கிடையாது, விதி யென்பது கிடையாது. அகண்டத்திலே நியதி எப்படி யிருத்தல் முடியும்? ஸ்வதந்

திரமே அதன் பல்லவி; ஸ்வதந்திரமே அதன் இயற்கைப் பிறப்புரிமை.

500. வேதாந்தம் சொல்கிற பிரகாரம், ஒருவன் அந்தத் தர்சனம் அடைந்துவிட்டால், அவன் மூக்தனாய்விடுகிறான். இவ்வுலகில் வசிப்பதற்கு ஏற்றவன் அவன் ஒருவனே, மற்றவர்க ளல்லர். திரையைப் பார்க்கின்றவன், இவ்வுலகில் எப்படி வசிக்க முடியும்? அவனுடைய வாழ்க்கை ஒரு துன்பக் குவியலாகும். அபாயங்களைப் பார்க்கிறவன், அவனுடைய வாழ்க்கை ஒரு துக்கமேயாம். மரணத்தைப் பார்க்கிறவன், அவனுடைய வாழ்க்கை ஒரு துக்கமேயாம். அந்த மனிதன் ஒருவனே இவ்வுலகில் வசிக்க முடியும். "நான் இந்த வாழ்க்கையைச் சுகிக்கிறேன், நான் இந்த ஜீவிதத்தில் ஆநந்தமா யிருக்கிறேன்" என்று சத்தியத்தை, ஒவ்வொன்றிலும் உண்மையைக் கண்ட அவன் ஒருவனே சொல்ல முடியும்.

501. நமது சொந்த ஹிருதயங்களிலும் ஒவ்வொரு ஜீவராசியிலும் நாம் ஈச்வரனைப் பார்க்க முடியாவிட்டால், அவரைப் பார்ப்பதற்கு நாம் எங்குச் செல்வது? "நீயே புருஷன், நீயே ஸ்திரீ, நீயே பெண், நீயே பையன், தடியூன்றித் தள்ளாடும் கிழவனும் நீயே, தான் பலமுள்ளவனென்று கர்வத்துடன் நடக்கும் வாலிபனும் நீயே."

502. ஆத்மாவை யடைந்து உண்மையைக் கண்ட மனிதனுடன் எஞ்சி யொட்டியுள்ளது

யாதெனில், முன் ஜன்மத்திய நல்ல ஸமஸ்காரங்களின் பிருதியேயாம்; அவன் சரீரத்திலிருந்து, இடைவிடாது வேலே செய்தாலும், அவன் நன்மையைச் செய்யவே வேலை செய்கிருன்; அவனுடைய உதடுகள் எல்லோருக்கும் ஆசிர்வசனத்தையே புகல்கின்றன்; அவனுடைய கைகள் நல்ல கர்மங்களையே செய்கின்றன; அவனுடைய மனமானது நல்ல நினைப்புக்களையே நினைக்க முடியும்; அவன் எங்குச் சென்றாலும் அவன் இருந்தால் அதுவே ஒரு ஆநந்தடமாம்.

503. மனுஷ்ய மண்டலத்திலிருந்து பார்த்தால் பூமியாகவும் சூர்யனாகவும் சந்திரனாகவும் நக்ஷத்திரங்களாகவும் அதுபோன்ற எல்லா வஸ்துக்களாகவும் தோன்றுகின்ற இந்தப் பிரபஞ்சமேதான்—இதே பிரபஞ்சம்தான், கொடுமையான பூமியிலிருந்து பார்த்தால், தண்டனை பெறுதற்கு ஒரு இடமாகத் தோற்றுகிறது.

504. ஜடமின்றிச் சக்தியினால் யாத்திரை செய்ய முடியாது.

505. எதெல்லாம் சில காரணங்களின் பயனாக உள்ளதோ, அதெல்லாம் அழிவுபடத்தான் வேண்டும்.

506. அகண்டமான வருங்காலம் உன் முன்னே யுள்ளது; ஒவ்வொரு வார்த்தையும் நினைப்பும் செய்கையும் உனக்கு ஒரு களஞ்சியத்தைச் சேர்த்து வைக்கிறதென்றும், தீய நினைப்புக்களும் தீய கர்மங்க

ளும் புலிகள் போன்று உன்மீது பாய்வதற்குத் தயாராவதுபோல, அப்படியே நல்ல நினைப்புக்களும் நல்ல கர்மங்களும் உன்னை எப்பொழுதும் காப்பதற்கு ஒரு லக்ஷம் தேவதூதர்களின் சக்தியுடனே தயாரா யிருக்கின்றனவென்றும் நீ எப்பொழுதும் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும்.

507. அறிவு ஒரே வழியில்தான் அடையப்பட முடியும்; அநுபவ மார்க்கத்தின் மூலமாகவே அடையப்பட முடியும்; அறிவதற்கு வேறு வழியில்லை.

508. சூந்யத்திலிருந்து வந்தவர்கள் திரும்பவும் சூந்யத்துக்கே நிச்சயமாய்ப் போய்ச் சேரவேண்டும். நீயாவது, நானாவது, அல்லது இங்குள்ள வேறெவராவது சூந்யத்திலிருந்து வரவில்லை; சூந்யத்துக்குத் திரும்பிச் செல்லவும் மாட்டோம்.

509. ஒருவன் மரிக்கிறபொழுது, அவன் தனக்குத் தன்னுடைய சரீரத்தை யளித்த பூதங்களிடத்துத் திரும்பச் சென்றுவிடுவான்; இந்தப் பூமி மரித்தால், அது தனக்கு உருவத்தை யளித்த பூதங்களிடத்துத் திரும்பச் சென்றுவிடும். இதுதான் அழிவு எனப்படுவது; காரணத்தினிடம் திரும்பவும் சென்றுவிடுதல்.

510. ஜோதியானது மேன்மேலும் ஒளிர ஒளிர மயக்கம் நீங்கிவிடும்; சுமை சுமையாயுள்ள அஞ்ஞானம் மறைந்துவிடும்; மற்றெல்லாம் மதுந்தை,

சூர்யன் மாத்திரம் பிரகாசிக்கின்ற ஒரு காலம் அப்பொழுது உண்டாகும்.

511. எல்லா மதங்களும் பிரகிருதியைக் கடந்து செல்ல அநேகமாகச் செய்யப்படும் முயற்சிகளேயாம் - எல்லாவற்றுக்கும் ஒரே நோக்கம் தான், எல்லாம் இந்தக் கட்டுப்பாடுகளைக் கடந்து செல்ல முயற்சித்துக்கொண்டிருக்கின்றன.

512. ஒவ்வொரு மனிதனுடையவும் பிறப்புரிமையும் இயற்கையுமாகிற அந்த அகண்ட சக்தியை யநுபவத்தி லறிதற்கு மதமே மிகமிகச் சிறந்த நோக்க சக்தியா யிருக்கிறது. ஒழுக்கத்தை ஏற்படுத்துவதிலே, நன்மையும் பெருமையுமாகிற எல்லாவற்றையும் உண்டுபண்ணுவதிலே, பிறருக்கும் தனக்கும் சாந்தியை உண்டுபண்ணுவதிலே, மதமே மிகமிகச் சிறந்த நோக்க சக்தியா யுள்ளது; ஆகையால், அந்த நிலைமையிலே ஆராயப்படவேண்டும்.

513. இவ்வுலகில் ஒரு அழகிய ஸ்திரீ ஒரு அவலக்ஷணமான மனிதனை நேசிப்பதை நாம் எத்தனை தட்வைகளில் பார்க்கிறோம்! ஒரு அழகிய மனிதன் ஒரு அவலக்ஷணமான ஸ்திரீயை நேசிப்பதை நாம் எத்தனை தடவைகளில் பார்க்கிறோம்! ஆகருஷணம் என்ன? பார்ப்பவர்கள் அவலக்ஷணமான புருஷன் அல்லது அவலக்ஷணமான ஸ்திரீ இவர்களைத்தான் பார்க்கிறார்கள்; ஆனால், காதலன் அப்படியல்ல; காதலனுக்குக் காதலுக்குற்ற பொருளே உள்ள எல்

லாவற்றிற்கும் மிகமிக அழகிய வஸ்துவாகத் தோன்றுகிறது. அவலக்ஷணமான மனிதனை நேசிக்கின்ற ஸ்திரீயானவள் தனது சொந்த மனத்திலுள்ள அழகாம் லக்ஷியத்தை எடுத்து இந்த அவலக்ஷணமான மனிதன்மீது வீசுகிறாள்; அவள் பூஜித்து நேசிக்கின்றது அவலக்ஷணமான புருஷனையல்ல, ஆனால், தனது சொந்த லக்ஷியத்தையே.

514. ஒரு சிஷ்யன் தனது குருவினிடம் சென்று "ஸ்வாமி! எனக்கு உபதேசம் செய்யவேண்டும்" என்று கேட்டான். குரு வாலிபனைப் பார்த்தார். பேசவில்லை; ஆனால், புன்னகை மாத்திரம் புரிந்தார். அந்த வாலிபன் தினந்தோறும் வந்து தனக்கு உபதேசம் செய்யவேண்டுமென்று வற்புறுத்தினான். ஆனால், வாலிபனைவிடப் பெரியவருக்கு விஷயம் தெரியும். ஒருநாள் மிகவும் உஷ்ணமாயிருக்கையில், அவர் வாலிபனைத் தன்னுடன் நதிக்கு வந்து ஸ்நானம் செய்யும்படி சொன்னார். வாலிபன் தண்ணீரில் முழுகினான்; பெரியவரும் உடன் சென்று, வாலிபனைப் பலாத்காரமாகத் தண்ணீருக்குள் அழுத்திவைத்தார். அந்த வாலிபன் கொஞ்சம் கஷ்டப்பட்ட பிற்பாடு, அவர் அவனை விட்டுவிட்டு, அவன் தண்ணீரில் இருந்தபொழுது அவன் மிகமிக அதிகமாக விரும்பியது யாது என்று கேட்டார். சிஷ்யன் "ஒரு மூச்சு சுவாசம்" என்றான். அம்மாதிரி உனக்குக் கடவுள் வேண்டுமா? அப்படி வேண்டுமானால் நீ அவரை ஒரு நிமிஷத்தில்

காண்பாய். அந்தத் தாகம், அந்த ஆசை உனக்கு உண்டாகும் வரையில், நீ உனது புத்தியுடனே, அல்லது உனது புத்தகங்களுடனே, அல்லது உன்னுடைய வடிவங்களுடனே அரும்பாடு பட்டாலும், நீ மதத்தை யடைய முடியாது. அந்தத் தாகம் உன்னிடம் உண்டாகும்வரையில், நீ நாஸ்திகனை விடச் சிறந்தவனல்லன். அந்த நாஸ்திகன் உண்மையாயிருக்கிறான், நீ உண்மையாயில்லை.

515. மேனாட்டிலே நான் ஒரு பெரிய வித்துவானிடத்திலிருந்து கேட்ட ஒரு கதையை நான் உங்களுக்குச் சொல்வேன். அதைப் பார்த்த ஸிலோன் கவர்னர் ஒருவரால் அது சொல்லப்பட்டது. ஒரு பெண், முன்னே கொண்டுவரப்பட்டு, குறுக்குக் குறுக்காகப் போடப்பட்ட குச்சிகளாலாய ஒரு ஆசனத்தின்மீது கால்களை மடக்கி உட்கார்த்தப்பட்டாள். அவள் உட்கார்ந்து கொஞ்ச நேரத்துக்குப் பின், வேடிக்கை காட்டுபவன், குறுக்குக் குறுக்காகப் போடப்பட்டிருந்த குச்சிகளை யொன்றன்பின் ஒன்றாக எடுக்க ஆரம்பித்தான்; எல்லாம் எடுக்கப்பட்டு விட்ட பின்னர், பெண் ஆகாயத்திலே அந்தரத்திலே விடப்பட்டுவிட்டாள். கவர்னர் ஏதோ தந்திர மிருக்கிறதென்று நினைத்துத் தனது கத்தியை உருவிப் பெண்ணின் கீழே வேகமாக வீசினார். அங்கு ஒன்றுமில்லை. இப்பொழுது இது என்ன? இது மர்யா

ஜாலம் அல்ல, சாதாரணமான ஒன்று அல்ல. அது தான் விசேஷம்.

516. இந்த (யோக) சாஸ்திரத்திலே எனக்குக் கொஞ்சம் தெரியும்; ஆனால், நான் அடைந்துள்ள சொற்பத்துக்காக நான் எனது ஜீவிதத்தில் முப்பது வருஷங்கள் வேலை செய்தேன்; ஆறு வருஷங்களாக நான் எனக்குத் தெரிந்த சொற்பத்தை ஜனங்களுக்குச் சொல்லிக்கொண்டு வருகிறேன். அதை யறிவதற்கு எனக்கு முப்பது வருஷங்கள் வேண்டிவந்தன; முப்பது வருஷங்கள் அருமபாடு. சில வேளைகளில் இருபத்துநான்கு மணி நேரத்தில் இருபத்து நான்கு மணி நேரமும் வேலை செய்தேன். சில வேளைகளில் நான் இரவில் ஒரு மணி நேரமே தூங்கியிருக்கிறேன்: சில வேளைகளில் இரவு முழுதும் வேலை செய்திருக்கிறேன்; சில சமயங்களில் சப்தமேயில்லாத, சுவாசமேயில்லாத இடங்களில் வசித்தேன்; சில வேளைகளில் நான் குகைகளில் வசித்தேன்.

517. நம்மை நாமே கவனித்துக்கொள்ளவேண்டும். அவ்வளவு நாம் செய்ய முடியும்; கொஞ்சக் காலத்துக்குப் பிறரைக் கவனிப்பதை விட்டுவிட முடியும். நாம் உபாயத்தைப் பூர்த்தி செய்வோம்; பலன் தன்னைத்தானே கவனித்துக்கொள்ளும். ஏனெனில், நம்முடைய ஜீவிதங்கள் நல்லவையாயும் பரிசுத்தமாயும் இருந்தால், உலகம் நல்லதாயும் பரிசுத்தமாயும் இருக்க முடியும். அது ஒரு காரியம்;

நாம் உபாயம். ஆகையால், நாம் நம்மைப் பரிசுத்தப் படுத்திக்கொள்வோம்! நாம் நம்மைப் பரிபூர்ணர் ஆக்கிக்கொள்வோம்.

518. பிறருக்கு நாம் செய்யும் கடமை யென்றால் பிறருக்கு உதவி புரிதலாம்; உலகுக்கு நன்மை செய்தலாம். நாம் ஏன் உலகுக்கு நன்மை செய்ய வேண்டும்? உலகுக்கு உதவி புரிவதென்று தோன்றினாலும், ஆனால் உண்மையில் நமக்கு நாமே உதவி செய்துகொள்வதற்காகத்தான்.

519. தன்னைத் தானே யடக்கியுள்ள மனிதனை வெளியேயுள்ள எதனாலும் பாதிக்க முடியாது. அவனுக்கு அதற்கு மேல் அடிமைத்தனமே யில்லை. அவனுடைய மனம் விடுதலை யடைந்துவிட்டது; அத்தகைய புருஷனே இவ்வுலகத்தில் நன்கு வாழ்வதற்கு ஏற்றவன்.

520. நம்முடைய மனத்துக்கும் புலன்களுக்கும் அப்பாலுள்ள எதுவும், புலன்களுக்கப்பாலுள்ள பிரதேசத்திலே விஷயங்களுக்கு மனோ சம்பந்தமான சம்சர்க்கம் இல்லாததினாலே, காரண கார்ய நியாயத்தினாலே கட்டுப்படுகிறதில்லை.

521. நாம் அறிகின்ற, அல்லது அநேகமாக அறியக்கூடிய ஒவ்வொருவரும் காரண கார்ய நியாயத்துக்கு உட்படவேண்டும்; காரண கார்ய நியாயத்துக்குக் கீழ்ப்படிகின்றது ஸ்வதந்திரமா யிருக்க முடியாது.

522. கிரானசையே எல்லா யோகங்களுக்கும் அஸ்திவாரமாம்.

523. அணுவிலிருந்து மனிதன் வரையில், ஜடமான ஜீவனற்ற அணுவிலிருந்து பூமியிலே மிகமிக உத்தமமான வாழ்வாகிய மனுஷ்யன் வரையில், நாம் நம்மைச் சுற்றிலும் பார்க்கின்ற ஒவ்வொன்றும் முக்தியை அடைவதற்குப் பெரு முயற்சி செய்கிறது.

524. ஜீவனும் மரணமும் வெவ்வேறு நிலைமைகளிலிருந்து பார்க்கப்பட்ட, ஒரே வஸ்துவின் வெவ்வேறு வெளிப்பாடுகளேயாம்; அவை ஒரே அலையின் இறக்கமும் ஏற்றமுமேயாம்; இரண்டும் சேர்ந்து முழுதும் ஆகின்றன.

525. பணத்துக்காவது, கீர்த்திக்காவது, வேறெதற்காவது எந்த நோக்கமு மில்லாமல் வேலை செய்கிறவனே மிகமிகச் சிறந்த வேலை செய்கிறான்; ஒருவன் அப்படிச் செய்ய முடிகிறபொழுது, அவன் புத்தனாவான். அவனிடத்திலிருந்து உலகத்தையே மாற்றும்படியான மாதிரியில் வேலை செய்யும்படியான சக்தி உண்டாகும். இவன் கர்மயோகத்தின் மிகமிக உயர்ந்த லக்ஷியத்தைக் குறிப்பிடுகிறேன்.

526. துக்கமெல்லாம் பயத்திலிருந்து உண்டாகின்றன; திருப்தி யடையாத ஆசையிலிருந்து உண்டாகிறது. மனிதன் தான் ஒருபொழுதும் மரிக்கிறதில்லையென்று அறிந்துகொள்வான்; அதற்கு மேல் அவனுக்கு மரண பயம் ஏற்படாது. அவன் தான்

பரிபூர்ணன் என்று அறிந்துகொள்கிறபொழுது, வீண் ஆசைகள் எதுவும் அவனிடம் இராது; இவ்விரண்டு காரணங்களும் இல்லாததினாலே அதற்கு மேல் துக்கமில்லை — இந்தச் சரீரத்தி லிருக்கும் பொழுதே பரிபூர்ணாநந்தம் உண்டாகும்.

527. நாம் பிரகிருதிக்கு எஜமானர்களா யிருக்க வேண்டும், அடிமைகளா யிருக்கக்கூடாது; மனமாவது சரீரமாவது நமக்கு எஜமானரா யிருக்கக் கூடாது. சரீரம் என்னுடையது, நான் சரீரத்தினுடையவனல்லன் என்பதையும் நாம் மறக்கக் கூடாது.

528. தன்னுடைய சரீரம் மாறுத லடையாமல் ஒரு நிமிஷமேனும் நிறுத்தி வைக்கக்கூடிய சக்தியுடன் எவருமே பிறந்ததில்லை.

529. சரீரத்தின் சலனங்களெல்லாம் பரிபூர்ண ஒழுங்கை யடைந்துவிட்டால் சரீரமானது ஒரு பிரமாண்டமான மஹாசக்திக் களஞ்சியமாய்விடுகிறது. இந்த அபாரமான சக்தியைத்தான் யோகி விரும்புகிறான்.

530. யோகமானது இரண்டு பாகங்களாக வகுக்கப்படுகிறது. ஒன்று அபாவம் எனப்படுகிறது; மற்றது, மகா யோகம் எனப்படுகிறது. ஆத்மாவானது லக்ஷண மற்றதாய், சூந்யம் போன்று தியானிக்கப்படுகிறபொழுது, அது அபாவம் என்படுகின்றது. ஆத்மாவை ஆநந்தம் நிறைந்ததாயும்,

அசுத்தங்க ளெல்லாம் நீங்கினதாயும், ஈச்வரனுடன் ஒன்றியும் காண்பது மகாயோகம் எனப்படுகிறது.

531 மனிதன் எவ்வளவு கீழே போய்விட்டாலும் அவன் கடைசியாக மேலே நோக்கி ஈச்வரனாகிற உற்பத்தி ஸ்தானத்துக்குத் திரும்பிச் செல்லவேண்டும். மனிதன் ஆதியில் கடவுளிடமிருந்து வருகிறான்; மத்தியில் அவன் மனிதனாகிறான்; கடைசியில் அவன் ஈச்வரனிடம் திரும்பிச் செல்கிறான்.

532. அறிவு என்பதே ஆக்கப்பட்ட ஒன்று, ஒரு சேர்க்கை; அது உண்மையல்ல.

533. பகைமை அல்லது தீமை வடிவத்திலே யுள்ள ஒவ்வொரு எதிர்ச்செய்கை மனத்துக்கு அவ்வளவு நஷ்டமேயாம்; ஒவ்வொரு தீய நினைப்பும், அல்லது பகைமைச் செய்கையும் அடக்கப்பட்டால் நமக்கு அநுகூலமாகும்.

534. ஸாக்ரடீஸ் என்பவர் ஒருநாள் ஆதேன்ஸ் மாநகரில் பிரசங்கம் செய்துகொண்டிருந்தபொழுது, க்ரீஸ் தேசத்துக்கு யாத்திரை வந்திருந்த ஒரு பிராஹ்மணனைக் கண்டாரென்றும், அந்தப் பிராஹ்மணனிடத்தில் மனுஷ்ய வர்க்கம் செய்யவேண்டிய மிக மிகப் பெரிய ஆராய்ச்சி மனுஷ்யனைப்பற்றியே என்று சொன்னாரென்றும் சொல்லப்படுகிறது. பிராஹ்மணன் உடனே “நீ கடவுளை யறிந்தாலொழிய, மனிதனை எப்படி யறிய முடியும்” என்று திருப்பிக் கேட்டான்.

535. "மதமானது ஆகாரத்தில் வசிக்கவில்லை, ஒரு வீட்டில் வசிக்கவில்லை. "மதத்தினால் என்ன நன்மை யுண்டாக முடியும்? எளியவர்களின் ஏழ்மையை அது நீக்குமா?" என்ற இந்த ஆக்ஷேபனை மறுபடியும் கூறப்படுவதை நாம் கேட்கிறோம். மதத்தினாலும் அப்படிச் செய்ய முடியாதென்றே வைத்துக் கொள்வோம். அது மதத்தினுடைய பொய்மையை விளக்கிவிட்டதாகுமா? நீ ஒரு வானசாஸ்திரக் கொள்கையை நிரூபித்துக்காட்ட முயல்கிறபொழுது உங்களுக்குள் ஒரு குழந்தை எழுந்து நின்று "அது ரொட்டி யளிக்குமா?" என்று கேட்கிறதென்று வைத்துக்கொள்வோம். "அது ரொட்டி யளிக்காது" என்று நீ மறுமொழி கூறுகிறாய். "அப்படியானால், அது பிரயோசன மில்லை" என்று அந்தக் குழந்தை கூறுகிறது. குழந்தைகள் ரொட்டி யளித்தலாகிய தங்களுடைய நிலைமையிலிருந்து பிரபஞ்சம் முழுதையும் பார்க்கிறார்கள், அதுபோலத்தான் பிரபஞ்சத்துக் குழந்தைகளும்.

536. ஆத்மா ஒன்றைப்பொருளாதலினாலே, அது கட்டுப்பட்டதா யிருக்கமுடியாது; ஏனெனில், எல்லாக் கட்டுப்பாடும் காலத்தினாலாவது இடத்தினாலாவது காரண கார்யத்தினாலாவது உண்டாகின்றது. ஆத்மா இவற்றைக் கடந்துள்ளதாகையினாலே, அதற்குக் கட்டுப்பாடு இருக்க முடியாது.

537. அவரே இந்த ஜகத்தாயிருக்கிறார். அவர் இந்தப் பிரபஞ்சத்துக்கு நிமித்தகாரணர் என்பது மாத்திரமில்லை, உபாதான காரணராயுமிருக்கிறார். காரணம் கார்யத்தினின்றும் ஒருபொழுதும் வேறுபட்டதில்லை; கார்யமென்பது இன்னொரு விதத்தில் திரும்பவும் காணப்படுகிற காரணமேயாம்.

538. அகண்டமானது கண்டிக்கப்பட முடியாதது; அகண்டத்தில் பாகங்கள் இருக்க முடியாது.

539. ஒரு மனிதன் எழுந்து நின்று, 'நான் இந்தச் சரீரமன்று; ஆதலால், எனது தலைநோவு சொந்தமாகவேண்டும்' என்று கூறுகிறான்; ஆனால், தலைவலி, சரீரத்திலில்லாவிட்டால், வேறெங்கேயுள்ளது? ஓராயிரம் தலைவலிகளும் ஓராயிரம் சரீரங்களும் வரட்டும், போகட்டும்; அதனால் எனக்கென்ன?

540. "இந்த மாயை எப்படி வந்தது?" மறுமொழியும் மிக நேர்த்தியாயிருக்கிறது. மறுமொழியாதெனில், ஒரு அசாத்தியமான கேள்வி நாம் எவ்வித மறுமொழியும் எதிர்பார்க்க முடியாதென்பதே. கேள்வியே வார்த்தைகளில் அசாத்தியமானது. அந்தக் கேள்வி கேட்பதற்கு உனக்கு அதிகாரமில்லை. என்? பரிபூர்ணத்துவம் என்றால் என்ன? காலதேச காரண கார்ய நியாயத்துக்கு அப்பாலுள்ளது எதுவோ அதுதான். அதுதான் பரிபூர்ணமானது. "பரிபூர்ண வஸ்து எப்படி குறைவுற்றது?" என்று நீ கேட்கிறாய். தர்க்கபாஷையிலே அந்தக் கேள்வி

யானது, "காரண கார்ய நியாயத்துக்கப்பாலுள்ளது எப்படி கார்யமாயிற்று?" என்ற இந்த வடிவத்தில் கேள்வி கேட்கப்படலாம். நீயே உனக்கு நேர் விரோதமாகக் கூறிக்கொள்கிறாய். அது காரண கார்ய நியாயத்துக்கு அப்பாற்பட்டது என்று நீயே முதலில் ஒப்புக் கொள்கிறாய், பின்னர் அதற்குக் காரணம் யாது என்று கேட்கிறாய். இந்தக் கேள்வி காரண கார்ய எல்லைகட்குள்ளேயே கேட்கப்படலாம்.

541. ஒரு மகம்மதியருடைய வீட்டில் ஒரு நரி நுழைந்து, மேஜையின்மீதுள்ள ஆகாரத்தில் ஒரு துண்டை யெடுத்துத் தின்றுவிட்டு ஓடிவிட்டது. அவன் ஒரு ஏழை; அவன் தனக்கு மிகவும் நேர்த்தியாகச் சமைத்துவைத்திருந்தான்; அந்த ஆகாரம் அசுத்தமாக்கப்பட்டுவிட்டது; அவன் அதைத் தின்னக் கூடாது. ஆகையால், அவன் ஒரு வைதீகரிடத்திலே சென்று, "இவ்வாறு எனக்கு நேரிட்டுவிட்டது; ஒரு நரி வந்து என்னுடைய ஆகாரத்திலே ஒரு வாய் தூக்கிகொண்டு போய்விட்டது; என்ன செய்யலாம்? நான் வெகு நேர்த்தியாகச் சமைத்து, உண்பதற்கு எவ்வளவு வேண்டுமோ அவ்வளவு வைத்திருந்தேன்; இப்பொழுது இந்த நரி வந்து, எல்லாவற்றையும் கெடுத்துவிட்டது." என்றான். அந்த வைதீகர் ஒரு நிமிஷ நேரம் யோசித்தார்; பின்னர், ஒரே நிவர்த்திதான் அவருக்குத் தோன்றிற்று. அவர் கூறியதாவது: "ஒரே நிவர்த்திதான் எனக்குத் தோன்று

கிறது : ஒரு நாயைக் கொண்டுவந்து அதே ஆகாரத்தில் ஒரு சிறிது உண்ணும்படி செய்யவேண்டியதேயாம்; ஏனெனில், நாயும் நரியும் என்றும் சண்டை போட்டுக்கொண்டிருக்கின்றன. நரியினால் மிச்சம் வைக்கப்பட்ட ஆகாரமானது உனது வயிற்றுக்குள்ளே செல்லும்; நாயினால் உண்ணப்படாத மிஞ்சியிருக்கும் ஆகாரமும் உனது வயிற்றுக்குள்ளே செல்லும்; இரண்டும் பரிசுத்தமாக்கப்பட்டுவிடும்." நாம் அநேகமாக அதே அவஸ்தையிலிருக்கிறோம். நாம் பரிபூர்ணர்களல்லவென்ற இது ஒரு மாயை; நாம் பரிபூர்ணர்களாக அநுஷ்டானங்கள் செய்யவேண்டுமென்ற இன்னொரு மாயையை எடுத்துக்கொள்கிறோம்.

542. இந்தியாவின் நடுக்கோடை வெயிலில் கங்கைக்கரையில் படுத்துறங்குகின்ற மனிதர்கள் இருக்கிறார்கள்; மாரிகாலத்தில் கங்காநதியில் நாள் முழுதும் மிதக்கிறார்கள். அவர்கள் லக்ஷியம் செய்கிறதில்லை. மனிதர் ஹிமாலயத்துப் பனியிலே உட்கார்ந்துகொண்டிருக்கிறார்கள்; எந்த உடையும் தரிக்கவேண்டுமென்று நினைப்பதேயில்லை. உஷ்ணம் என்பது என்ன? குளிர்ச்சி யென்பது என்ன? விஷயங்கள் வரட்டும், போகட்டும், அதனால் எனக்கென்ன? நான் சரீரமல்ல. இந்த மேனாடுகளிலே இதை நம்புவது கடினம்; ஆனால், அது உண்மைதான் என்பதையறிந்துகொள்வது நல்லது. உங்களுடைய ஜனங்கள்

பீரங்கிவாயில் அல்லது யுத்தகளத்தின் மத்தியில் பாய்வதற்குத் தைர்யமுள்ளவர்களா யிருப்பதுபோல, எங்களுடைய ஜனங்கள் தங்களுடைய தத்துவசாஸ்திரத்தைச் சிந்தனைசெய்து அதன்படி நடக்கத் தைர்யமுள்ளவர்களா யிருக்கிறார்கள். அவர்கள் அதன்பொருட்டுத் தங்கள் வாழ்நாட்களைத் தியாகம் செய்துவிடுகிறார்கள். "நான் அகண்ட சச்சிதாநந்த வஸ்து; நானே அவன்; நானே அவன்."

543. நீ உன்னைச் சரீரமாகப் பார்க்கிறபொழுது, நீ சரீரமே யொழிய வேறில்லை; மனுஷ்ய வர்க்கத்தில் பெரும்பான்மையோருடையவும் பார்வை யதுவே. அவர்கள் ஆத்மாவைப்பற்றியும் மனத்தைப்பற்றியும் இவ் விஷயங்க ளெல்லாவற்றைப்பற்றியும் பேசலாம்; அவர்கள் பார்ப்பது ஸ்தூல வடிவமே, ஸ்பர்சம், ரசம், ரூபம் முதலியவற்றையே. இன்னும், சில மனிதர்கள் சில பிரக்ஞா அவஸ்தைகளிலே தங்களை நினைப்பாகவே கருதுகிறார்கள்.

544. உண்மையில் சொன்னால், எவரும் பிறக்கிறது மில்லை, இறக்கிறது மில்லை; ஸ்வர்க்கமு மில்லை. நரகமு மில்லை, அவ்வுலகமு மில்லை. இம்மூன்று ஒருபொழுதும் இருந்ததில்லை.

545. மரணவாயிலிலும், மிகமிகப் பெரிய ஆபத்திலும், யுத்தகளத்தின் நெருக்கடியிலும் "நான் அவனே, நான் அவனே" என்று சொல். இரவும் பகலும் "நான் அவனே" என்று சொல். அதுவே மிக

மிகச் சிறந்த பலம்; அதுதான் மதம். பலஹீனர்கள் ஒருபொழுதும் ஆத்மாவை யடைவதில்லை.

546. சிஷ்யனுக்கு இருக்கவேண்டிய முக்கியமான நிபந்தனைகளாவன: பரிசுத்தம், உண்மையான ஞானதாகம், விடா முயற்சி.

547. அஞ்ஞானமாகிற கோடியும் ஞானமாகிற மறுகோடியும்—இவற்றுள் எதுவும் உபாசனைக் கர்மங்களினூடே செல்கிறதில்லை. மனுஷ்ய மிருகம் தன்னுடைய அஞ்ஞானத்தினாலே பூஜிக்கிறதில்லை; ஜீவன் முக்தர்கள் தாங்கள் ஈச்வரனை ஸ்வாநுபவத்தில் அறிந்துவிட்டதினாலே பூஜிக்கிறதில்லை.

548. ஜகத் முழுதும் நமக்கு 'அகண்டத்தை' முடிவுள்ள பாஷையில் எழுதப்பட்ட ஒரு எழுத்தாயிருக்கிறது.

549. இங்கு, (இந்தியாவிலே) க்ரீஸ் தேசம் இல்லாதிருந்தபொழுதுகூட, ரோமாபுரி நினைக்கப்படாமலிருந்தபொழுதே, தற்காலத்திய ஐரோப்பியர்கள் காடுகளில் வசித்துத் தங்கள் சரீரங்களிலே பச்சை வர்ணம் பூசிக்கொண்டிருந்தபொழுது, சுறுசுறுப்பு விளங்கிற்று. அதற்கு முன்னமேயே, சரித்திரம் எழுதாதிருந்தபொழுது, அந்த நெருங்கிய முற்காலத்து அந்தகாரத்தினூடே பரம்பரை எட்டிப் பார்க்கத் துணியாதபொழுது, அப்பொழுது முதல் இப்பொழுது வரையில்கூட, எண்ணங்களின் பின் எண்ணங்கள் அதிலிருந்து வெளியே சென்றிருக்கின்

றன; ஆனால் ஒவ்வொரு வார்த்தையும் அதன் பின்னே ஆசீர்வசனத்துடனும் அதன் முன்னே சாந்தியுடனும் பேசப்பட்டிருக்கிறது. உலகிலுள்ள எல்லா ஜன சமூகங்களுக்குள்ளும் நாம் ஒருபொழுதும் ஜயித்த ஜாதியா யிருக்கவில்லை; அந்த ஆசீர்வசனம் நமது சிரசின்மீது இருக்கிறது; ஆகையால் தான் நாம் ஜீவிக்கிறோம். பெரிய கிரேக்க பட்டாளங்கள் நடந்த சப்தத்தைக் கேட்டு உலகம் நடுங்கிய காலம் ஒன்று இருந்தது. பூவுலகினின்றும் மறைந்து பின்னே சொல்வதற்குக்கூட ஒரு கதையுமில்லாமல் கிரேக்கர்களுடைய, அந்தப் பூர்வீக பூமியானது போய்விட்டது. ரோமாபுரிக் கழுகுக்கொடி உலகிலுள்ள ஒவ்வொன்றின்மீதும் பறந்துகொண்டிருந்த காலம் ஒன்று இருந்தது; எங்கும் ரோமாபுரியின் சக்தி உணரப்பட்டு, மனுஷ்ய வர்க்கத்தின் சிரசின்மீது அழுத்திற்று. ரோமாபுரி யென்று பெயர் சொன்ன மாத்திரத்திலே பூமி நடுங்கிற்று. ஆனால், காபிடோலைன் குன்று இடிந்து குவிந்து கிடக்கின்றது; ஸீஸர் சக்கரவர்த்திகள் ஆண்ட இடத்திலே சிலந்திப்பூச்சி தனது வலையை பின்னுகிறது. இதே மாதிரி பெருமை பெற்ற அநேக இதர ஜன சமூகங்களும் சந்தோஷகரமாகவும் செழிப்பாகவும் அதிகாரம் செலுத்திக்கொண்டும் கொடியதொரு ஜாதிய வாழ்க்கை வாழ்ந்தும் தண்ணீரின் மேலே காணப்படும் திவலைகள்போல மறைந்தும் போய்விட்டன:

550. எனக்கு வயது ஆக ஆக, இந்தியாவிலே காலத்தினாலே கௌரவிக்கப்பட்டுள்ள ஸ்தாபனங்களைப்பற்றி அதிகம் நல்ல அபிப்பிராயம் உண்டாகிறது. அவற்றுள் அநேகம் உபயோக மற்றவையென்றும், பிரயோசன மற்றவையென்றும் ஒரு காலத்திலே நான் நினைத்ததுண்டு; ஆனால், எனக்கு வயது ஆக ஆக அவற்றுள் எதையாவது குறை கூறுவதிலே எனக்கு அதிகம் தைர்யமுண்டாவதில்லை; ஏனெனில் அவற்றுள், ஒவ்வொன்றும் எத்தனையோ நூற்றாண்டுகளில் ஏற்பட்ட அநுபவத்தின் வடிவமாம். நேற்றுப் பிறந்து நாளைக் கழித்து மறு நாள் இறக்க இருக்கும் ஒரு குழந்தை என்னிடம் வந்து என்னுடைய யோசனைகளெல்லாவற்றையும் மாற்றிவிடும்படி கூறுகிறது, அந்தக் குழந்தையின் புத்திமதியை நான் கேட்டு அதன் எண்ணங்களின் பிரகாரம் என்னுடைய சூழ்நிலைகளை யெல்லாம் மாற்றிக் கொள்வேனேயானால், நானே முட்டாளாக வேண்டும்; வேறொருவரும் முட்டாள் இல்லை.

551. நீங்கள் உங்களுடைய மதத்தை உண்மையில் நேசிப்பவர்களானால், நீங்கள் உங்களுடைய தேசத்தை உண்மையில் நேசிப்பவர்களானால் நீங்கள் செய்யவேண்டிய ஒரு முக்கிய கடமை யாதெனில், மூடிக் கிடக்கும் உங்களுடைய கிரந்தங்களிலிருந்து ஐச்வர்யங்களை யெடுத்து, அவற்றை அவற்றுக்கு நியாயமாகப் பாத்தியதை யுள்ளவர்களிடம் அளிக்க

வேண்டுமென்ற இவ்வொரு பெரிய எண்ணத்துடனே நீங்கள் கடினமாக எழுந்து வேலை செய்ய முயற்சிக்க வேண்டும். எல்லாவற்றுக்கும் மேலே ஒரு விஷயம் அவசியமாம். எத்தனையோ யுகங்களாக நம்முள் பயங்கரமான பொறுமை குடிகொண்டிருக்கிறது. நாம் எப்பொழுதும் ஒருவரைப் பார்த்து ஒருவர் பொறுமை யடைகிறோம். இவனுக்கு என்ன முன் பாத்தியதை? எனக்கேன் இல்லை? ஈச்வர உபாசனையிலும் கூட நமக்கு முன் பாத்தியதை வேண்டும்; அத்தகைய அடிமை நிலைமைக்கு நாம் வந்துவிட்டோம். இது நீக்கப்படவேண்டும். இப்பொழுது இந்தியாவிலே பெருங்குற்றம் எதேனும் உண்டானால், அது இந்த அடிமைத்தனம் தான். ஒவ்வொருவனும் உத்தரவிட விரும்புகிறான்; எவனும் கீழ்ப்படிய விரும்புகிறதில்லை. இதற்குக் காரணம் பழய காலத்து அந்த அற்புதமான பிரஹ்மச்சர்யம் இல்லாது போய் விட்டதேயாம். முதலாவது கீழ்ப்படியக் கற்றுக் கொள்.

552. நமது ஆவசியகங்கள் வரையில் குறைக்கப் பட்ட சிறிது பிராபஞ்சிகம் மிகமிகச் சிரேஷ்டமான உண்மைகளை யடைவதற்குப் பக்குவமடையாத நமது சகோதரர்களில் அநேகருக்கு ஆநந்தமா யிருக்கும். ஒவ்வொரு தேசத்திலும் ஒவ்வொரு ஜனசமுகத்திலும் செய்யப்படுகின்ற ஒரு தப்பிதமாகும் இது; அது எப்பொழுதும் அறியப்பட்டுள்ள இந்தியாவில்

பக்குவமடையாத ஜனங்களிடம் மிகமிகச் சிரேஷ்டமான உண்மைகளைப் பலாத்காரமாகப் புகச் செய்யும் அதே தப்பிதம் சமீபத்தில் செய்யப்பட்டு வந்திருக்கிறது.

553. ஆகையால், எனது நண்பர்களே! நிவிருத்திக்கு மார்க்கம் யாதெனில், நாம் முதலாவது ஆத்மஞானத்தை உறுதியாய்ப்பற்றிக்கொள்ளவேண்டும்— அதுதான் நமது பூர்விக முன்னோர்களால் நமக்கு அளிக்கப்பட்டுவரும் விலை மதிப்பிட முடியாத கொடையாகும். மிகமிகப் பெரிய அரசர்கள் தாங்கள் அரசர்கள் வம்சத்தைச் சேர்ந்தவர்களென்று சொல்லிக்கொள்ளாமல், எளிய யாத்திரிகர்களைக் கொள்ளையடித்துக்கொண்டு பழமையான அரண்மனைகளிலே வசித்து வந்த கொள்ளைக்காரப் பிரபுக்களின் வம்சத்தைச் சேர்ந்தவர்களென்று சொல்லிக் கொள்ளாமல் ஆரண்யத்தில் வசித்து வந்த பாதி நிர்மாணமான மகாத்மாக்களின் சந்ததியாரென்று சொல்லிக்கொள்ளுகின்ற ஒரு தேசத்தைப்பற்றி நீங்கள் எப்பொழுதாவது கேட்டதுண்டா? அத்தகைய ஒரு பூமியைப்பற்றி நீங்கள் கேள்விப்பட்டதுண்டா? இதுதான் அந்தப் பூமி. இதர தேசங்களிலே, பெரிய வைதிகர்கள் தாங்கள் ஏதோ ஒரு அரசனுடைய சந்ததியாரென்று சொல்லிக்கொள்ள முயற்சிக்கிறார்கள்; ஆனால், இங்கே மிகமிகப் பெரிய அரசர்கள் தாங்கள் பூர்வீக வைதிகர் ஒருவரின் சந்

திரியார் என்று சொல்வார்கள். ஆகையால், ஆத்ம ஞானத்தில் உங்களுக்கு நம்பிக்கை யிருந்தாலும் இல்லாவிட்டால் ஜாதீய வாழ்க்கையின் பொருட்டு, நீங்கள் ஆத்மஞானத்தைப்பற்றி நின்று அதைக் காப்பாற்ற வேண்டும்.

554. பிராபஞ்சிகமானது ஒரு பொருளிலே பார்த்தால் இந்தியாவைக் காப்பாற்ற வந்திருக்கிறது; அது வாழ்க்கைக் கதவுகளை எல்லோருக்கும் நன்குகத் திறந்து விட்டுவிட்டது; ஜாதியின் தனி உரிமைகளை யெல்லாம் அழித்துவிட்டது; மிகச் சிலருடைய கையிலே ஒளித்து வைக்கப்பட்ட—அவர்களும் அவற்றின் உபயோகத்தை யிழந்துவிட்டார்கள்—மதிப்பிட முடியாத ஐச்வர்யங்களை வாதத்துக்குத் திறந்து விட்டுவிட்டது. பாதி திருடப்பட்டு, இழக்கப்பட்டுவிட்டது; எஞ்சியுள்ள மறு பாதி, வைக்கோலின்மேல் படுக்கும் நாய்களைப் போலத் தாங்களும் உண்ணுமல் பிறரையும் உண்ணவிடாமல் உள்ள மனிதர்களுடைய கையிலே யிருக்கிறது. ஆனல், இந்தியாவிலே நாம் அடைவதற்குப் பாடுபடுகின்ற ராஜீய முறைகள் ஐரோப்பாவில் எண்ணற்ற வருஷங்களாய் உள்ளன எத்தனையோ நூற்றுண்டுகளாய்ப் பரிசோதிக்கப்பட்டு விட்டன, குறையுள்ளனவாகவே காணப்பட்டுவிட்டன. ஸ்தாபனங்களும முறைகளும் ராஜீய ஆட்சியுடன் சம்பந்தப்பட்டுள்ள ஒவ்வொன்றும் ஒன்றன்பின் ஒன்றுக உபயோகமில்

வாதனைவயென்று தள்ளப்பட்டுவிட்டன; ஐரோப்பா அமைதியற்றுக்கிடக்கிறது; எங்குத் திரும்புவதென்று தெரியவில்லை. பிராபஞ்சிகக் கொடுமை அபாரமாயிருக்கிறது. ஒரு தேசத்தின் ஐச்வர்யமும் சக்தியும் வேலை செய்யாமல் லக்ஷக் கணக்கான மனுஷ்ய ராசிகளுடைய வேலையை உபயோகப்படுத்திக் கொள்கின்ற ஒரு சில மனிதர்களுடைய கைகளிலே உள்ளன. இந்த சக்தியினால் அவர்கள் பூமி முழுதையும் ரத்தத்தினால் நனைத்துவிட முடியும். மதமும் எல்லா விஷயங்களும் அவர்களின் பாதங்களின் கீழ் இருக்கின்றன. அவர்கள் ஆட்சி புரிகிறார்கள், மேலானவர்களா யிருக்கிறார்கள். மேற்கத்திய உலகமானது ஒரு பிடியத்தனை ஷைலாக்குகளினால் ஆளப்படுகிறது. ஒழுங்கான அரசாட்சி, ஸ்வதந்திரம், ஜனசபை—நீங்கள் கேள்விப்படுகின்ற அந்த விஷயங்களெல்லாம் வேடிக்கைகளேயாம். மேனாடு ஷைலாக்குகளின் கொடுமையிலே வருந்துகிறது; கீழ்நாடு வைதீகர்களின் கொடுமையிலே வருந்துகிறது; ஒன்று மற்றதை அடக்க வேண்டும்.

555. ஒரு மனிதன் எழுந்து நின்று வேலை செய்யும்படி செய்வது யாது? பலம். பலமே நன்மை? பலஹீனமே பாபம். வெடிகுண்டுபோல வெளியே வந்து அஞ்ஞானக் குவியல்களின்மீது வெடிக்கும் பொருளைக் குறிப்பதற்கு உபநிஷத்துக்களிலே நீங்கள் காண்கின்ற ஒரு வார்த்தை யுண்டானால், அது

பயமின்மை யென்ற வார்த்தையே. உபதேசிக்கப்பட வேண்டிய ஒரே மதம் யாதெனில் பயமின்மை யாகிற மதமேயாம். இவ்வுலகிலாவது, அல்லது மத உலகிலாவது, பயமே வீழ்ச்சிக்கும் பாபத்துக்கும் நிச்சயமான காரணமென்பது உண்மை. துக்கத்தை யளிப்பது பயமே, மரணத்தை யளிப்பது பயமே, தீமையை உண்டு பண்ணுவது பயமே. பயத்துக்குக் காரணம் யாது? நமது சொந்த இயற்கையைப்பற்றிய அறிவின்மையே.

556. நாம் தண்ணீர்ப் பாத்திரத்தை வலது கையினு லேந்திக் குடிப்போமா? அல்லது, இடது கையினு லேந்திக் குடிப்போமோ? கையானது மூன்று தடவை கழுவப்பட வேண்டுமா? அல்லது, நான்கு தடவை கழுவப்பட வேண்டுமா? நாம் ஐந்து தடவை கொப்புளிக்க வேண்டுமா? அல்லது ஆறு தடவை கொப்புளிக்க வேண்டுமா? என்று அநேக வருஷங்களாக நூற்றுக்கணக்கான (வயதில்) பெரியோர்கள் விவாதித்துவர, சென்ற அறுநூறு அல்லது எழுநூறு வருஷங்களாக நாம் அடைந்திருக்கும் வீழ்ச்சியைப்பற்றி நினைத்துப் பாருங்கள். இத்தகைய அபாரமான கேள்விகளைப்பற்றி விவாதித்துக் கொண்டிருப்பதில் தங்கள் வாழ்நாட்களைச் செலவிடுகின்ற மனிதர்களிடமிருந்து நீங்கள் என்ன எதிர்பார்க்க முடியும்? அவற்றைப்பற்றி மிகமிகக் கல்வியில் சிறந்த தத்துவ சாஸ்திரங்களையும் எழுதுதல்! நம்து

மதம் சமைய லறைக்குள்ளே நுழையும்படியான ஆபத்துண்டா யிருக்கிறது. இப்பொழுது நம்மில் பெரும்பான்மையோர் வேதாந்திகளுமல்லர், பௌராணிகளுமல்லர், தாந்திரீகர்களுமல்லர். நாம் இப்பொழுது "தொடாதே" என்ற மதத்தைச் சேர்ந்தவர்களா யிருக்கிறோம். நமது மதம் சமையலறையா யிருக்கிறது. நமது கடவுள் சமையற் பானை; நமது மதம் "நான் பரிசுத்தன; என்னைத் தொடாதே" என்பதேயாம். இன்னுமொரு நூற்றாண்டு இப்படியே நடைபெறுமானால் நம்மில் ஒவ்வொருவரும் பைத்தியக்கார ஆஸ்பத்திரியி லிருப்போம். மனமானது ஜீவிதத்தின் உயர்ந்த கேள்விகளைக் கிரகிக்க முடியாதபொழுது, மூளை பிருதுவாக்கப்பட்டுவிடுகிறது என்பதன் நிச்சயமான அறிகுறியாகும்; எல்லா நூதனத்துவமும் அழிபட்டுவிடுகிறது; மனமானது தன்னுடைய பலத்தை யெல்லாம், தன்னுடைய சுறுசுறுப்பையும் தன்னுடைய நினைப்புச் சக்தியையும் இழந்துவிட்டு அது காண முடிந்த மிகமிகச் சிறிய வினையைச் சுற்றிச் சுற்றிச் செல்ல முயற்சிக்கிறது.

557. ஒரு சிறிய சமுதாய வழக்கம் மாற்றப் படப்போகிற தென்பதினால், நீ உனது மதத்தை இழந்துவிடப்போகிறதில்லை; கொஞ்சமும், இழந்துவிடப்போகிறதில்லை யென்ற இதை நீ எப்பொழுதும் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். இந்த வழக்கங்கள் முன்னமேயே மாற்றப்பட்டு

போயின என்பதை ஞாபகப்படுத்திக் கொள்ளுங்கள். இந்த இந்தியாவிலேயே மாட்டிறைச்சி தின்னமல் பிராஹ்மணன் பிராஹ்மணனுயிருக்க முடியாதிருந்த ஒரு காலம் இருந்தது; ஒரு சந்நியாசி, ஒரு அரசன், அல்லது ஒரு பெரியோன் ஒரு வீட்டுக்கு வந்தால், ஆடும் மாடும் கொல்லப்பட்டன வென்பதை நீங்கள் வேதங்களில் படிக்கிறீர்கள்; நாம் வியவசாதி ஜாதி யாராகையினலே மிகமிகச் சிறந்த காளைகளைக் கொல்லுதல் என்றால் ஜாதியின் அழிவே யாகு மென்று கொஞ்ச காலத்தில் காணப்பட்டதென்பதை யும் வேதங்களில் படிக்கிறீர்கள். காலப் போக்கிலே வேறு நியதிகள் செய்யப்பட வேண்டி வந்தன. முறையே இவையும் போகவேண்டியிருக்கும், வேறு ஸ்மிருதிகள் உண்டாகும்.

558. ஆநந்தத்தில் கூட அழுவதற்கு நமக்கு இது காலமில்லை; நாம் போதுமான வரையில் அழுதுவிட்டோம். மிருதுவாவதற்கு நமக்கு இனி மேல் காலமில்லை. இந்த மிருதுத் தன்மையினல் நாம் பஞ்சுப் பொதிகள்போ லாய்விட்டோம்; மரித் தவர்கள் போன்று ஆய்விட்டோம். நமது தேசத்து க்கு இப்பொழுது வேண்டியது யாதெனில், இரும்புச் சதைகளும் எஃகு நரம்புகளுமாம். எதனலும் எதிர்க்க முடியாததும், பிரபஞ்சத்தின் ரகஸ்யங்களி னூடே ஊடுருவிச் செல்லக்கூடியதும், சமுத்திரத்தின் ஆழத்திலே சென்று மரணத்தை நேருக்கு நேரே

சந்திக்கும்படியாயிருந்தாலும் எந்த விதத்திலும் தங்கள் காரியத்தை ஜயிக்கவல்லவையுமான ராக்ஷத சித்தங்களுமாம். அதுதான் நமக்கு வேண்டியது; அத்வைதக் கொள்கையை, எல்லாம் ஒன்றேயென்ற அந்தக் கொள்கையை அறிந்து அநுபவத்தில் கொண்டுவருதலினால்தான் அது சிருஷ்டிக்கப்பட்டு ஸ்திரப்படுத்தப்பட முடியும். நம்பிக்கை, நம்பிக்கை, நம்மிடத்தில் நமக்குள்ள நம்பிக்கை, நம்பிக்கை, ஈச்வரனிடத்து நமக்குள்ள நம்பிக்கை - இதுவே பெருமைக்கு ரகஸ்யம். உங்களுடைய முப்பத்து முக்கோடி புராண தேவதைகளெல்லாவற்றிலும் இன்னும் உங்களுடைய மத்தியில் அடிக்கடி அந்நிய நாட்டார் கொண்டு வந்து விட்டிருக்கிற எல்லாக் கடவுளர்களிடத்தும் உங்களுக்கு நம்பிக்கையிருந்தும் உங்களுக்கு உங்களிடத்திலேயே நம்பிக்கையில்லாது போய்விட்டால், உங்களுக்கு மோக்ஷமில்லை. உங்களிடத்திலேயே நீங்கள் நம்பிக்கை வையுங்கள். அந்த நம்பிக்கையின்மீது எழுந்து நின்று பலமாயிருங்கள்; அதுதான் நமக்கு வேண்டியது.

559. அவர்களும் (நம் முன்னோர்களும்) ஜாதியை உடைத்தவர்களாயிருந்தார்கள். ஆனால், அவர்கள் நமது தற்காலத்து மனிதர்களைப்போலில்லை. ஜாதியை உடைத்து விடுதல் என்றதினால் ஒரு நகரத்திலுள்ள எல்லா ஜனங்களும் மாட்டிறைச்சி தின்று சாராயம் குடிப்பதற்கு ஒன்றாய் உட்கார வேண்டு

மென்றாவது தேசத்திலுள்ள எல்லா மூடர்களும் பைத்தியக்காரர்களும் பிரியப்பட்டவர்களை எப்பொழுதேனும் எங்கேனும் விவாகம் செய்துகொண்டு தேசத்தை ஒரு பைத்தியக்கார ஆஸ்பத்திரி ஆக்கிவிட வேண்டுமென்றாவது பொருள் கொள்ளவில்லை; ஒரு ஜன சமுதாயத்தின் அபிவிருத்தியானது அதிலேயுள்ள விதவைகளுக்குக் கிடைக்கும் தொகையினால் தீர்மானிக்கப்படுகிறதென்று நம்பவுமில்லை. அப்படி யபிவிருத்தி யடைந்துள்ள ஒரு ஜன சமூகத்தை நான் இனிமேல் பார்க்கப்போகிறேன்.

560 இங்கு, இந்தியாவிலே, நாம் எப்பொழுதும் அரசர்களால் ஆளப்பட்டு வந்திருக்கிறோம்; அரசர்கள் நம்முடைய நியதிகள் எல்லாவற்றையும் ஆக்கியிருக்கிறார்கள். இப்பொழுது அவ்வரசர்கள் போய்விட்டார்கள்; அசைந்து காட்டுவதற்கு எவருமேயில்லை. அரசாங்கம் செய்யத் துணிகிறதில்லை; பொது ஜன அபிப்பிராயத்தின் வளர்ச்சிக்கேற்றவாறு அது தன்னுடைய வழிகளைச் செப்பனிட வேண்டியிருக்கிறது. தன்னுடைய கேள்விகளைத் தானே தீர்த்துக்கொள்ளும்படியான ஒரு சுகமான, பலமான பொதுஜன அபிப்பிராயத்தை உண்டாக்குவதற்கு நெடுங்காலம் வேண்டியிருக்கிறது. அதுவரையில் நாம் காத்துக்கொண்டிருக்க வேண்டியிருக்கும் சமுதாயச் சீர்திருத்தத்தைப் பற்றிய கேள்வி முழுதும் இவ்விதமாகப் பாகுபாடு அடைகின்றது.

சீர்திருத்தம் வேண்டியவர்கள் எங்கே? அவர்களை முதலில் உண்டுபண்ணுங்கள். ஒருசிறு பான்மையோரின் கொடுமை உலகம் பார்க்கின்ற கொடுமைகளெல்லாவற்றிலும் மிகமிகக் கெட்டதாம். சில விஷயங்கள் தீமையாமென்று நினைக்கின்ற ஒரு சிலர் ஒரு ஜன சமுகத்தை அசையும்படி செய்ய முடியாது. ஜன சமுகம் ஏன் அசைகிறதில்லை? முதலில் ஜன சமுகத்துக்குக் கல்வி கொடுங்கள், சட்டங்கள் செய்யும்படியான உங்கள் சொந்த சபையைச் சிருஷ்டித்துக் கொள்ளுங்கள். பின்னர், சட்டம் தானே வரும். முதலில் சக்தியை உண்டுபண்ணுங்கள். சட்டம் உற்பத்தியாவதற்கு வேண்டிய அநுமதியை உண்டுபண்ணுங்கள். அரசர்கள் போய்விட்டார்கள்; ஜனங்களுடைய புதிய சக்தி யெங்கே? புதிய அநுமதி யெங்கே? அதைக் கொண்டு வாருங்கள். ஆகையால், ஜன சமுதாயச் சீர்திருத்தத்துக்குக்கூட, முதலாவது கடமை ஜனங்களுக்குக் கல்வி கொடுத்தலாம். அந்த வேளை வரும்வரையில் நீங்கள் காத்திருக்கத்தான் வேண்டிவரும். சென்ற நூற்றாண்டில் அடைவதற்காகக் கிளர்ச்சி செய்யப்பட்ட சீர்திருத்தங்களில் பெரும்பான்மையும் வீண் அலங்காரமானவைகளாகவே இருந்திருக்கின்றன. இந்தச் சீர்திருத்தங்களில் ஒவ்வொன்றும் முதலிரண்டு ஜாதிகளையே தொடுகின்றது; வேறு ஜாதிகளைத் தொடவில்லை.

561. ஏ, 'பிராஹ்மணர்களே! பரம்பரை நியாயத்தை யொட்டிப் பறையனைப் பார்க்கிலும் கல்வி விஷயத்தில் பிராஹ்மணனுக்கு அதிக ருசியும் யோக்கியதையும் இருந்தால், பிராஹ்மணனுடைய கல்விக்காக இனிமேல் அதிகப்பணம் செலவழிக்க வேண்டாம், ஆனால், எல்லாவற்றையும் பறையனுடைய கல்விக்காகச் செலவழியுங்கள்! பலஹீனர்களுக்குக் கொடுங்கள்! ஏனெனில், அங்கு தான் கொடுக்க வேண்டியது அவசியம். பிராஹ்மணன் கெட்டிக்காரனாகப் பிறந்திருந்தால், அவன் உதவியில்லாமல் தானே கற்றுக்கொள்வான். மற்றவர்கள் கெட்டிக்காரர்களாகப் பிறக்காவிட்டால், அவர்களுக்கு வேண்டிய போதனையும் உபாத்தியாயர்களும் பிறவும் அவர்களுக்கே யிருக்கட்டும். இது தான் நியாயமும் யுக்தமுமென்று எனக்குத் தெரிகிறது.

562. நான் ஜாதியை உடைப்பவனுமல்லன், ஆசாரச் சீர்திருத்தக் காரனுமல்லன் என்று உங்களிடம் நான் நேர்மையாய்ச் சொல்லவேண்டும். உங்களுடைய ஜாதிகளின் சம்பந்தமாகவாவது, அல்லது உங்களுடைய ஆசாரச் சீர்திருத்த சம்பந்தமாகவாவது எனக்கு நோக்க ஒன்றுமில்லை. உங்களுக்குப் பிரியப்படுகின்ற எந்த ஜாதியில் வேண்டுமானாலும் இருந்துகொள்ளுங்கள். ஆனால் நீங்கள் இன்னொரு மனிதனை அல்லது இன்னொரு ஜாதியைப் பகைப்பதற்

குக் காரணமில்லை. நான் போதிப்பது அன்பு ஒன்றையே; ஜகத்தினுடைய ஆத்மா சர்வ வியாபகமுள்ளதென்றும், ஏகமேயென்றும் உள்ள உத்தமமான வேதாந்த லக்ஷியத்தை எனது போதனைக்கு நான் ஆதாரமாகக் கொண்டுள்ளேன். சுமார் சென்ற நூறு வருஷங்களாக நமது தேசமானது ஆசாரச் சீர்திருத்தக்காரர்களாலும் பற்பல ஆசாரச் சீர்திருத்தப் பிரேரணைகளினாலும் நிறையப்பெற் றிருக்கிறது. சொந்தத்தில், நான் இந்த ஆசாரச் சீர்திருத்தக்காரர்களுடன் குற்றம் கண்டுபிடிக்கவில்லை. அவர்களிற் பெரும்பான்மையோர் நல்ல எண்ண முள்ளவர்களே; அவர்களுடைய நோக்கங்களும் சில விஷயங்களிலே மிகவும் மெச்சத்தக்கவையா யிருக்கின்றன; ஆனால், இந்த நூறு வருஷங்களில் நடந்துள்ள ஆசாரச் சீர்திருத்தம் தேசம் முழுதும் மெச்சும்படியாக ஸ்திரமானதும் நிலையுள்ளதுமான பயனை யளிக்கவில்லையென்பது தெளிவாகத் தெரிகிற விஷயம். மேடைப் பிரசங்கங்கள் ஆயிரக்கணக்காகச் செய்யப்பட்டுள்ளன; ஹிந்து ஜாதியின் நாகரிகமுடைய பரிசுத்தமான சிரசின்மீது எண்ணற்ற நிந்தனைகள் எறியப்பட்டுள்ளன; ஆயினும், அநுபவத்திலே நல்ல பயன் உண்டாகவில்லை. அதற்குக் காரணம் எங்கேயுள்ளது? காரணம் கண்டு பிடிப்பது கஷ்டமில்லை. அது நிந்தனையிலேயே யுள்ளது

563. அத்வைதத்திலுள்ள ரகஸ்யம் யாதெனில் முதலில் உங்களிடத்திலேயே நம்பிக்கை வைத்துக் கொள்ளுங்கள், பின்னர், பிறவற்றில் நம்பிக்கை வையுங்கள்! உலகசரித்திரத்திலே தங்களிடத்திலேயே நம்பிக்கை வைத்துள்ள ஜனசமூகங்கள்தான் பெரியவையாயும் பலமுள்ளவையாயும் ஆயிருக்கின்றன என்பதை நீங்கள் காண்பீர்கள். இங்கே, இந்தியாவுக்கு ஒரு குமாஸ்தாவாகவே யிருந்த ஒரு ஆங்கிலேயன் வந்தான். பணமில்லாமலும் வேறு காரணங்களை முன்னிட்டும் அவன் தனது மண்டையில் சுட்டுத் தற்கொலை புரிந்து கொள்வதற்கு இரண்டு முறை முயன்றான்; அதில் அவன் தவறியபொழுது அவன் தன்னிடத்தில்தானே நம்பிக்கை யுள்ளவனானான்; தான் பெரிய காரியங்களைச் செய்வதற்குப் பிறந்திருக்கிறதாக நம்பிக்கொண்டான்; அந்த மனிதன் தான் சக்ராபத்தியத்தின் ஸ்தாபகனாகிய க்ளைவ் பிரபு ஆனான். அவன் பாதிரிகளை நம்பி, "ஏ, பிரபுவே நான் பலஹீனன், நான் தாழ்ந்தவன்" என்று சொல்லிக்கொண்டே தன் வாழ்நாட்கள் முழுதும் ஊர்ந்தே சென்றிருப்பானானால், அவன் எங்கே யிருந்திருப்பான்? ஒரு பைத்தியக்கார ஆஸ்பத்திரியில்தான்.

564. ஆகையால் உங்களிலேயே நீங்கள் நம்பிக்கை வைத்துக்கொள்ளுங்கள்; உங்களுக்கு லௌகிக ஐச்வர்யம் வேண்டுமானால், அதற்கு வேலை செய்யுங்கள்; அது உங்களுக்கு உண்டாகும். நீங்கள்

புத்திசாலிகளாயிருக்க விரும்பினால், புத்தி மண்டலத்திலே வேலை செய்யுங்கள்; நீங்கள் அதிமேதாவிகளாவீர்கள். நீங்கள் முக்தியை அடைய விரும்பினால், ஞான மண்டலத்திலே வேலை செய்யுங்கள், நீங்கள் முக்தர்களாவீர்கள்; ஆனந்த ஸ்திதியாகிற நிர்வாணமடைவீர்கள்.

565. எல்லாப் பாபங்களும் எல்லாத் தீமைகளும் பலஹீனம் என்ற அந்த ஒரு வார்த்தையில் அடக்கிவிட முடியும் என்று அறிந்துகொள். எல்லாத் தீய செய்கைக்கும் காரண சக்தியாயுள்ளது பலஹீனமேயாம்; ஸ்வய நன்மையெல்லாவற்றுக்கும் உற்பத்தி ஸ்தானம் பலஹீனமே; மனிதர் பிறரை இம்சிக்கச் செய்வது பலஹீனமே; உண்மையில் தாங்கள் அல்லாததை வெளிப்படுத்தும்படி அவர்களைச் செய்வது பலஹீனமே. எல்லாரும் தங்களுடைய உண்மை நிலையை அறிந்து கொள்ளட்டும்; அவர்கள் தங்களுடைய உண்மை நிலையை அடிக்கடி ஜபிக்கட்டும்; ஸோஹம் - அவர்கள் தங்களுடைய தாயின் பாலுடனே கூட உறிஞ்சட்டும் - நான் அவனே, நான் அவனே - என்ற இந்தப் பலம் ஆம் எண்ணத்தை.

566. நீங்கள் தியாகம் செய்ய முடியுமானால், உங்களுக்கு மதம் உண்டு. உங்களால் முடியாவிட்டால் கீழ் நாட்டிலிருந்து மேல்நாடு வரையில் உலகிலுள்ள புத்தகங்களெல்லாவற்றையும் நீங்கள் படிக்க

லாம்; புத்தகசாலைகளை யெல்லாம் விழுங்கிவிடலாம்; மிகமிகப் பெரிய பண்டிதர்களாய்விடலாம்; ஆனால் கர்ம காண்டத்தைமாத்திரம் நீங்கள் வைத்துக் கொண்டால் பலன் ஒன்றுமே யில்லை; ஆத்மஞான மில்லை. தியாகத்தின் மூலமாகவே, இந்த அமரத் தன்மை அடையப்படவேண்டும். பிரபஞ்சத்தையும் லக்ஷியம் செய்யாத சக்தி, பெரிய சக்தி அது தான்
* * * தியாகம், உலகு முழுதும் பறக்கின்ற இந்தியாவின் கொடி, துவஜம் அது தான், இந்தியா செத்துப்போய்க் கொண்டிருக்கிற ஜாதிகளுக்கு எச்சரிக்கையாக, எல்லாக்கொடுமைக்கும் எச்சரிக்கையாக, உலகிலுள்ள கொடுமைக்கு எச்சரிக்கையாக அடிக்கடி அனுப்பிக் கொண்டிருக்கிற அழியாத நினைப்பு அது தான். ஏ, ஹிந்துக்களே! அந்தக் கொடியை விட்டு விடாதீர்கள் அதைத் தூக்கிப் பிடியுங்கள். நீங்கள் பலஹீனர்களா யிருந்து தியாகம் செய்ய முடியாவிட்டால் கூட, லக்ஷியத்தைக் கீழே கொண்டு வராதீர்கள்.

567. பூர்வகாலங்களில் தியாகம் இந்தியாவை ஜயித்திருக்கிறது; அது இன்னும் இந்தியாவை ஜயிக்கப்போகிறது. இன்னும் அந்தத் தியாகமானது இந்திய லக்ஷியங்களுக்குள் மிகமிகப் பெரியதாயும் சிரேஷ்டமானதாயும் இருக்கிறது. புத்தருடைய பூமி, ராமானுஜருடைய பூமி, இராமகிருஷ்ண பரமஹம்சருடைய பூமி, தியாக பூமி, பூர்வகாலம் முதல்

கர்மகாண்டத்துக்கு விரோதமாகப் போதிக்கப்பட்டு வந்த பூமி. இன்றும் சர்வ சங்க பரித்தியாகஞ்செய்து ஜீவன் முக்தர்களாய் அநேகர் இருக்கிறார்கள். அத்தகைய பூமி அதன் லக்ஷியங்களை விட்டுவிடுமா? நிச்சயமாக விடவே விடாது.

568. அடுத்த ஐம்பது வருஷங்கட்கு இதுவே—இது, நமது மகத்தான இந்திய மாதா—நமது பல்லவியாயிருக்க வேண்டும். நமது மனங்களிலிருந்து அந்தக் காலத்துக்கு மற்ற வீண் தேவதைகளெல்லாம் மறைந்து போகட்டும். நமது சொந்த ஜாதியாகிற இது தான் விழித்திருக்கிற ஒரே கடவுள். எங்கும் அவருடைய கைகள் இருக்கின்றன; எங்கும் அவருடைய கால்கள் இக்கின்றன; எங்கும் அவருடைய காதுகள் இருக்கின்றன; அவர் எல்லாவற்றிலும் வியாபித்திருக்கிறார். மற்றெல்லா தேவதைகளும் உறங்கிக் கொண்டிருக்கிறார்கள். நம்மைச் சுற்றி எங்கும் பார்க்கிற விராட் ஆகிற ஈசுவரனைப் பூஜிக்க முடியாமல், நாம் எந்த வீண் தேவதைகளின் பின்னே செல்வோம்? நாம் இதை உபாசித்துவிட்ட பொழுது, மற்றெல்லாத் தேவதைகளையும் உபாசிப்பதற்கு நாம் வல்லவர்களாவோம். நாம் அரை மைல் ஊர்ந்து செல்வதற்கு முன், நாம் ஹனுமானைப் போலச் சமுத்திரத்தைத் தாண்ட விரும்புகிறோம். அப்படி முடியாது. ஒவ்வொருவனும் யோகியாகப் போகிறான்! ஒவ்வொருவனும் நிஷ்டையிலிருக்கப்

போகிறான்! அது முடியாது. பகல் முழுதும் உலகத்துடனே, கர்ம காண்டத்துடனே கலந்துகொள்ளுதல், பாயில் உட்கார்ந்து நாசியின் வழியாக மூச்சிழுத்தல் முதலியன அவ்வளவு சுலபமானதா? நீ மூன்று தடவை நாசியின் வழியாக மூச்சிழுத்துவிட்டதினால், ரிஷிகள் ஆகாயத்தினூடே பறந்து வந்துவிட வேண்டுமா? அது பரிகாசமா? அதெல்லாம் மூடத்தனம். வேண்டியது சித்த சுத்தி; ஹிருதய சுத்தி. அது எப்படியுண்டாகிறது? எல்லா உபாசனைக்கும் முதலாவது விராட் உபாசனையாம்—நம்மைச் சுற்றியுள்ளவர்களைப் பூஜித்தலாம். அதை உபாசியுங்கள். * * * மனிதர்களும் மிருகங்களும்—இவையெல்லாம் தான் நமது கடவுள்கள்; நாம் உபாசிக்க வேண்டிய முதலாவது கடவுள்கள் நமது சொந்த தேசத்து ஜனங்களே.

569. கல்வி யென்பது உனது மூளைக்குள்ளே செலுத்தப்பட்டு அங்கே உனது ஜீவிதகாலமெல்லாம் ஜீரணிக்கப்படாமல் குழம்பிக் கொண்டிருக்கும்படியான சமாசாரத் தொகுதியன்று.

570. நான் நினைத்திருப்பது யாதெனில், நமது கிரந்தங்களிலே சேகரித்து வைக்கப்பட்டும் ஒரு சிலருடைய வேலைகளிலும் மடங்களிலும் காடுகளிலும் ஒளித்து வைக்கப்பட்டுக் கிடக்கின்ற ஆத்மீக ரத்தினங்களை எல்லாவற்றுக்கும் முதலில் வெளியில் கொண்டுவர வேண்டுமென்பதே. அதை ஒளித்து

லைத்துக் கொண்டிருக்கிறவர்களிடமிருந்து மாத்திரமல்ல. இன்னும் எல்லோரும் அடைய முடியாதபடி அது வைக்கப்பட்டிருக்கும் பாஷையாகிற பெட்டியிலிருந்து-நூற்றாண்டுகளாகக் குவிந்து கிடக்கும் ஸம்ஸ்கிருத பதங்களிலிருந்து-அவற்றை வெளியேகொண்டுவரவேண்டு மென்பதேயாம், ஒரே வார்த்தையில் கூறினால், நான் அவற்றைப் பொது ஜனங்கள் பிரியப் படும்படி செய்யவிரும்புகிறேன், நான் இந்த எண்ணங்களை வெளியே கொண்டுவர விரும்புகிறேன்; அவையெல்லாருடையபொருள். இந்தியாவிலுள்ள ஒவ்வொருவனுக்கும் உரியவை. அவனுக்கு ஸம்ஸ்கிருத பாஷை தெரிந்தாலும் சரி, தெரியாவிட்டாலும் சரி; பொது சொத்தாய்விடட்டும்.

571. நான் அமெரிக்கா சென்றது என்னுடைய செய்கையன்று, அல்லது உங்களுடைய செய்கையன்று. ஆனால் இந்தியாவை எப்பொழுதும் காத்து ரக்ஷிக்கும் கடவுள் என்னை யனுப்பினார். உலகிலுள்ள எல்லா ஜன சமூகங்கட்கும் இப்படி நூற்றுக்கணக்கானவர்களை யனுப்புவார். பூமியிலுள்ள எந்தச் சக்தியும் அதை எதிர்க்க முடியாது. இதுவும் செய்யப்பட வேண்டியிருக்கிறது. நீங்கள் உங்கள் மதத்தைப் போதிப்பதற்கு வெளியே செல்லல் வேண்டும். பூவுலகிலுள்ள ஒவ்வொரு ஜன சமூகத்துக்கும் போதிக்க வேண்டும். ஒவ்வொரு ஜனங்களுக்கும் போதிக்க வேண்டும். இது தான் செய்யவேண்டிய,

முதலாவது காரியம். ஆத்மீக அறிவைப் போதித்த பின்னர் அதனுடனே கூட உங்களுக்கு வேண்டிய அந்த லௌகீக ஞானமும் மற்றெல்லா ஞானமும் உண்டாகும். ஆனால், நான் உங்களிடம் தெளிவாகக் கூறுகிறேன், நீங்கள் மதமின்றி லௌகீக ஞானத்தை யடைய முயற்சித்தால், இந்தியாவில் உங்களுடைய முயற்சி வீணே. அது ஒருபொழுதும் ஜனங்களிடம் பற்றுதல் கொள்ளாது.

572. கல்வி யென்பது என்ன? புத்தகப் படிப்பா? இல்லை. வெவ்வேறான அறிவா? அது கூட அல்ல. மனத்தின் போக்கும் வெளிப்பாடும் அடக்கப்பட்டுப் பலன் பெறும்படியாகச் செய்வதற்குள்ள பயிற்சியே கல்வி யெனப்படும்.

573. தீரன் ஒருவனாலேயே தன்னை மறந்துக் கொள்ள முடியும்; பயங்காளியானவன் அடிக்குப் பயந்து ஒரு கையினாலே தன்னுடைய கைகளைத் துடைத்துக்கொண்டு, மறு கையினாலே கொடுக்கின்றான்.

574. ஜன சமுதாயத்தின் பொருட்டு, நீ எப்பொழுது சுகமடைய வேண்டுமென்ற ஆசை யெல்லாவற்றையும் தியாகம் செய்ய வல்லவனாகிறாயோ, அப்பொழுது நீ புத்தனாய் விடுகிறாய்; அப்பொழுது நீ முக்தனாய் விடுகிறாய்.

575. எவனொருவன் தப்பிதங்கள் செய்கிறானோ, அவனாலே மாத்திரம் தான் சத்திய மார்க்கம் அடையப்படுவதா யிருக்கிறது.

576. ஜீவிதத்தின் வளர்ச்சியோடு கூட அதே சமயத்தில் மரணத்தின் விதையும் விதைக்கப்படுகிறது. இருட்டும் வெளிச்சமும் எப்பொழுதும் ஒன்றாகவே செல்கின்றன.

577. எங்கள் ஈச்வரனுடைய பிரதிநிதிகள், துன்புறுகிற எவரும் அவருடைய பிரதிநிதியே.

578. ஈச்வர ஞாபகம் ஸ்வயநலமுள்ள மனிதனுக்கு உண்டாகாது. நாம் எவ்வளவுக் கெவ்வளவு வெளியே வந்து பிறருக்கு நன்மை செய்கிறோமோ அவ்வளவுக் கவ்வளவு நமது ஹிருதயங்கள் பரிசுத்தமடையும், கடவுள் அவற்றில் இருப்பார்.

579. ஒவ்வொரு பலனிலும் முதல் பாகம் எளியவர்களுக்குச் செல்லவேண்டும்; எஞ்சியுள்ளவற்றிற்கே நமக்கு பாத்தியதை யுண்டு.

580. மரணமென்பது செய்கை யின்மையின் பயனாகும்.

481. வேற்றுமைதான் ஜீவிதத்துக்கு உற்பத்திஸ்தானம்; ஜீவிதத்துக்கு அறிகுறி.

582. பற்றற்றவனயிரு. ஹிருதயத்தின் அன்பு ஒருவருக்கே புரியது. எவருக்கு? ஒருபொழுதும் மாறுதலற்ற ஒருவருக்கு அந்த ஒருவர் யார்? அவர்தான் கடவுள்.

583. எங்கெல்லாம் அன்பு உண்டோ, எங்கெல்லாம் ஆனந்தத்தின் ஒரு பொறியுண்டோ, அதை அவருடைய சாந்நித்தியத்தின் அம்சமே யென்று அறிந்து

கொள்வாய்; ஏனெனில், அவரே சுகம், ஆநந்தம், அன்பு. அதில்லையேல் எவ்வித அன்புமிருக்க முடியாது.

584. ஒருவர் ஒரு சந்நியாசியைப் பார்த்து "ஸ்வாமி! நேர்த்தியான இடம் கண்டு கொண்டீரா? ஸ்ரீமேர்த்கிரியிலே எத்தனை வருஷகாலம் யாத்திரை செய்திருக்கிறீர்?" என்று கேட்டார் "நாற்பது வருஷகாலம் நான் யாத்திரை செய்திருக்கிறேன்" என்று மறுமொழி பகர்ந்தார் சந்யாசி. "பொறுக்கினுல் அநேக அழகிய இடங்கள் அகப்படுமே நீங்கள் ஏன் ஸ்திரமாயிருப்பதற்கு ஒரு இடம் தேடிக் கொள்ளவில்லை?" "ஏனெனில் இந்த நாற்பது வருஷங்களாக எனது மனம் அப்படிச் செய்வதற்கு என்னை விடவில்லை." நாம் எல்லோரும் "சாந்தியடைவோம்" என்று சொல்கிறோம்; "ஆனல் நமது மனம் நாம் அப்படிச் செய்வதற்கு இடம் கொடுக்கிறதில்லை."

585. ஒரு தார்த்தாரனைப் பிடித்த மனிதனைப் பற்றியுள்ள கதை உங்களுக்குத் தெரியும். ஒரு போர்வீரன் நகருக்கு வெளியே போயிருந்தான், அவன் பாசறையினருகே வந்தவுடன் "நான் ஒரு தார்த்தாரனைப் பிடித்து விட்டேன்" என்று கூச்சலிட்டான், "அவனை யுள்ளே கொண்டுவா!" என்று ஒரு சப்தம் கிடைத்தது. "அவன் உள்ளே வரமாட்டேன் என்கிறான், ஐயா". "அப்படியானல், நீ உள்

ளேவா!" அவன் என்னையும் உள்ளே விடமாட்டேன் என்கிறன், ஐயா !! அதுபோலவே, நம்முடைய இந்த மனத்தில், நாம் "ஒரு தார்த்தாரனைப் பிடித்தி" ருக்கிறோம்; நாம் அதை அடக்கவும் முடிகிறதில்லை, நம்மை யது அடங்கவும் விடுகிறதில்லை, நாம் எல்லோரும் "தார்த்தாரர்களைப் பிடித்தி" ருக்கிறோம். சாந்தமாயும் சமாதானமாயும் மற்றும் இருவென்று நாம் எல்லோரும் சொல்கிறோம். ஆனல் ஒவ்வொரு குழந்தையும் அப்படிச் சொல்ல முடியும். தன்னல் அப்படிச் செய்ய முடியுமென்றும் நினைக்கிறது. ஆயினும், அது மிகவும் கடினமே. நான் முயன்று பார்த்திருக்கிறேன்; நான் எனது கடமைகளை யெல்லாம் தூர எறிந்து விட்டு மலைகளின் சிகரங்கட்கு ஓடிவிட்டேன். நான் குகைகளிலும் ஆழ்ந்த ஆரண்யங்களிலும் வசித்தேன். ஆயினும், நான் ஒரு தார்த்தாரனைப் பிடித்துக் கொண்டேன்; ஏனெனில், அப்பொழுதெல்லாம் எனது உலகம் என்னுடனேயே யிருந்தது.

586. நீ ஸ்வயநல மற்றிருக்கிறயா என்று உனது மனத்தைக் கேள். நீ ஸ்வயநல மற்றிருக்கிறயானல் எதையும் லக்ஷியம் செய்யாதே. உன்னை எதுவும் எதிர்க்க முடியாது.

587. ஒருபொழுதும் இல்லாத ஒன்றைப்போல நீ ஒன்றும் செய்ய முடியாது. நீ யொருபொழுதும்

பார்த்திராத ஒன்றைப்போல நீ ஒன்றும் செய்ய முடியாது.

588. இயந்திரங்கள் மனுஷ்ய வர்க்கத்தை யொருபொழுதும் ஆநந்தப்படுத்தியதில்லை; ஆநந்தப் படுத்தப் போவதுமில்லை.

589. நீ உண்மையான சீர்திருத்தக்காரனாயிருந்தால், மூன்று விஷயங்கள் அவசியமாம். முதலாவது உணர்வதாம் உன்னுடைய சகோதரர்களுக்காக நீ உண்மையில் உணர்கிறாயா? உலகிலே அவ்வளவு துக்கமிருக்கிறதென்றும், அவ்வளவு அறிவீனமும் மூட நம்பிக்கையுமிருக்கிறதென்றும் நீ உண்மையில் உணர்கிறாயா? மனிதர் உன்னுடைய சகோதரர்களென்று நீ உணர்கிறாயா? இந்த எண்ணம் உனது சரீரம் முழுதும் பரவுகிறதா? அது உன்னுடைய ரத்தத்துடன் ஓடுகிறதா? அது உன்னுடைய நரம்புகளிலே ஓடுகிறதா? அது உன்னுடைய சரீரத்திலுள்ள ஒவ்வொரு நரம்பிலும் நாடியிலும் ஓடுகிறதா? நீ அந்த அநுதாப எண்ணம் நிறைந்தவனாயிருக்கிறாயா? அப்படியானால் அது முதல் படியேயாம். நிவிருத்தி ஏதேனும் கண்டுபிடித்து விட்டாயா? என்பதைப்பற்றி நீ பின்னர் நினைக்க வேண்டும். பழய எண்ணங்களெல்லாம் மூட நம்பிக்கையாயிருக்கலாம்; ஆனால் இந்த மூட எண்ணங்களிலும் இவற்றைச் சுற்றிலும் தங்கத் துண்டுகளும் உண்மைத் துண்டுகளும் இருக்கின்றன.

களங்கத்தை யெல்லாம் நீக்கிவிட்டுத் தங்கத்தை மாத்திரம் வைத்துக் கொள்ளும் படியாக உபாயங்கள் கண்டு பிடித்திருக்கிறாயா? அது அப்படி செய்திருந்தால், அது இரண்டாவது படியே யாகும்; இன்னுமொரு விஷயம் அவசியமாம். உனது நோக்கம் என்ன? பொன்னாசை, கீர்த்தியாசை, அல்லது அதிகார ஆசை; இவற்றால் நீ தூண்டப்படவில்லை என்பது நிச்சயமா? உலகு முழுதும் உன்னை நசுக்கிவிட விரும்பினாலும் கூட நீ உனது லக்ஷியங்களைப்பற்ற முடியு மென்பதில் நீ உண்மையில் நிச்சயமாயிருக்கிறாயா? உனக்கு வேண்டியது இன்னதென்று உனக்குத் தெரியும் என்பதிலும் உனது கடமையை நீ செய்வாயென்பதிலும், உனது உயிர் அபத்திலிருந்தாலும்கூட அதையே செய்வாயெனபதிலும் உனக்கு நிச்சய முண்டா? உயிருள்ளவரையில், ஹிருதயத்தில் ஒரு துடிப்பு உள்ளவரையில் நீ விடாமல் முயல்வாய் என்பதில் உனக்கு நிச்சயமா? அப்படியாயின், நீ உண்மையான சீர்திருத்தக்காரன், ஆசாரியன், குரு, மனுஷ்ய வர்க்கத்துக்கு ஆநந்த மளிப்பவன்.

590. நாம் செய்யவேண்டியவை கடமைகளே. பலன்கள் தங்களைத் தாங்களே கவனித்துக் கொள்ளட்டும்.

591. உலகிலுள்ள எல்லா ஜாதியாரிலும் சரித்திரத்தின் மிகமிகப் பூர்வகாலம் முதல் இந்தியாவானது ஞானபூமி எனப்பட்டு வருகிறது. எத்

தனையோ யுகங்களாக இந்தியா பிற ஜனசமூகங்களை ஜயிக்க ஒருபொழுதும் சென்றதேயில்லை. அதன் ஜனங்கள் ஒருபொழுதும் போர்வீரர்களா யிருந்த தில்லை. உங்கள் மேனாட்டு ஜனங்களைப்போல அவர் கள் மாம்சம் சாப்பிடுகிறதில்லை. ஏனெனில், மாம்ச பக்ஷணம் தான் போர்வீரர்களை யுண்டாக்குகிறது; மிருகங்களின் இரத்தம் உங்களை அமைதியற்றுப் பேர்கும்படி செய்கிறது; நீங்கள் ஏதேனும் செய்ய விரும்புகிறீர்கள்.

592. பிராஹ்மணனென உரிமை பாராட்டிக் கொள்கிற எவனும் முதலில் அந்த ஆத்மஞானத்தை வெளிப்படுத்தியும் பின்னர் பிறரை அதே அந்தஸ் துக்கு உயர்த்தியும் தனது பாவனைகளை ருசுப்படுத்திக் கொள்ள வேண்டும்.

593. பிராஹ்மணர்களே! ஜாக்கிரதை! இது மரணத்துக்கு அறிகுறியாகும்! எழுந்து நின்று உங்க ளுடைய ஆண்மையை, உங்களுடைய பிராஹ்மணத் தன்மையை, உங்களைச் சுற்றிலுமுள்ள பிராஹ்மண ரல்லாதவர்களை — குருவினுடைய தன்மை வகிக் காமல் — மேனாட்டின் கீழ்நாட்டின் ஏமாற்றமும் மூட நம்பிக்கைகள் நிறைந்த அகங்காரமாகிய அழுகிய புண்ணுமில்லாமல் — ஆனால், ஒரு ஊழிய னுடைய தன்மை வகித்து — உயர்த்திவிட்டு நிரூபி யுங்கள்.

594. எப்படி பணி மேற்கொள்வது என்பதை எவன் ஒருவன் அறிகிறானோ அவனே எப்படி யாள்வது என்பதை யறிகிறான்.

595. எவரும் எப்பொழுதும் பிச்சையேற்று எதையும் அடைந்ததில்லை. நமது யோக்கியதைக்குத் தகுந்ததையே நாம் அடைகிறோம். யோக்கியதை பெறுதற்கு முதலாவதுபடி ஆசையுறுவதே; 'நாம் எதையடைவதற்கு யோக்கியர்கள்?' என்று நாமே உணர்ந்து கொள்கிறோமோ அதையே நாம் ஜயத்துடன் இச்சிக்கிறோம்.

596. 'வேதாந்திகளும் சந்யாசிகளுமாகிய நாங்களோ வேதங்களுடைய காலத்திலே' சம்ஸ்கிருதம் பேசிக்கொண்டிருந்த நமது மூதாதைகளைப்பற்றிக் கர்வமடைகிறோம்; அறிந்துள்ளவரையில் மிகமிகப் பழமையான நாகரிகத்தையுடையவர்களும் தமிழ்ப் பாஷையினருமான நமது முன்னோர்களைப்பற்றிக் கர்வமடைகிறோம்; மேற்சொன்ன இருவகையினரையும் விடப் பழமையானவர்களும் காடுகளிலே வேட்டையாடி ஜீவித்துவந்தவர்களும் ஆன நமது கோலேரியன் முன்னோர்களைப்பற்றிக் கர்வமடைகிறோம்; சக்கிமுக்கிக்கல் ஆயுதங்களையுடைத்தாயிருந்தவர்களும் மனுஷ்ய வர்க்கத்தின் முதலானவர்களுமான நமது முன்னோர்களைப்பற்றிக் கர்வமடைகிறோம்; அபிவிருத்தி யென்பது உண்மையானால், நாம் நமது மிருக முன்னோர்களைப்பற்றி கர்வமடை

கிறோம்; ஏனென்றால் அவர்கள் மனிதனுக்கும் முந்தியவர்கள். உணர்வுள்ள அல்லது உணர்வில்லாத பிரபஞ்சம் முழுதிற்கும் நாம் சந்ததியார் என்று கர்வமடைகிறோம். நாம் பிறந்து வேலை செய்து துன்புறுகிறோமென்று கர்வமடைகிறோம். கார்யம் முடிந்தவுடனே நாம் மரித்து, இனிமேல் மயக்கமேயில்லாத பிரதேசத்தினுள்ளே நுழைகிறோமென்று நாங்கள் இன்னும் அதிக கர்வமடைகிறோம்.

597. ஒருபொழுதும் முயற்சியே செய்யாத கோழையுடன் ஒத்திட்டுப் பார்த்தால் (முயன்று தவறுகின்ற) அவன் வீரனே.

598. இந்தியாமரிக்குமா? அப்படி மரிக்குமாயின், உலகினின்றும் ஆத்ம ஞானமெல்லாம் அறவே போய்விடும்: நல்லொழுக்க பரிபூர்ணத்துவம் எல்லாம் அழிந்துபோம்; மதத்தினிடமுள்ள இனிய அநுதாபமெல்லாம் அழிந்துபோம்; லக்ஷியத்துவமெல்லாம் அழிந்துவிடும்; அதன் இடத்தில் காமமும் ஆடம்பரமும் ஆகிய இரண்டும் ஆண் தேவதை பெண் தேவதையாகவும் பணமானது வைதீகனையும் ஆட்சி புரியும்; மோசமும் பலாத்காரமும் போட்டியும் அதன் சடங்குகளாயிருக்கும்; மனுஷ்ய ஜீவன் அதற்குப் பலியாய்விடும். அத்தகைய விஷயம் ஒரு நாளும் நடைபெற முடியாது.

599. ஸ்வதந்திரமே வளர்ச்சிக்கு முதல் நிபந்தனையாம்.

600. நன்மை செய்வதே ஜீவிதம், நன்மை செய்யாதிருத்தலே மரணம்.

601. அன்பு செலுத்துகிறவனைத் தவிர வேறெவனும் ஜீவிக்கிறதேயில்லை.

602. எனது குழந்தைகாள், இரங்குங்கள், உணருங்கள்; எளியவர்கள், அறிவினர்கள், கீழேபோட்டு மிதிக்கப்படுபவர்கள் இவர்களுக்காக இரங்குங்கள்—ஹிருதயம் நின்று மூளை கலங்கி உங்களுக்குப் பைத்தியம் பிடித்து விடுமென்று நீங்கள் நினைக்கிறவரையில் இரங்குங்கள்— பின்னர் ஈச்வரனுடைய பாதாரவிந்தத்திலே ஆத்மாவையர்ப்பணம் செய்யுங்கள்: அப்பொழுது, சக்தி, உதவி, அசாதாரணமான தைர்யம் இவையுண்டாகும்.

603. இங்கே எனக்கு ஆகாரம் அளிக்கமுடியாத கடவுள் மோக்ஷத்திலே நித்தியானந்தத்தை யளிப்பாரென்று நான் நம்பவில்லை.

604. எவன் ஸ்வதந்திரம் அளிப்பதற்குத் தயாராயில்லையோ அவன் எவ்வித ஸ்வதந்திரம் அடைதற்கும் தகுதியற்றவன்.

605 மகம்மதியர்களுக்குள்ளே பரிபூர்ண சமத்துவமும் சகோதரத் தன்மையுமிருக்க வேண்டுமென்று மகம்மது தமது வாழ்க்கையினால் நிரூபித்தார். ஜனம், ஜாதி, கக்ஷி, நிறம், ஆண் பெண் என்ற வேற்றுமை இவற்றைப்பற்றிக் கேள்விகிடையாது. துருக்கி சுல்தான் ஆப்பிரிக்காச் சந்தையி

யிருந்து விலக்கு வாங்கி, அவனை விலங்கிலிட்டு, ஊருக்கிக்குக் கொண்டுவரலாம்; ஆனால் அவன் மகம் மதியனுகி, அவனுக்குப் போதிய சமர்த்தும் வன்மையும் இருக்குமேயானால் அவன் சுல்தானுடைய பெண்ணை விவாகமும் செய்து கொள்ளலாம்.

606. ஒவ்வொரு பெரிய தீர்க்கதரிசிக்கும் அவனுடைய ஜீவிதம் ஒன்றே வியாக்கியானமாம்.

607. ஆசியாவின் சப்தம் மதசப்தமாயிருந்து வருகிறது. ஐரோப்பாவின் சப்தம் ராஜீய சப்தமாயிருந்து வருகிறது.

608. இன்றையதினம் காரணமாயுள்ளது: முற்காலத்தின் கார்யமும் பிற்காலத்துக்குக் காரணமுமாம்.

609. ஒரு ஜாதியை உண்டுபண்ணுவது அதன் மதமேயாகும்.

610. இந்திய ஜனசமூகம் கொல்லப்பட முடியாது. அது மரணமற்று நிற்கின்றது; அந்த உணர்ச்சி அஸ்திவாரமா யுள்ளவரையில், அதன் ஜனங்கள் தங்கள் ஆத்மஞானத்தை விட்டுவிடாதிருக்கும் வரையில், அது நிற்கத்தான் செய்யும். அவர்கள் பிச்சைக்காரர்களாய், ஏழைகளாய், வறுமையினால் பீடிக்கப்பட்டவர்களாய் இருக்கலாம்; அழுக்கும் குப்பையும் ஒருவேளை எக்காலத்தும் சூழ்ந்திருக்கலாம்; ஆனால் அவர்கள் தங்கள் கடவுளை விட்டுவிடாதிருக்கட்டும். தாங்கள் மகரிஷிகளுடைய குழந்தை

கள் என்பதை மறந்து விடாதிருக்கட்டும். மேனாட்டிலே தெருவில் செல்லும் மனிதன்கூட, தான் மத்திய காலங்களிலிருந்த ஏதோ ஒரு கொள்ளைக்காரப் பிரபுவின் வம்சத்தவன் என்று சொல்லிக் கொள்ள விரும்புவது போல, இந்தியாவிலே சிம்ஹாசனத்திலேயிருக்கும் சக்கரவர்த்தி தாம் ஆரண்யத்திலே வசித்துவந்த ஏதோ ஒரு பிச்சைக்கார ரிஷியினுடைய, மரவுரியுடுத்துக் காட்டிலேயுள்ள பழங்களையுண்டு ஈச்வரனை தியானித்துக் கொண்டிருந்த ஒரு மனிதனுடைய சந்ததியானென்று கூறிக்கொள்ள விரும்புகிறான். இதுவே நாம் வேண்டுகின்ற சந்ததியின் மாதிரி; பரிசுத்தத்தன்மை இவ்விதமாகப் பரமோத்கிருஷ்டமாக கருதப்படுகிறவரையில், இந்தியா மரிக்க முடியாது.

611. பிராஹ்மணர்களுடைய சக்தியின் ரகஸ்யம் அவர்களுடைய தியாகத்திலேயுள்ளது.

612. நீ தேவதூதனுடைய அறிவையுடைத்தாயிருந்தாலும் சரி, அல்லது ஒரு மிருகத்தினுடைய அறிவின்மையை உடைத்தாயிருந்தாலும் சரி, ஜீவிதம் விநாடி நேரமேயுள்ளது. நீ கந்தை புடுத்தியுள்ள மிக மிக எளிய மனிதனுடைய வறுமையை உடைத்தாயிருந்தாலும் சரி, அல்லது மிகமிகப் பெரிய தனவந்தனுடைய ஐச்வர்யத்தை யுடைத்தாயிருந்தாலும் சரி, ஜீவிதம் விநாடி நேரமேயுள்ளது. நீ மேனாட்டுப் பெரிய நகரங்களிலேயுள்ள பெரிய தெருக்களில் ஒன்

தில் கஷ்டப்படுகின்ற மனிதனுயிருந்தாலும் சரி, அல்லது லக்ஷக்கணக்கான ஜனங்களை யாள்கின்ற, கிரீடம் தாங்கிய சக்கரவர்த்தியாயிருந்தாலும் சரி, ஜீவிதம் விநாடி நேரமேயுள்ளது. நீ மிக மிகச் சரீரசுகத்தை யுடைத்தாயிருந்தாலும் சரி, அல்லது வியாதியுள்ள வனுயிருந்தாலும் சரி, ஜீவிதம் க்ஷணபங்குரமானதே. நீ மிகவும் இனிய குணத்தை வகித்தவனுயிருந்தாலும் சரி, அல்லது மிக மிகக் கொடிய குணத்தை யுடையவனுயிருந்தாலும் சரி, ஜீவிதம் க்ஷணபங்குரமானதே.

613. சிலரே நினைப்பின் சக்தியை அறிகிருர்கள். ஒருவன் குகைக்குள்ளே சென்று, அடைத்துக்கொண்டு, ஒரு உண்மையான பெரிய நினைப்பை நினைத்து மரித்துவிட்டால், அந்த நினைப்பு அந்தக் குகையின் சுவர்களில் ஊடுருவிச் சென்று, காலத்தினூடே சலித்து, கடைசியாக மனுஷ்ய ஜாதி முழுதையும் வியாபித்துக்கொள்ளும். நினைப்பின் சக்தி அத்தகையது; ஆகையால், உங்களுடைய நினைப்புக்களைப் பிறருக்கு அளிப்பதில் அவசரப்படாதீர்கள்.

614. முதலில், ஒழுக்கத்தை யுண்டுபண்ணிக் கொள்ளுங்கள். அது தான் நீங்கள் செய்யக் கூடிய மிக மிக உயர்ந்த கடமை.

615. நிச்சயமான அபிப்பிராயம் என்றுள்ள உண்மையும் நோக்கத்தின் பரிசுத்தத்தன்மையும் நிச்சயமாய் ஜயமடையும்; மிகச் சிறுபான்மையோர்

கூட இவற்றை வைத்துக்கொண்டு எல்லாவித இடையூறுகளையும் நிச்சயமாய் ஜயித்து விடுவார்கள்.

616. உண்மை, பரிசுத்தத்தன்மை, ஸ்வய நலமற்ற தன்மை—இவையெங்கெல்லாம் உள்ளனவோ அங்கெல்லாம் இவற்றையுடையவனை நசுக்குவதற்கு எந்த சக்தியினாலும் முடியாது. ஒருவன் இவற்றைத் தரித்துக்கொண்டு பிரபஞ்சம் முழுவதையும் எதிர்த்து நிற்கவல்லவனாகிறான்.

617 ஓராயிரம் நிலைமைகளினால் பின்னுக்கு இழுத்து வைக்கப்பட்டிருக்கிற காரணமானது சீக்கிரமாவது பின்னராவது கார்யமாக வெளிப்படும்; உள்ளடங்கியுள்ள நினைப்பு, இப்பொழுது எவ்வளவு சக்தியற்றதாயிருந்தாலும் பிரபஞ்ச சுழு சுழுப்பிலே ஒருநாள் ஜயமடையும்.

618. மனிதனுடைய வளர்ச்சியானது அவன் புலன்களைப் பின்னேவிட்டு விட்டு உயர்ந்த ஆகாயத்தில் வசிக்கும் சக்தியினாலும், அவனுடைய சுவாசப்பைகள் சுவாசிக்கக்கூடிய பரிசுத்தமான நினைப்புப் பிராணவாயுவின் தொகுதியினாலும், அந்த உயரத்திலே அவன் செலவழிக்கக் கூடிய நேரத்தினாலுமே கணக்கிடப்பட முடியும்.

619. ஆடம்பரங்கள் கூட எண்ணங்களுக்கும் லக்ஷியங்களுக்கும் ஏற்றவாறு, கூடுமான வரையில் எவ்வளவு நினைப்பு ஜீவனைப் பிரதிபலிக்க முடியுமோ அவ்வளவு நினைப்பு ஜீவனையும் பிரதிபலிக்கச் செய்

யும்படி அமைக்கப்பட்டிருக்கின்றன— இது தான் கலை என்பது.

620. தன்னுடைய லக்ஷியத்தை யடைவதற்கு எது அநுகூலமாயிருக்கிறதோ அது ஒன்றையே ஒவ்வொரு மனிதனும் உண்மையென்று கூறுகிறான்.

621. எவருடைய ஒரே நோக்கம் ஜீவித சக்திகளைப் பொன்னுக்காவது பெயருக்காவது அல்லது வேறெந்த போகத்துக்காவது மாற்றுவதாயிருக்கிறதோ, எவருக்கு யுத்தவீரர்களுடைய நடையொன்றே சக்தியின் வெளிப்பாடாயிருக்குமோ; எவருக்குப் புலன்களின் போகங்கள் ஒன்றே வாழ்க்கை யளிக்கக் கூடிய ஆநந்தமாயிருக்குமோ, இவர்களுக்கு இந்தியாவானது எப்பொழுதும் ஒரு பெரிய பாலைவனம் போன்றிருக்கிறது.

622. மனுஷ்யவர்க்கத்தில் பெரும் பான்மையோருக்கு அறிவுக்கேற்றவாறு சக்தியானது ஸ்தூல வடிவத்திலே அளிக்கப்பட்டால் தான் அறிந்து கொள்ள முடியும்.

623. (ஸ்ரீ சைதந்யருடைய) சிஷ்யர்கள் சிம்ஹாசனாதிபதிகளாய் விட்டார்கள்; ஆனால் அவரோ இந்தியாவிலே வீட்டுக்கு வீடு கால்நடையாய் நடந்து சண்டாளர்களையும் ஈச்வரனிடத்தில் பக்தி செலுத்தும்படி இரங்கிக் கேட்டுக்கொண்டு, போதித்துவந்தார்.

624. பிரகிருதியானது எப்பொழுதும் அடிமையின் நெற்றியிலே தீட்டுகின்ற அறிகுறியை— பொறாமையாம் அழுக்கை— நாம் முதலில் துடைத்துவிடுவோம். எவரையும் பார்த்துப் பொறாமை கொள்ளாதே. நன்மை செய்கிற ஒவ்வொருவருக்கும் உதவிசெய்யத் தயாராயிரு. மூவுலகங்களிலுள்ள ஒவ்வொருராசிக்கும் ஒரு நல்ல நினைப்பை அனுப்பு.

625. இந்தியாவானது உயர்த்தப்படும்,—மாம்ச சக்தியினாலல்ல, ஆனால் ஆத்மசக்தியினாலேயே; அழிவாம் கொடியினாலன்று; ஆனால் சமாதானமும் அன்புமாகிற கொடியினாலேயாம்— இதுவே சந்யாசியினுடைய உடை; ஐச்வர்ய சக்தியினாலன்று; ஆனால் பிட்சா பாத்திரத்தின் சக்தியினாலேயாம். நீ பலவீனனென்று சொல்லிக்கொள்ளாதே. ஆத்மா சர்வசக்தியுள்ளது. ராமகிருஷ்ணரின் பாதங்களின் திவ்ய ஸ்பர்சத்தினால் உண்டு பண்ணப்பட்ட அந்தப் பிடியளவு வாலிபர்களைப் பாருங்கள். அவர்கள் அஸ்ஸாமிலிருந்து ஸிந்துவரையில், ஹிமோத் கிரியிலிருந்து கன்யாகுமரி வரையில் அந்தச் செய்தியை போதித்திருக்கிறார்கள். அவர்கள் ஹிமோத்கிரியில் பனியில் காலினால் நடந்து இருபதினாயிரம் அடி உயரம் கடந்து சென்றிருக்கிறார்கள். அவர்கள் தங்களுக்கு ஆகாரம் பிச்சையெடுத்திருக்கிறார்கள், கந்தைகளை உடுத்தியிருந்திருக்கிறார்கள்; அவர்கள் துன்புறுத்தப்பட்டு, போலீசாரால் பின் தொடரப்பட்டு,

சிறையில் வைக்கப்பட்டு, அரசாங்கத்தாருக்கு அவர்கள் குற்றமற்றவர்களென்று தெரிந்தபொழுது, கடைசியில் விடுவிக்கப்பட்டார்கள்.

626. அவர்கள் இப்பொழுது இருபது பேர் இருக்கிறார்கள். அவர்களை நாளைக்கு இரண்டாயிரமாகச் செய்யுங்கள். வங்காளத்து வாலிபர்களே, உங்களுடைய தேசம் வேண்டுகிறது. உலகம் வேண்டுகிறது. உங்களுக்குள் உள்ள ஈச்வரத்துவத்தை வெளியே கூப்பிடுங்கள்; அது நீங்கள் பசி தாகத்தை, உஷ்ணத்தையும் குளிர்ச்சியையும் சகிக்கும்படி செய்யும். ஜீவித சுகங்களெல்லாவற்றிலும் சூழப்பட்டு ஆடம்பரமான வீடுகளிலே யுட்கார்ந்து கொண்டு, கொஞ்சம் மதத்தைப்பற்றிப் பிரஸ்தாபித்துக் கொண்டிருப்பது மற்ற பூமிகளுக்கு நன்றாயிருக்கும்; ஆனால் இந்தியாவுக்கு இன்னும் பெரிய உணர்ச்சி யொன்றுண்டு. அது அந்தர்க்கதமாக வேஷத்தைக் கண்டுபிடித்துவிடுகிறது. நீங்கள் தியாகம் செய்ய வேண்டும். பெரியோராயிருங்கள். எந்தப் பெரிய வேலையும் தியாகமின்றிச் செய்ய முடியாது. புருஷனே இந்த உலகத்தை சிருஷ்டிப்பதற்குத் தன்னைத்தானே பலிகொடுத்துக் கொண்டான். உங்களுடைய சௌகர்யங்களை, உங்களுடைய சுகங்களை உங்களுடைய பெயர்களை, கீர்த்தியை அல்லது அந்தஸ்தை உங்களுடைய ஜீவிதங்களைக்கூட கீழே வைத்துவிட்டு, லக்ஷக்கணக்கானவர்கள் இந்த சம்சார

சாகரத்தைக்கடப்பதற்கு மனுஷ்ய சக்திகளினாலாய ஒருபாலத்தை யுண்டுபண்ணிக் கொள்ளுங்கள். நன்மைச் சக்திகளெல்லாவற்றையும் ஒன்று சேருங்கள். நீங்கள் எந்தக் கொடியின் கீழே நடக்கிறீர்களென்பதைப்பற்றி லக்ஷியம் செய்யாதீர்கள். உங்களுடைய நிறம் பச்சையா, நீலமா, அல்லது சிவப்பா என்பதைப்பற்றி லக்ஷியம் செய்யாதீர்கள்; ஆனால் எல்லா வர்ணங்களையும் ஒன்று சேர்த்து அன்புவர்ணமாகிய அந்த அத்தியந்த வெள்ளை வர்ணத்தை யுண்டுபண்ணிக் கொள்ளுங்கள். நம்முடையது வேலை செய்ய வேண்டியதே. பலன்கள் தம்மைத்தாமே கவனித்துக்கொள்ளும். நீங்கள் ஈச்வரனுடைய வழியிலே எந்தச் சமுதாய ஏற்பாடாவது இடையூறாயிருந்தால் அது ஆத்மசக்தியின் முன்னே விலகிவிடும். நான் பிற்காலத்தினுள்ளே புகுந்துபார்க்கவில்லை; பார்க்க விரும்பவுமில்லை. ஆனால் நான் ஜீவிதத்தைப்போல அவ்வளவு தெளிவாக ஒரு தோற்றத்தைப் பார்க்கிறேன்; அதாவது, பூர்விக மாதா இன்னுமொரு முறை விழித்துக்கொண்டு விட்டாள், பாலியப்பருவமடைந்து விட்டாள், முன்னிலும் அதிக பெருமையுடன் விளங்குகிறாள் என்பதே. சமாதானமும் சாந்தமுமாகிற குரலினால் உலகெல்லாவற்றுக்கும் அவளை பறைபறையுங்கள்.

627. அறிவு என்பது ஒற்றுமையைக் கண்டுபிடித்தலேயாம்.

628. ஒரு பரிபூரண மனிதன் அத்தகைகையை கற்பனைகளினும் உயர்ந்தவனே. அவனில் வட்டம் பூர்த்தியடைகிறது; தன்மையும் முன்னிலையும் ஒன்றாய்விடுகின்றன. அவனில் எல்லா மயக்கங்களும் ஒழிந்துவிடுகின்றன; அவற்றுக்குப் பதிலாக, தான் எப்பொழுதுமே பரிபூர்ணவஸ்து என்ற அநுபூதியுண்டாகிறது.

629. ஸ்வதந்திரவஸ்து கட்டுப்பட்டது எப்படி சாத்தியமாயிற்று? தான் ஒருபொழுதும் கட்டுப்பட்டில்லையென்றும் ஆனால் எப்பொழுதும் ஸ்வதந்திரமாகவே யிருப்பதாகவும் அத்வைதி கூறுகிறான். பற்பல நிறங்களையுடைய பற்பல மேகங்கள் ஆகாயத்தின் முன்னேவருகின்றன. அவையங்கு ஒரு நிமிஷ நேரம் இருந்துவிட்டு, பின்னர் சென்று விடுகின்றன. என்றுமுள்ளது அந்த நித்தியமான நீலநிற ஆகாயமே ஆகாயம் ஒருபொழுதும் மாறுகிறதில்லை; மாறுகிறது மேகமே. அதுபோலவே நீஎப்பொழுதும் பரிபூர்ணனயிருக்கிறாய், நித்திய பரிபூர்ணனயிருக்கிறாய்.

630. ஞானயோகிக்கு இந்த வாழ்க்கையின் பயனும் நோக்கமும் யாதெனில் ஜீவன் முக்தனவதே. இவ்வுலகில் பற்றற்று வாழ முடிபவனே ஜீவன் முக்தன். தண்ணீரிலிருந்தும் தண்ணீரினல் ஒரு பொழுதும் நனைக்கப்படாத தாமரையிலை போல அவன் இருக்கிறான். மனுஷ்யராசிகளுள் அவனே மிக மிக

சிரேஷ்டமானவன்; எல்லா ராசிகளுக்குள்ளுமே மிக மிக சிரேஷ்டமானவன்; ஏனெனில் அவன் அகண்ட வஸ்துவும் தானும் ஒன்றேயென்பதை யநுபவத்தில் அறிந்து விட்டான். ஈச்வரனும் தானும் ஒன்றேயென்பதை யநுபவத்தில் அறிந்து விட்டான்.

681 ஞானமடைவது மிகக் கஷ்டம். புத்தியிலுள்ள விக்கிரகங்களை மாத்திரமல்ல, புலன்களிலுள்ள விக்கிரகங்க ளெல்லாவற்றையும் உடைத்தெறியத் துணிகின்ற மிக மிகப் பெரிய தைரியசாலிகளாலும் மிக மிகப் பெரிய தீரர்களாலுமே முடியும்

682. இந்த உலகத்தையும் மறு உலகத்தையும் மறக்கிறவன் எவனோ அவனுக்கு சந்நியாஸியாவதற்குப் பாத்தியதை யுண்டு.

683. நம்முடைய அறிவெல்லாம் மாயையாம் வலைப்பின்னலுக்குள் இருக்கிறது; அதற்கப்பால் ஸ்வதந்திர முள்ளது; அந்த வலைப்பின்னலுக்குள் அடிமைத் தனமுள்ளது; அதெல்லாம் நியதிக்குட்பட்டதே. அதற்கப்பால் நியதியில்லை.

684. பிசாசைப்பற்றிய அநேக கதைகளை ஒரு குழந்தையினிடம் சொல்லு; அது மாலையிலே தெருவில் செல்லட்டும். ஒரு அடிமரம் இருக்கிறது. குழந்தை என்னபார்க்கிறது? தன்னை விழுங்கவருவதற்குத் தயாராக நீட்டிய கைகளுடன்கூடிய ஒருபிசாசத்தையே. அந்தத் தெருவின் மூலையிலிருந்து ஒருவன் தன்னுடைய காதலியைச்சந்திக்க விரும்பி வருவ

தாக வைத்துக்கொள்வோம்; அவன் அந்த அடி மரத்தை அந்தப் பெண்ணைகப்பார்க்கிறான். தெருவின் மூலையிலிருந்து வருகின்ற ஒரு போலீஸ்காரன் அந்த அடிமரத்தை ஒரு திருடனைகப் பார்க்கிறான். திருடன் அதையொரு போலீஸ்காரனைகப் பார்க்கிறான். பற்பல விதங்களில் பார்க்கப்பட்டது ஒரே அடிமரம் தான்.

635. அந்த மாறுதலற்ற வஸ்துவை நீ வெளியிலேயிருந்து பார்க்கும்பொழுது, நீ அதைக் கடவுள் என்கிறாய்; நீ அதை யுள்ளேயிருந்து பார்க்கிற பொழுது, நீ அதை நீயேயென்கிறாய்.

636. ஈச்வரனே உனது பிம்பம், "ஈச்வரன் தன்னுடைய பிம்பத்தைப்போல மனிதனைச்செய்தார்." அது தப்பு. மனிதன் ஈச்வரனை தனது பிம்பத்தைப் போல செய்கிறான். அதுதான் சரி.

637. உனக்குப்புறம்பே உனக்கு உதவிகிடையாது; நீயே ஜகத்துக்குச் சிருஷ்டிகர்த்தா. பட்டுப் பூச்சியைப்போல நீ உன்னைச் சுற்றிலும் ஒரு கூண்டைக் கட்டிக்கொண்டிருக்கிறாய். உன்னைக்காப்பாற்றுபவர் யார்? உன்னுடைய கூண்டை உடைத்துக்கொண்டு அழகிய வண்ணாத்திப்பூச்சியாக, முக்தாத்மாவாக வெளியேவா; அப்பொழுது தான் நீ உண்மையைப் பார்ப்பாய்.

638. ஒருவன் பரிபூர்ணனாயிருந்தால், அவன் பிறரிலும் பரிபூர்ணத்துவத்தைப் பார்க்கிறான். அவன்

குறைவைப் பார்க்கிறபொழுது, அவனுடைய மனமே தான் அப்படி விசிரிம்பித்திருக்கிறது.

639. சூர்யனைப்பார்ப்பதற்குத் தீவர்த்தி வேண்டிய அவசியமில்லை. சூர்யனைப்பார்பதற்கு மெழுகுவர்த்தி கொளுத்த வேண்டியதில்லை. சூர்யன் உதயமானால் நாம் நாமாகவே அந்த விஷயத்தை அறிந்து கொள்கிறோம்; மனுஷ்யர்களின் ஆசாரியர் நமக்கு உதவிபுரியவருகிறபொழுது, ஆத்மாவானது தன்மீது சக்தியும் பிரகாசிக்க ஆரம்பித்து விட்டது என்பதை தானே அறிந்துகொண்டு விடுகிறது.

640. ஆத்மீகசக்தி செலுத்தப்படக்கூடிய ஒரே மார்க்கம் யாதெனில் அன்பேயாம்.

641. இந்த மனுஷ்ய அவதாரங்களின் மூலமாக அன்றி எவரும் ஈச்வரனை உண்மையில் தரிசிக்கமுடியாது.

642. இந்த ஆத்மாவானது "பலவீனர்களால் அடையமுடியாதது" என்று ச்ருதி சொல்கிறது. ஸ்தூலபலவீனம், மனோபலவீனம் இரண்டும் தான் இங்கே குறிப்பிடப்பட்டிருக்கின்றன. "பலமுள்ளவர்கள் திடமுள்ளவர்கள்," இவர்களே தகுந்த சிஷ்யர்கள். சிறிய, அற்ப, அழிந்த வஸ்துக்களால் என்ன செய்யமுடியும்? சரீரம் மனம் முதலியவற்றின் ரகஸ்யசக்திகள் யோகங்களில் ஏதேனும் ஒன்றின் அப்பியாசத்தினாலே சற்றேனும் எழுப்பப்பட்டுவிட்டால், அவை தூள் தூளாய் நறுங்கி

விடும். ஜயமடையக் கூடியவர்கள் பலமுள்ளவர்களே வாலிபர்களே, சுகசரீரமுள்ளவர்களே. ஆகையால், ஸ்தூலபலம் அவசியமாம். பலமுள்ள சரீரமே இந்திரியங்களை யடக்கச் செய்யும் முயற்சியினால் உண்டாகக்கூடிய எதிர்ச் செய்கையினாலுண்டாகும் நிலைச் சகிக்கக்கூடியது. பக்தனாக விரும்புகிறவன் பலமுள்ளவனா யிருக்கவேண்டும். சரீரசுகம் வாய்ந்தவனாயிருக்கவேண்டும். மிக மிகப் பலயீனமானவர்கள் யோகங்களில் எதையேனும் முயற்சி செய்தால் அவர்கள் ஏதேனும் தீராதநோய்க்கு உள்ளானாலும் ஆகலாம். அல்லது அவை அவர்களுடைய மனத்தைப் பலயீனப்படுத்துகின்றன.

643. உலகிலுள்ள ஸ்வயநலமெல்லாம் உண்டாக்குவது, நான் சரீரம் என்ற பயங்கரமான எண்ணமே. நம்முடைய சரீரமே நாம் என்று அதைக் காப்பாற்றி அதற்குச் சுகமளிக்க சாத்தியமான எல்லா விதங்களிலும் நாம் முயற்சிக்கவேண்டும்.

644. இந்த உலகில் மரணமென்று ஒன்று நிச்சயமாயிருக்கிறதினாலே, இந்தச் சரீரமானது ஒரு கெட்டகார்யத்தில் மரணமடைவதைவிட நல்ல கார்யத்தில் மரிப்பது மேன்மையேயாம்.

645. எவ்வளவுக் கெவ்வளவு நாம் கடவுளை யணுகுகிறோமோ அவ்வளவுக் கவ்வளவு அதிகமாக எல்லா வஸ்துக்களும் அவரிடத்தில் இருக்கின்றன வென்பதைப் பார்க்கிறோம்.

646. இந்தப் பரபக்தியானது மனிதனுடைய ஹிருதயத்துக்குள்ளே யொருதரம் உண்டாய்விட்டால், அவனுடைய மனமானது இடைவிடாமல் ஈச்வரனைப்பற்றியே நினைக்கும். வேறெதையும் நினைக்காது.

647. ஒரு பெரிய அரசன் ஒரு காட்டினுள் சென்று, அங்கே ஒரு மகாத்மாவைப் பார்த்தானென்று சொல்ல நாம கேட்டிருக்கிறோம். அவன் அந்த மகாத்மாவுடனே கொஞ்சம் பேசிப்பார்த்து, அவருடைய பரிசுத்தத்தன்மையையும் அறிவையும் கண்டு அதிகம் சந்தோஷப்பட்டான். பின்னர் அரசன் தன்னிடமிருந்து ஒரு வெகுமதி பெற்றுக் கொண்டு தன்னை கௌரவப்படுத்தும்படி அந்த மகாத்மாவை வேண்டிக் கொண்டான். அந்த மகாத்மா, "எனக்குக் காட்டிலுள்ள பழங்கள் போதுமான ஆகாரமாம்; மலைகளிலிருந்து கீழே விழுந்து ஓடுகின்ற பரிசுத்தமான சிற்றாறுகளிலுள்ள தண்ணீர் எனக்குத் தாகத்துக்குப் போதுமானது; மரவுரிகள் எனக்குப் போதுமான உடையை அளிக்கின்றன; மலைகளிலுள்ள வீடுகள் எனது வாசஸ்தானமாகின்றன. உன்னிடமிருந்தாவது அல்லது வேறெவரிடமிருந்தாவது நான் என் வெகுமதி பெற்றுக் கொள்ளவேண்டும்" என்று சொல்லி, அந்த வெகுமதியை 'வேண்டாமென்று மறுத்துவிட்டார். அரசன் "என்னைக்கிருதார்த்தனுக்குவதற்காகத் தயவு

செய்து என்னிடமிருந்து ஏதேனும் பெற்றுக் கொள்வது மன்றி, என்னூருக்கு வந்து எனது அரண்மனையைப் புனிதமாக்கவேண்டும்" என்றான். வெகு நேரம் வேண்டிக் கொண்டதன்மேல் அந்த மகாத்மா அரசனுடைய விருப்பப்படி சம்மதித்து அவனுடன் அவனுடைய அரண்மனைக்குச் சென்றார். அந்த மகாத்மாவுக்கு வெகுமதி கொடுப்பதற்கு முன், அரசன் தனது பிரார்த்தனைகளை முடித்துக் கொண்டு "ஈச்வரா, எனக்கு அதிகம் குழந்தைகளைக் கொடு; ஈச்வரா, எனக்கு அதிகம் ஐச்வர்யம் கொடு; ஈச்வரா, எனக்கு அதிகம் தேசம் கொடு; ஈச்வரா, எனது சரீரத்தின நல்ல சுகத்திலேவை." என்று கூறினன். அரசன் அவ்வாறு பிரார்த்தித்து முடிவதற்கு முன் அந்த மகாத்மா எழுந்திருந்து அந்த அறையிலிருந்து மெல்ல வெளியே போனார். இதைப்பார்த்து அரசன் மனம் குழம்பி அவரைப் பின் தொடர்ந்து சென்று "ஐயா, நீங்கள் போகிறீர்களே, நீங்கள் என்னுடைய வெகுமதியைப் பெற்றுக் கொள்ளவில்லையே" என்று கூவினன். அந்த மகாத்மா திரும்பிப்பார்த்து "நான் பிச்சைக்காரர்களிடம் பிச்சையேற்பதில்லை. நீ பிச்சைக்காரன் தானே; நீ எப்படி எதையேனும் எனக்குக் கொடுக்க முடியும்? உன் போன்ற பிச்சைக்காரனிடமிருந்து எதையேனும் பெற்றுக் கொள்ளலாமென்று நினைக்கும்படி நான் மூடனல்லன். நீ போ, என் பின்னே வாராதே"

என்று சொன்னார். வெறும் பிச்சைக்காரர்களுக்கும் ஈச்வரனுடைய உண்மை பக்தர்களுக்கும் உள்ள வித்தியாசம் நன்கு கொண்டுவரப் பட்டுள்ளது.

648. இரந்து கேட்டால், அன்பினுடைய பாஷையன்று.'

649. அன்பு எல்லாப் பயத்தையும் ஜயித்து விடுகிறது. நமது காதலுக்குரிய பொருள் நமக்கு மிக மிக உயர்ந்த லக்ஷியமாகிறவரையில், உண்மையான அன்பு ஒரு பொழுதும் உண்டாகிறதில்லை.

650. ஒவ்வொரு மனிதனுடைய மிக மிக உயர்ந்த லக்ஷியமே கடவுள் எனப்படுகிறது.

651. அதிகாரம் உண்டு என்ற எண்ணமானது அதனுடனே பயத்தை யளிக்கின்றது.

652. அன்பு தான் போய்ச் சேரவேண்டிய நியாயமான இடத்துக்குப் போய்ச் சேர வேண்டும். உண்மையின் அன்பாகிற அகண்ட சாகரமாம் அவனிடம் அது போய்ச் சேரவேண்டும்.

653. மனிதா, ஏ, மனிதா, நீ தெய்விக அன்பைப்பற்றிப் பேசுகிறாய்; அதே காலத்தில் இவ்வுலகத்து வினைத்தனங்கள் எல்லாவற்றையும் கவனிக்க வல்லனாயிருக்கிறாய்— நீ உண்மையா யிருக்கிறாயா? "ராமனுள்ள இடத்திலே காமத்துக்கு இடமில்லை,— காமமுள்ள இடத்திலே ராமனுக் கிடமில்லை. இவை யிரண்டும் ஒரு பொழுதும் சேர்ந்திருப்பதில்லை—

வெளிச்சமும் இருட்டும் போல, அவை ஒரு பொழுதும் சேர்ந்திரா."

654 உலகிலுள்ள கொஞ்சம் தாராளத்துவம், இன்னும் உலகிலுள்ள சொற்ப அநுதாபம்— மத நினைப்பு விஷயத்திலே— அநுபவத்திலே இங்குதான், ஆர்யர்களுடைய பூமியில் தான் உள்ளது, வேறெங்குமில்லை.

655. நாம் லௌகிக உலகத்தை எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாகக் கையாள்கிறோமோ அவ்வளவுக்கவ்வளவு, நாம் முன் உடைத்தாயிருந்த சொற்ப ஆத்மஞானமும் மறைந்துவிடுகிறது.

656. ஆத்மாவின் லக்ஷியம் முக்தியேயாம்.

657. எல்லா ஸ்வய நலத்தையும் கொன்றுவிட்டு ஞானத்தையும் அன்பு ஆகிற சக்தியையும் அடைந்து அவற்றையே பரப்புவதற்காக எவனொருவன் உயிர் வாழ்ந்து வேலை செய்கிறானோ அவனே பிராஹ்மணனானால் — ஒரு தேசமானது அத்தகைய பிராஹ்மணர்களாலேயே, ஆத்மஞானமும் நல்லொழுக்கமு முள்ளவர்களும் நல்லவர்களுமான புருஷர்களாலும் ஸ்திரீகளாலும் நிரம்பப் பெற்றிருந்தால் அந்தத் தேசமானது எல்லா சட்டத்துக்கும் அப்பாற்பட்டது என்று நினைப்பது ஆச்சர்யமா? அவர்களை யாள்வதற்கு எந்த போலீஸ், எந்த பட்டாளம் அவச்யம்? அவர்களை ஏன் எவரேனும் ஆளவேண்டும்? அவர்கள் ஏன் ஒரு அரசாக்ஷியின் கீழ்

இருக்கவேண்டும்? அவர்கள் நல்லவர்கள், உத்தமர்கள்: அவர்கள் ஈச்வர புருஷர்கள்.

658. தேசாபிமானிகளாயிருங்கள்; முற்காலத்திலே நமக்காக அத்தனை பெரிய விஷயங்களைச் செய்துள்ள ஜாதியை நேசியுங்கள். ஆ, நான் குறிப்புக்களை ஒத்திட்டுப் பார்க்கப் பார்க்க, நான் உங்களை யதிகமாக நேசிக்கிறேன். எனது தேசத்து சகோதர ஜனங்களே; நீங்கள் பரிசுத்தர்கள், நல்லவர்கள், அமைதியானவர்கள்.

659.. இந்தப் பூமியின் ஸ்தாபனங்களைப் பார்க்கிலும் சிறந்த நோக்கங்களையும் உத்தேசங்களையுமுடைய ஸ்தாபனங்கள் உலகில் வேறு எந்தத் தேசத்திலுமில்லையென்பதை எப்பொழுதும் ஞாபகப்படுத்திக் கொள்ளுங்கள். நான் உலகில் அநேகமாக ஒவ்வொரு தேசத்திலும் ஜாதிகளைப் பார்த்திருக்கிறேன்; அவற்றின் நோக்கமும் அமைப்பும் இங்குபோல வேறெங்குமே அவ்வளவு சிறந்தனவாக இல்லை. இவ்விதமாக, ஜாதியென்பது அவச்யம் இருந்து தீர வேண்டுமானல், பணத்திலாய ஒரு ஜாதியைப் பார்க்கிலும் பரிசுத்தம், வித்தை, தன்மறுப்பு இவையுள்ள ஒரு ஜாதியை நான் விரும்புவேன்.

660. இந்த (ஆசாரச் சீர்திருத்தச்) சபைகளில் சில நான் அவற்றில் சேரும் பொருட்டு என்னைப் பயமுறுத்த முயற்சிக்கின்றனவென்று கருதுகிறேன். அப்படி யவர்கள் முயற்சி செய்வது ஒரு ஆச்சர்ய

மான விஷயம். ஜீவிதத்தில் பதினைந்து வருஷங்கள் பசியை நேருக்கு நேர் எதிர்த்து நின்ற ஒரு மனிதன் மறுநாள் தனக்கு ஆகார மெங்கே கிடைக்குமென்றும் எங்கு உறங்குவ தென்றும் தெரிந்து கொள்ளாமலிருந்தவன் அவ்வளவு சுலபமாய்ப் பயமுறுத்தப்பட முடியாது. அநேகமாய் உடைகளே யில்லாதிருந்த ஒருவன் சீதோஷ்ண அளவு கருவியானது பூஜ்யத்துக்குக் கீழே 30 டிகிரி காட்டிய இடத்திலே வசிக்கத் துணிந்த மனிதன், அடுத்த ஆகாரம் எங்கிருந்து வருமென்று அறிந்து கொள்ளாமலிருந்த மனிதன் அவ்வளவு சுலபமாகப் பயமுறுத்தப்பட முடியாது. நான் அவர்களுக்குக் கூறுகின்ற முதலாவது விஷயம் இது தான்—எனக்குச் சொந்தமாக ஒரு சிறிய திடமனமுண்டு. எனக்குக் கொஞ்சம் அநுபவம் உண்டு. பயமில்லாமலும் பிற்காலத்தைப் பற்றிக் கவனியாமலும் நான் உலகுக்குக் கூறுவதற்கு ஒரு செய்தி இருக்கிறது. சீர்திருத்தக்காரர்கள் அனைவரையும் பார்க்கிலும் நான் பெரிய சீர்திருத்தக்காரனென்று நான் அவர்களிடம் கூறுவேன். அவர்கள் சிறு விஷயங்களையே சீர்திருத்த விரும்புகிறார்கள். நான் அடியுடன் சீர்திருத்தம் வேண்டுமென்கிறேன். நாங்கள் வித்தியாசப்படுவது உபாயத்திலேயே யாம். அவர்களுடையது அழிக்கும் உபாயம், என்னுடையது கட்டும் உபாயம். எனக்குச் சீர்திருத்தத்தில் நம்பிக்கை கிடையாது; நான் வளர்ச்சியில் நம்பு

கிறேன். நான் கடவுளுடைய ஸ்தானத்திலே என்னை வைத்துக்கொண்டு, "இந்த வழி தான் நீ போக வேண்டும்; அந்த வழி போகக்கூடாது" என்று நமது ஜனசமூகத்தை நோக்கிக் கூற நான் துணிய மாட்டேன். ராமர் அணை கட்டியபொழுது தன்னுலான சிறிய பாகமாம் ஒரு கை மண்ணையெடுத்து அவ்வணையில் போட்டுத் திருப்தியடைந்த அணிலைப் போல நான் இருக்க விரும்புகிறேன். அது தான் எனது நிலைமை. இந்த ஆச்சர்யமான ஸமுதாய யந்திரமானது எத்தனையோ யுகங்களாக வேலை செய்து வந்திருக்கிறது; ஸமுதாய வாழ்க்கையாகிற இந்த ஆச்சர்யமான நதி நம் முன்னே ஓடிக் கொண்டிருக்கிறது. அது நல்லதா? அது எப்படி இயங்கும் என்பதை எவர் அறிவார்? எவர் கூறத் துணிவார்? ஆயிரக் கணக்கான நிலைமைகள் அதைச்சுற்றிக் குழுமி, அதற்கு ஒரு விசேஷத் தூண்டுதலை யளித்து, அதை ஒரு சமயத்தில் மந்தமாகவும் இன்னொரு சமயத்தில் வேகமுள்ளதாகவும் ஆக்குகின்றன. எவர் அதன் சலனத்தை ஆக்ஞாபிடக் துணிவார்? கீதை கூறுகிறபடி நாம் பலன்களை எதிர்பாராதபடி வேலை செய்ய வேண்டியதே.

661. விக்கிரகாராதனை தப்பு என்று சொல்வது சாதாரணமாய்ப் போய்விட்டது; ஒவ்வொருவரும் அதை இப்பொழுது கேள்வி கேட்காமலே விழுங்கி விடுகிறார்கள். நான் ஒரு காலத்தில் அப்படி

நினைத்தேன்; அந்தக் குற்றத்துக்கு அபராதமாக, விக்கிரகங்களின் மூலமாகவே எல்லாவற்றையும் அநுபவத்திலறிந்த ஒருவருடைய பாதங்களினடியில் உட்கார்ந்து எனது பாடத்தை நான் கற்றுக்கொள்ள வேண்டி வந்தது; நான் ராமகிருஷ்ண பரமஹம்சரைக் குறிப்பிடுகிறேன். அத்தகைய ராமகிருஷ்ண பரமஹம்சர்கள் விக்கிரகாராதனையினால் உற்பத்தி செய்யப்படுவார்களானால், உங்களுக்கு என்ன வேண்டும் — சீர்திருத்தக்காரனுடைய கோட்பாடா? அல்லது எத்தனை விக்கிரகங்கள் வேண்டுமோ அத்தனையுமா? எனக்கு ஒரு மறுமொழி வேண்டும். விக்கிராராதனையின் மூலமாக ராமகிருஷ்ண பரமஹம்சர்களை உற்பத்தி செய்ய முடியுமானால், ஓராயிரம் விக்கிரகங்களை யெடுத்துக் கொள்ளுங்கள்; கடவுள் உங்களை யநுக்கிரகிப்பாராக; உங்களால் முடிந்த எந்த விதத்திலும் அத்தகைய சிறந்த லக்ஷணங்களை யுற்பத்தி செய்யுங்கள்.

662. பையன்காள்! சென்னைக்கு வெளியே ஒருபொழுதும் சென்றிராத, மீசை முளைத்த குழந்தைகாள்! நீங்கள் எழுந்து நின்று, தங்கள் பின்புறத்தே ஆயிரக்கணக்கான பழம் பெருமைகளையுடைய முப்பத்துகோடி ஜனங்களுக்கு நீதிகளைப் போதிக்க விரும்புகிறீர்கள்; உங்களுக்கு வெட்கமில்லையா? அத்தகைய ஈச்வர நிபந்தனையினின்றும் பின் வாங்கி நில்லுங்கள். முதலில் உங்கள் பாடங்க

ளைக் கற்றுக்கொள்ளுங்கள்! மரியாதையற்ற பையன்கள், காகிதத்தில் ஒரு சில வரிகள் நீங்கள் எழுதி, உங்களுக்காக அவற்றை எவனாவது ஒரு மூடனைக் கொண்டு பிரசுரிக்கும்படி செய்ய உங்களால் முடியும் ஆதலினால் நீங்கள் உலகத்துக் கல்வி யளிப்பவர்கள் என்று நினைத்துக்கொண்டிருக்கிறீர்கள்! நீங்களே இந்தியாவின் பொதுஜன அபிப்பிராயம் என்று நினைத்துக்கொண்டிருக்கிறீர்கள்! அப்படியா?

663. நான் ஆசாரச் சீர்திருத்தக்காரர்களிடத்து மிக மிக அதிக மரியாதையும் அன்பும் வைத்திருக்கிறேன், என்று முன்னே ஆசாரச் சீர்திருத்தக்காரர்களுக்கு நான் சொல்ல வேண்டியிருக்கிறது. அவர்களுடைய பெரிய இருதயங்களுக்காகவும் அவர்களுக்குத் தங்களுடைய தேசத்தின்மீதும் எளியவர்களிடத்தும் தாழ்ந்தவர்களிடத்தும் உள்ள அன்புக்காகவும் நான் அவர்களை நேசிக்கிறேன். ஆனால் நான் சகோதர வாத்ஸல்யத்துடனே அவர்களுக்குச் சொல்லவிரும்புவது யாதெனில், அவர்கள் அநுசரிக்கும் உபாயம் சரியானதன்று; அது நூறு வருஷங்களாக முயன்று பார்த்தாய்விட்டது. அது தவறிவிட்டது. நாம் ஏதேனும் புதிய உபாயத்தை முயற்சிப்போம். இந்தியாவிலே எப்பொழுதாவது சீர்திருத்தக்காரர்கள் இல்லாமலிருந்தனரா? இந்திய தேச சரித்திரம் நீங்கள் வாசிக்கிறீர்களா? ராமாநுஜர் யார்? சங்கரர் யார்? நானகர் யார்?

சைதன்யர் யார்? கபீர் யார்; தாது யார்? ஒருவர் பின் ஒருவராக முதற்றரம் வாய்ந்த நக்ஷத்திரங்களின் ஒரு கூட்டம் போல வந்த இப்பெரிய ஆசார்யர்களெல்லோரும் யார்? ராமாநுஜர் தாழ்ந்த வகுப்பினருக்காக இரங்கவில்லையா? பறையனும் தம்முடைய வகுப்பில் சேர்த்துக் கொள்வதற்கு அவர் ஆயுள் முழுதும் முயற்சிக்கவில்லையா? நானக் ஹிந்துக்களுடனும் மகம்மதியர்களுடனும் கலந்து ஆலோசனை செய்து, ஒரு புதிய ஸ்திதியை உண்டுபண்ண முயற்சிக்க வில்லையா? அவர்களெல்லோரும் முயற்சித்தார்கள், அவர்களுடைய வேலை இன்னும் நடைபெற்று வருகிறது. வித்தியாசம் இதுதான். அவர்களிடம் இன்றைய சீர்திருத்தக்காரர்களுடைய ஆடம்பரம் இல்லை; இக்காலத்து சீர்திருத்தக்காரர்களுக்கு இருக்கிறது போல, அவர்களுடைய உதடுகளிலே சாபங்கள் இல்லை.

664. தானங்களிலே ஞானதானமே மிக மிக சிரேஷ்டமானது; லௌகிக அறிவை யளிப்பது அடுத்ததாய் அடுத்தது ஜீவதானமாம்; நான்காவது அன்னதானமாம். இந்த ஆச்சர்யமான, தர்ம குணமுள்ள ஜாதியாரைப் பாருங்கள்; இந்த எளிய தேசத்திலே செய்யப்படுகின்ற தானத்தின் அளவை கவனியுங்கள்; மனிதன் வடக்கேயிருந்து தெற்குவரையில், பூமியிலுள்ள மிக மிக சிரேஷ்டமானதை யெல்லாம் உடைத்தாகி, நண்பனைப்போல எல்லோராலும் எப

பொழுதும் நடத்தப்பட்டு யாத்திரை செய்யக்கூடிய தும் எங்கேனும் கொஞ்சம் ஆகார முள்ளவரையில் பிச்சைக்காரன் பட்டினி கிடக்காததுமான இந்தத் தேசத்து உபசாரத்தைப் பாருங்கள்.

665. ஆங்கிலேயனுக்கும் உங்களுக்கும் உள்ள வித்தியாசத்தை யுண்டுபண்ணுவது யாது? அவர் அவர்கள் தங்கள் மதத்தையும் கடமையையும் மற்ற வற்றையும் பற்றிப் பேசட்டும். நான் வித்தியாசத் தைக் கண்டுவிட்டேன். ஆங்கிலேயன் தன்னிடத்தில் தானே நம்பிக்கையுள்ளவனாயிருக்கிறான், உங்களி டத்தில் அந்த தன்னம்பிக்கையில்லை, இங்குதான் வித்தியாசமுள்ளது. அவன் தான் ஆங்கிலேயனாயிருத் தலில் நம்பிக்கை கொள்கிறான், தான் எதையும் செய்ய முடியுமென்று அவன் நம்புகிறான். அது அவனுள் உள்ள கடவுளை வெளியே கொண்டுவருகி றது; அவன் இஷ்டப்படுகின்ற எதையும் அவனால் செய்ய முடியும். உங்களால் ஒன்றும் செய்ய முடியா தென்றும் போதிக்கப்பட்டும் சொல்லப்பட்டும் வந் திருக்கிறீர்கள், நீங்கள் தினந்தோறும் "அநாம தேயப் பேர்வழி"களாய்க்கொண்டு வருகிறீர்கள். நமக்கு வேண்டியது பலம், ஆகையால் உங்களில் நீங்களே நம்பிக்கை வைத்துக் கொள்ளுங்கள். நாம் பலஹீனர்களாய் விட்டோம்; இந்த அற்ப விஷயங் களாகிய இந்த ரகஸ்ய ஜாலங்கள் அதனால் தான் உண்டாகின்றன. அவற்றில் பெரிய உண்மைகள் இருக்

கலாம். ஆனல் அவை நம்மை அநேகமாக அழித்து விட்டன. உங்களுடைய நரம்புகளைப் பலமுள்ளவை யாக்கிக்கொள்ளுங்கள். நமக்கு வேண்டியது, இரும்புச் சதைகளும் எஃகு நரம்புகளுமாம். நாம் போதுமானபடி நீண்டகாலம் அழுதுவிட்டோம். இனிமேல் அழுதல் இல்லை, ஆனல் உங்களுடைய பாதங்களிலே எழுந்து நின்று, மனிதர்களாகுங்கள். நமக்குவேண்டியது மனிதனையுண்டுபண்ணும் மதமே. நமக்குவேண்டியது மனிதனையுண்டுபண்ணும் கொள்கைகளே. நமக்கு வேண்டியது எல்லா விதத்திலும் மனிதனை யுண்டுபண்ணும் கல்வியே. இதோ உண்மைக்குச் சோதனையிருக்கிறது. சரீர விஷயத்திலாகட்டும், புத்தி விஷயத்திலாகட்டும், ஞான விஷயத்திலாகட்டும் உங்களை பலவீனப்படுத்துகின்றவைகளையும், விஷம்போல நீக்கிவிடுங்கள்; அதில் உயிர் இல்லை; அது உண்மையாயிருக்க முடியாது.

666. தேசாபிமானத்தைப் பற்றிப் பேசுகிறார்கள். எனக்குத் தேசாபிமானத்திலே நம்பிக்கையுண்டு. எனக்கும் தேசாபிமானம் என்று எனது சொந்த லக்ஷியம் ஒன்று உண்டு. பெருங் கார்யங்களில் சித்திபெறுதற்கு மூன்று விஷயங்கள் அவச்யமாம். முதலாவது ஹிருதயத்திலிருந்து இரங்குங்கள். புத்தியிலாவது அல்லது யுத்தியிலாவது யாது உள்ளது? அது கொஞ்சதூரம்சென்று நின்றுவிடுகிறது. ஆனல் ஹிருதயத்தின் மூலமாக அருள்

உண்டாகின்றது. அன்பு மிக மிக அசாத்தியமான கதவுகளையும் திறந்து விடுகிறது. பிரபஞ்ச ரகஸ்யங்களுக்கெல்லாம் அன்பே வாசலாயிருக்கின்றது. ஆகையால், சீர்திருத்தக்காரர்களாக விரும்புவோர்களே, தேசாபிமானிகளாக விரும்புபவர்களே, இரங்குங்கள். நீங்கள் இரங்குகிறீர்களா? தேவர்களினதும் ரிஷிகளினதும் சந்ததியார்களில் லக்ஷக்கணக்கானவர்கள் மிருகங்களுக்கு அண்டை வீட்டுக்காரர்களாயிருக்கிறார்களென்பதை நீங்கள் உணர்கிறீர்களா? லக்ஷக்கணக்கானவர்கள் இன்று பட்டினி கிடக்கிறார்களென்பதையும் லக்ஷக் கணக்கானவர்கள் எல்லையற்ற காலமாகப் பட்டினி கிடக்கிறார்களென்பதையும் நீங்கள் உணர்கிறீர்களா? அஞ்ஞானமானது பூமியிலே திரண்ட மேகம்போல வந்து கவிந்துகொண்டிருக்கின்றது என்பதை யுணர்கிறீர்களா? அது உங்களை யமைதியற்றவர்களாகச் செய்கிறதா? அது உங்களை யுறக்கமற்றவர்களாகச் செய்கிறதா? அது உங்களுடைய ரத்தத்தினுள்ளே சென்று, உங்களுடைய நரம்புகளின் மூலமாக ஓடி, உங்களுடைய ஹிருதயத் துடிப்புகளுடன் ஒன்றாய் விட்டதா? அது உங்களை அநேகமாகப் பைத்தியம் பிடித்தவர்களாக்கி விட்டதா? அழிந்து போய்விட்டதேயென்று துக்கமாகிய அந்த ஒரே எண்ணம் உங்களைப் பிடித்திருக்கிறதா? உங்களுடைய பெயரைப்பற்றி, உங்களுடைய கீர்த்தியைப்பற்றி, உங்களு

டைய மனைவிகளைப்பற்றி, உங்களுடைய குழந்தைகளைப்பற்றி, உங்களுடைய சொத்தைப்பற்றி, உங்களுடைய சொந்த சரீரங்களைப்பற்றிக் கூட நீங்கள் எல்லாவற்றையும் மறந்து விட்டீர்களா? அப்படி செய்து விட்டீர்களா? தேசாபிமானி யாவதற்கு அதுதான் முதலாவது படி.

667. அப்படியானால், நீ உணரலாம்; ஆனால் வெறுமை பேச்சிலே உங்களுடைய சக்திகளை செலவழிப்பதற்குப் பதிலாக, அவர்களை உயிருடன் கூடிய இந்த மரணத்திலிருந்து வெளியே கொண்டு வருவதற்கு, அவர்களுடைய துக்கங்களை யாற்றுவதற்கு ஏதேனும் நிவிருத்தி, ஏதேனும் அநுபவ சாத்தியமான தீர்மானம், கண்டனத்துக்குப் பதிலாக ஏதேனும் உதவி, சில இனிய வார்த்தைகள் கண்டு பிடித்திருக்கிறீர்களா? இன்னும் அவ்வளவும் போதாது. பர்வதம்போன்ற இடையூறுகளையும் தாண்டக் கூடிய திடசித்தம் உங்களுக்கு இருக்கிறதா? உலகு முழுதும் கத்தியை உருவிக்கொண்டு உங்களுக்கு விரோதமாக நின்றால், அப்பொழுதும் நீங்கள் எதைச் சரியென்று நினைக்கிறீர்களோ அதையே செய்யத் துணிவீர்களா? உங்களுடைய மனைவிகளும் குழந்தைகளும் உங்களுக்கு விரோதமாக இருந்தால், உங்களுடைய பணமெல்லாம் போய்விட்டால், உங்களுடைய பெயர் அழிந்துவிட்டால், உங்களுடைய ஐச்வர்யம் மறைந்துவிட்டால், அப்பொழுதும் நீங்கள் அதைப்

பற்றி நிற்பீர்களா? நீங்கள் அப்பொழுதும் இடைவிடாது உங்களுடைய லக்ஷியத்தை நோக்கிச் செல்வீர்களா? பர்த்ருஹரியாசர் கூறுகிறது போல— "மகாத்மாக்கள் குற்றம் கூறட்டும் அல்லது புகழட்டும்; லக்ஷ்மி விரட்டும் அல்லது அவளுக்கு இஷ்டமுள்ள இடத்துக்குச் செல்லட்டும்; மரணம் இன்று வரட்டும் அல்லது நூறு வருஷங்களில் வரட்டும்; சத்திய மார்க்கத்தினின்றும் ஒரு அங்குலமாவது அசையாதவனே உண்மையில் உறுதியான புருஷன்" அந்த உறுதி உங்களிடம் இருக்கிறதா? இந்த மூன்று விஷயங்களும் உங்களிடமிருந்தால், உங்களில் ஒவ்வொருவரும் சித்திகள் செய்வீர்கள். நீங்கள் சமாச்சாரப் பத்திரிகைகளிலே எழுதவேண்டிய அவசியமில்லை; நீங்கள் பிரசங்கம் செய்துகொண்டு செல்லவேண்டிய அவசியமில்லை; உங்களுடைய முகமே ஒளி வீசும். நீங்கள் ஒரு குகையிலே வசித்தால், உங்களுடைய நினைப்புக்கள் பாறைச் சுவர்களினூடே கூட ஊடுருவிச் சென்று நூற்றுக் கணக்கான வருஷங்கள், அல்லது, ஏதேனும் ஒரு மூளையில் சென்று பற்றிக்கொண்டு வேலை செய்யும்வரையில் உலகு முழுதும் சலித்துக்கொண்டே செல்லும். நினைப்பு, உண்மை, கார்ய பரிசுத்தம் முதலியவற்றின் சக்தி அத்தகையது.

668. புத்தி பெரியதுதான், ஆனால் அது சில எல்லைகளுக்குள்ளே நின்று விடுகிறது. ஹிருதயத்

தின் மூலமாகவே, ஹிருதயம் ஒன்றின் மூலமாகவே அருள் உண்டாகிறது. உணர்ச்சிகளின் மூலமாகவே மிக மிக உயர்ந்த ரகஸ்யங்கள் அடையப்படுகின்றன.

669. முன்னரே எல்லாம் நமக்கு முன் திறக்கப் படுகிறது. தைர்யமாயிருங்கள், பயப்படாதீர்கள், ஈச்வரனுக்கு அபி அபி என்றுள்ள இந்த லக்ஷணம் நமது சாஸ்திரங்களிலேயே கொடுக்கப்பட்டுள்ளது. நாம் அபி, பயமற்றவர்களாக வேண்டும். நமது வேலை செய்யப்பட்டு விடும். எழுந்திருங்கள், விழித்துக்கொள்ளுங்கள், ஏனெனில் உங்களுடைய தேசத்துக்கு இந்த அபாரமான தியாகம் வேண்டியிருக்கிறது, வாலிபர்களே அதைச் செய்வார்கள். "வாலிபர்கள், சக்தியுள்ளவர்கள், பலமுள்ளவர்கள், நல்ல சரீரக்கட்டுடையவர்கள், புத்திசாலிகள்," அவர்களுக்கே வேலை. கல்கத்தாவிலே நூற்றுக்கணக்காக, ஆயிரக்கணக்காக அத்தகைய வாலிபர்கள் இருக்கிறார்கள். நீங்கள் சொல்கிறபடி நான் ஏதேனும் செய்திருந்தால், கல்கத்தா தெருக்களில் ஒன்றுக்கும் உதவாமல், விளையாடிக்கொண்டிருந்த அந்தப்பையன் தான் நான் என்பதை ஞாபகப்படுத்திக் கொள்ளுங்கள். நான் அவ்வளவு செய்திருந்தால், நீங்கள் எவ்வளவு அதிகம் செய்வீர்கள்?

670. இது (பாஞ்சாலம்) தான் பரிசுத்தமான ஆர்யாவர்த்தத்திலேகூட மிக மிகப் பரிசுத்தமானதென்று கருதப்படுகின்ற பூமி; நமது பெரியோரா

கிய மனு கூறுகின்ற பிரஹ்மாவர்த்தம் இதுதான். வருங்காலங்களிலே, சரித்திரம் நிரூபிக்கிறபடி உலகத்தை முழுகடிக்கவிருந்த ஆத்மாவைப்பற்றிய அந்தப் பிரமாண்டமான ஆசை எங்கிருந்து உண்டானதென்றால் இந்தப் பூமியிலிருந்து தான். இந்தப் பூமியிலேதான், அதன் பிரமாண்டமான நதிகளைப்போல, ஞான ஆசைகள் கிளம்பி வலிமைபெற்று, கடைசியாக உலகு முழுதும் சுற்றி இடி முழக்கத்துடனே கோஷித்தன. முதலாவது இந்தியாவுக்குள் வந்த படையெடுப்புக்களும் அக்கிரமப் பிரவேசங்களும் ஆகிய எல்லாவற்றையும் சகிக்கவேண்டி வந்த பூமி இதுதான். எவ்வளவு கஷ்டங்கட்குட்பட்டும், தன்னுடைய பெருமையையும் பலத்தையும் இன்னும் இழக்காதிருக்கும் பூமி இதுதான். இங்குதான் பிற்காலங்களிலே அமைதியான நாநாக் தாம் உலகினிடம் வைத்திருந்த அற்புதமான அன்பை போதித்தது. இங்குதான் அவருடைய அகன்ற ஹிருதயம் திறந்து, ஹிந்துக்களை மாத்திரம் அன்று, மகம்மதியர்களையும் சேர்த்து உலகுமுழுதும் அவருடைய கைகள் நீட்டப்பட்டன. இங்குதான், நமது ஜாதியில் கடைசியானவர்களுள் ஒருவரும் மிக மிகப் பெருமைபெற்றவர்களுள் ஒருவருமான குரு கோவிந்தஸிங் மதத்தின்பொருட்டுத் தமது ரத்தத்தையும் தமது அரியவர்களுடையவும் நெருங்கியவர்களுடையவும் ரத்தத்தையும் சிந்தியபின், இந்த ரத்தம் எவருக்காக சிந்தப்பட்

டதோ அவர்களாலேயே கைவிடப்பட்டுங்கூட ஹிரு தயத்திலடிபட்டுக் காயமடைந்த சிங்கம்போன்று தெற்கேசென்று, தயது தேசத்துக்கு விரோதமாக ஒருவார்த்தையும் சொல்லாமல், ஒருவார்த்தைகூட முணுமுணுக்காமல் மறைந்துவிட்டார்.

671. அறிவென்பது வேற்றுமையின் மத்தியில் ஒற்றுமையைக் கண்டு பிடித்தலைத்தவிர, வேறொன்று மில்லை.

672. இது (ஹிமோத்கிரி) தான் நமது முன் னோர்களின் சொப்பனபூமி; அதிலேதான் இந்தியா வின் தாயாகிய பார்வதி பிறந்தாள். இந்தியாவிலே புள்ள ஒவ்வொரு முமுட்சுவும் தனது ஜீவிதத்தின் அந்திய காலத்திலே வந்து தன்னுடைய உலக நடத் தையின் கடைசி அத்தியாயத்தை முடிக்க விரும்பு கின்ற பரிசுத்தபூமி இதுதான். இந்தப் புண்ணிய பூமியி லுள்ள மலைகளின் சிகரங்களிலே, அதன் குகைகளி னுள்ளே, வேகமாக ஓடும் அதனுடைய நதிகளின் தீரங்களிலே, மிகமிக அற்புதமான நினைப்புக்கள் நினைக்கப்பட்டிருக்கின்றன. அவற்றுள் ஒரு சிறு பகுதியே அந்நியர்களிடத்திலிருந்தும் கூட அவ்வளவு புகழையடைந்திருக்கிறது. ஒப்புவமை யில்லாத தென்று மிகமிகப் பெரிய தங்கோர்களால் சொல்லப் பட்டிருக்கிறது. எனது குழந்தைப் பருவத்தி லிருந்தே எனது வாழ்நாளைக் கழிப்பதற்கு நான் கனவு கண்டு கொண்டிருந்த பூமி இதுதான்; நீங்கள்

எல்லோரும் அறிவீர்கள், நான் அடிக்கடி இங்கு வசிக்க முயற்சித்திருக்கிறேன்; காலம் பக்குவ படையவில்லை யாயினும், எனக்குச் செய்வதற்கு வேலையிருந்ததினாலே இந்தப் பரிசுத்த ஸ்தலத்துக்கு வெளியே அடித்துக்கொண்டு போகப்பட்டேனாயினும், ரிஷிகள் வாழ்ந்த, தத்துவஞானம் பிறந்த இந்த பர்வதபிராவில் எங்காவது எனது நாட்களை முடிக்க வேண்டுமென்பது எனது ஜீவிதத்தின் நம்பிக்கையாயிருக்கிறது.

673. ரிஷியென்றால் என்ன? பரிசுத்தர் என்பதே. முதலில் பரிசுத்தமா யிருங்கள், உங்களுக்கு சக்தியுண்டாகும்.

674. இக்காலத்திலே ஜாதிகளுக்குள்ளே இவ்வளவு விவாதம் நடைபெறுவது பற்றி நான் விசனிக்கிறேன். இது நிற்கவேண்டும். இரண்டு பக்கங்களிலும், முக்கியமாக உயர்ந்த ஜாதியாகிய பிராஹ்மணன் பக்கத்திலே அது பயனற்றதாம். ஏனெனில், இந்தப் பாத்தியதைகளுக்கும் தனி யுரிமைகளுக்கும் உள்ள நாள் போய்விட்டது. ஒவ்வொரு ஆடம்பர வகுப்பினருடைய கடமைதானே தன்னுடைய சவக் குழியைத் தோண்டிக் கொள்ளுதலாம்; எவ்வளவுக் கெவ்வளவு சீக்கிரத்தில் அது அப்படி செய்து கொள்கிறதோ அவ்வளவுக்கவ்வளவு நன்மையே. எவ்வளவுக்கெவ்வளவு தாமதிக்கின்றதோ அவ்வளவுக்கவ்வளவு அது அழுகும். அவ்வளவுக் கவ்வளவு துர்

மரண மடையும். ஆகையால் இந்தியாவிலுள்ள மனுஷ்யவர்க்கத்திலுள்ள ஏனையோருடைய மோக்ஷத்துக்காக் வேலை செய்ய வேண்டியது பிராஹ்மணனுடைய கடமையாகும். அவன் அப்படி செய்வானுல், அவன் அப்படி செய்கிறவரையிலும் அவன் பிராஹ்மணனே. ஆனுல் அவன் பணம் சம்பாதிக்கப் புறப்பட்டானுல் அவன் பிராஹ்மணனல்லன். ஆனுல் நீங்கள் யோக்கியதையுடைய சரியான பிராஹ்மணனுக்கே உதவி புரிய வேண்டும். அது மோக்ஷத்துக்கு இட்டுச் செல்கிறது. ஆனுல் சில சமயங்களில் யோக்கியதையில்லாத ஒருவனுக்குக் கொடுக்கும் தானமானது மற்ற இடத்துக்கு இட்டுச் செல்கிறதென்று நமது சாஸ்திரம் கூறுகின்றது. நீங்கள் அந்த விஷயத்தில் ஜாக்கிரதையா யிருக்கவேண்டும். உலகத்தொழில் ஒன்றும் இல்லாதவனே பிராஹ்மணன். உலகத்தொழில் பிராஹ்மணனுக்கல்ல. ஆனுல் மற்ற ஜாதியார்களுக்காம். நான் பிராஹ்மணர்களிடம் விண்ணப்பித்துக்கொள்கிறேன்; அவர்கள் தங்களுக்குத் தெரிந்ததை இந்திய ஜனங்களுக்குப் போதித்து, தாங்கள் எத்தனையோ நூற்றுண்டுகளாகச் சேர்த்து வைத்திருக்கும் வித்தையை வெளியே விட்டு அவர்களை உயர்த்துவதற்குக் கஷ்டப்பட்டு வேலை செய்யவேண்டும். உண்மையான பிராஹ்மணத்தன்மை இன்னதென்று ஞாபகப்படுத்திக் கொள்வது தெளிவாய் இந்தியாவிலுள்ள பிராஹ்

மணர்களின் கடமையேயாகும். இந்த உரிமைகளும் கௌரவங்களும் பிராஹ்மணனுக்குக் கொடுக்கப்பட்டது. ஏனெனில், "அவனிடத்திலே தான் புண்ணியமாகிற சொத்து உள்ளது" என்று மனு கூறுகிறார். அவன் அந்த சஜ்ஞானத்தைத் திறந்து, அதிலுள்ள சொத்துக்களை யுலகுக்குப் பகிர்ந்து கொடுக்கவேண்டும். இந்திய ஜாதிகளுக்கு முதன்முதலில் உபதேசித்தவன் அவனேயென்பது உண்மையே. ஜீவிதத்தின் உயர்ந்த அநுபூதியை யடையும் பொருட்டு எல்லாவற்றையும் முதலில் தியாகம் செய்தவன் அவனே. மற்ற ஜாதிகளினும் அவன் முன்னேறினன் என்பது அவனுடைய குற்றமல்ல. மற்ற ஜாதிகள் ஏன் அப்படியறிந்து கொண்டு, அவர்கள் செய்தது போல செய்யவில்லை? அவர்கள் ஏன் உட்கார்ந்து சோம்பேரியாயிருந்துகொண்டு பிராஹ்மணர்களை பந்தயத்தில் ஜயிக்கும்படி விடவேண்டும்? ஆனால், நன்மையடைவது ஒரு விஷயம். அதைத் தீமைக்கு உபயோகப்படுத்துவது இன்னொரு விஷயம். சக்தியானது எப்பொழுதேனும் தீமைக்கு உபயோகப்படுத்தப் பட்டால், அது பயங்கரமாய் விடுகிறது; அது நன்மைக்கே உபயோகப்படுத்தப்பட வேண்டும். ஆகையால் பிராஹ்மணன் தர்மகர்த்தாவாயிருந்து வந்ததும் எண்ணற்ற காலமாகச் சேர்த்து வைக்கப்பட்டதுமான இந்த வித்தையை அவன் இப்பொழுது பொது ஜனங்களுக்குக் கொடுக்கவேண்டும். அவன்

பொது ஜனங்களுக்குக் கொடுக்காததினாலே தான் மகம்மதியர்களுடைய படையெடுப்பு சாத்தியமாயிற்று. அவன் ஆதியிலிருந்து பொது ஜனங்களுக்கு இந்த ஐச்வர்யத்தைத் திறந்து கொடுக்காததினால் தான் ஓராயிரம் வருஷங்களாக இந்தியாவுக்கு வரப்பிரியப்படுகிற ஒவ்வொருவருடைய கால்களின் கீழேபோட்டு மிதிக்கப்படுகிறோம்; அதனால் தான் நாம் இழிவையடைந்து விட்டோம். நமது முன்னோர்கள் சேர்த்து வைத்த அற்புதமான ஐச்வர்யங்களை ஒளித்து வைத்திருக்கின்ற அறைகளையுடைத்தை திறந்து விடவேண்டியதே முதலாவது வேலையாயிருக்க வேண்டும்; அவற்றை வெளியே கொண்டு வாருங்கள், அவற்றையொவ்வொருவருக்கும் கொடுங்கள்; பிராஹ்மணன் தான் அதை முதலில் செய்ய வேண்டும்.

675. ஆகாரத்தைப்பற்றிய கேள்வியானது பக்தர்களுக்கு எப்பொழுது மிக மிகப் பிராணாதாரம் போன்றவற்றுள் ஒன்றாயிருந்து வருகிறது. சில பக்தி வகுப்பினர் அளவுக்குமிஞ்சி இதையே கொண்டாடுகிறார்கள் என்பது ஒருபுறமிருக்க, ஆகாரத்தைப்பற்றிய இந்தக் கேள்வியின் கீழே ஒரு பெரிய உண்மையிருக்கிறது.

676. மனம் ஆகிற சூட்சுமசரீரம் எனப்படுவதை அடக்கிக்கையாளுதல் மாம்சமாகிற ஸ்தூல சரீரத்தை யடக்கியாளுதலைப் பார்க்கிலும் உயர்ந்த

தொழிலாம். ஆனால் ஒருவன் சூக்ஷ்ம சரீரத்தை யடக்க வல்லவனாக வேண்டுமானால், ஸ்தூல சரீர அடக்கம் அவச்யமாகிறது. ஆகையினால், சிஷ்யன் தன்னுடைய குருபரம்பரையிலே ஆக்ஞாபிக்கப் பட்டுவருகிற ஆசாரவிதிகள் எல்லாவற்றிலும் ஜாக்கிரதையாய் கவனம் செலுத்தவேண்டும்.

677. எவருடைய சரீரங்கள் பரோபகாரத்தில் ஈடுபட்டு அழிகின்றனவோ அவர்கள் பாக்கியவான்கள்.

678. உபநிஷத்துக்கள் என்னிடம் ஒவ்வொரு பக்கத்திலிருந்தும் பேசுகிறது யாதெனில், பலம், பலம் என்பதுதான். ஞாபகப்படுத்திக்கொள்வதற்கு இது ஒரு பெரிய விஷயம்; அது எனது ஜீவிதத்தில் நான் போதிக்கப்பட்டுள்ள ஒரு பெரிய பாடமாயிருந்திருக்கிறது; அது கூறுகிறது யாதெனில், பலம், பலம், ஏ, மனிதா, பலஹீனனாயிராதே. மனுஷ்ய பலஹீனங்கள் இல்லையா? என்று மனிதன் கேட்கிறான். உண்டு உண்டு என்று உபநிஷத்துக்கள் கூறுகின்றன; ஆனால் இன்னும் அதிகபலஹீனம் அவற்றை சொஸ்தப்படுத்துமா? அழுக்கையழுக்கால் கழுவ நீ முயற்சிப்பாயா? பாபம் பாபத்தை சொஸ்தப்படுத்துமா? பலஹீனம் பலஹீனத்தை சொஸ்தப்படுத்துமா? ஏ, மனிதா, பலம், பலம் என்று உபநிஷத்துக்கள் கூறுகின்றன; எழுந்து நின்று பலவானாயிரு; உலகிலேயே "அபி," "பயமில்லை" என்ற

வார்த்தை யடிக்கடி உபயோகப்படுத்தப்பட்டிருக்கிற பாஷை அது ஒன்றுதான்; உலகிலேயுள்ள வேறெந்த சாஸ்திரத்திலும் "அபி" "பயமில்லை" என்ற இந்த லக்ஷணம் கடவுளுக்காவது மனிதனுக்காவது கொடுக்கப்படவில்லை.

679. மகா அலெக்ஸாண்டெர் என்ற மேனாட்டுச் சக்கரவர்த்தியினுடைய தோற்றம் எனது மனத்திலே முற்கால சரித்திரத்திலிருந்து உண்டாகிறது; ஒருபடத்தில் பார்ப்பதுபோல அந்தப் பெரிய அரசன் ஸிந்து நதிக்கரையிலே நின்றுகொண்டு, காட்டிலுள்ள நமது சந்யாசிகளுள் ஒருவருடன் பேசிக்கொண்டிருக்கிறான்; அவன் பேசிக்கொண்டிருந்த அந்தக் கிழவர் நிர்வாணமாயிருக்கிறார், ஒரு பாறையின்மீது உட்கார்ந்துகொண்டிருக்கிறார்; சக்கரவர்த்தி அவருடைய ஞானத்தைக் கண்டு ஆச்சர்யப்பட்டு, அவரை க்ரீஸ் தேசத்துக்கு வரும்படி தூண்டுவதற்காக, வேண்டிய பொன்கொடுத்து அவரை கௌரவிப்பதாகக் கூறுகிறான். இவர் அவனுடைய பொன்னைக்குறித்துப் புன்னகை புரிகிறார், அவனுடைய தூண்டுதல்களைக் குறித்துப் புன்னகை புரிகிறார், மறுத்துவிடுகிறார்; பின்னர் அந்தச் சக்கரவர்த்தி, சக்கரவர்த்தியினுடைய அதிகாரம் வகித்து "நீ வராவிட்டால் நான் உன்னைக்கொல்வேன்" என்று கூறுகிறான்; அவர் கடகடவென்று சிரித்து கூறுகிறதாவது, "நீ இப்பொழுது கூறுகிறதுபோல உனது

ஜீவிதகாலத்தில் அத்தகைய பொய்யை நீ யொரு பொழுதும் சொன்னதில்லை. என்னைக்கொல்ல எவரால் முடியும்? ஜடவுலகத்துக்குச் சக்ரவர்த்தியாகிய நீயா என்னைக்கொல்வது! ஒருபொழுதும் முடியாது! ஏனெனின் பிறப்பிறப்பற்ற ஆத்மா, ஒருபொழுதும் நான் பிறந்ததுமில்லை, ஒருபொழுதும் மரிக்கப் போகிறதுமில்லை; நான் அகண்டவஸ்து, சர்வ வியாபகன்; சர்வஞ்ஞன்; நீ என்னைக்கொல்லவா! நீ குழந்தை!'' அதுதான் பலம், அதுதான் பலம்.

680. எனது நண்பர்களே, எனது தேச ஜனங்களே, நான் உபநிஷத்துக்களை யநிசம் படிக்கப் படிக்க, அவ்வளவுக்கவ்வளவு அதிகமாக நான் உங்களுக்காக அழுகிறேன். ஏனெனில் அதிலே பருபலத்துக்குப் பொருத்தமானது உள்ளது. பலம், நமக்குபலம். நமக்குவேண்டியது பலம், நமக்கு எவர் பலம் கொடுப்பார்? நம்மை பலவீனப்படுத்துவதற்கு ஆயிரக்கணக்கானவை யிருக்கின்றன. கதைகளோ போதுமானவை நமக்கு இருக்கின்றன. நமது புராணங்களில் ஒவ்வொன்றும் நீங்கள் அதை அதை அழுக்கினுல், உலகிலேயுள்ள புத்தகசாலைகளுள் முக்கால்பாகம் நிரம்பும்படியாக அத்தனை கதைகள் அளிக்கின்றன. நம்மை ஒரு ஜாதியாகப் பலஹீனப் படுத்தக்கூடிய ஒவ்வொன்றும் சென்ற ஆயிரம் வருஷங்களாக நம்மிடம் இருந்துவருகின்றன. அந்தக் காலத்திலே ஜாதீய வாழ்க்கைக்கு ஒரே நோக்கம்

தான் இருந்தது போலும்! நம்மை மேன்மேலும் பலவீனப்படுத்துவது எப்படியென்றால், கடைசியாக நாம் தன்னுடைய காலையெடுத்து நம்மீது வைக்கத் துணிகின்ற ஒவ்வொருவனுடையவும் கால்களினடியில் ஊர்ந்து செல்லும் உண்மையான பூப்புழுக்களாய் விட்டதேயாம். ஆகையால், எனது நண்பர்களே, உங்களுடன் இரத்தசம்பந்த முள்ளவர்களுள் ஒருவனே, உங்களுடன் வசித்து உங்களுடன் மரிக்கின்ற ஒருவனே, நமக்குவேண்டியது பலம், பலம் ஒவ்வொரு தடவையும் பலமே என்று நான் உங்களிடம் கூறுகிறேன். உபநிஷத்துக்கள் பலத்துக்குப் பெரிய சுரங்கமாம். உலகு முழுமையும் பலப்படுத்தப் போதிய பலம் அதிலேயுள்ளது. உலகுமுழுதும் அவற்றின் மூலமாக உயிரளிக்கப்பட்டு, பலமாக்கப்பட்டு, சக்தியளிக்கப்பட முடியும். அவை எல்லா ஜாதிகளிலும் எல்லாப் பிரிவுகளிலும் எல்லாக் கக்ஷிகளிலுமுள்ள பலவீனர்களையும் துன்புறுபவர்களையும் கீழேபோட்டு மிதிக்கப்படுபவர்களையும் கூப்பிட்டு அவர்கள் தங்களுடைய பாதங்களில் நின்று முக்தர்களாகும்படி கோஷிக்கும்; ஸ்வதந்திரம், ஸ்தூல ஸ்வதந்திரம், மனச்சுதந்திரம், ஆத்மீக ஸ்வதந்திரம் முதலியன உபநிஷத்துக்களின் கொள்கைகளாம்.

681. உபநிஷத்துக்கள் பெருமை பொருந்தியவையாயிருந்த போதிலும், நமது முன்னோர் மக்ரிஷிகளாகவேயிருந்த போதிலும், மற்ற அநேக

ஜாதியாருடன் ஒப்பிட்டுப் பார்க்க, நாம் பலவீனர்களாய், மிகவும் பலவீனர்களா யிருக்கிறோமென்று நான் உங்களிடம் கூறவேண்டும். எல்லாவற்றுக்கும் முதலில் நமது சரீர பலவீனம் இருக்கிறது. அந்த சரீர பலவீனம் நமது துன்பங்களில் குறைந்தது மூன்றில் ஒருபங்குக்குக் காரணமாயிருக்கிறது. நாம் சோம்பேறிகளா யிருக்கிறோம்; நாம் வேலை செய்ய முடியாது; நாம் ஒன்று சேரமுடியாது; நாம் ஒருவரையொருவர் நேசிப்பதில்லை; நாம் அத்தியந்த ஸ்வயநலமுள்ளவர்களா யிருக்கிறோம்; நாம் மூன்று பேர் ஒருவரையொருவர் பகைக்காமல், ஒருவரைப் பார்த்து ஒருவர் பொறாமைப் படாமல், ஒன்று சேர முடியாது. நாம் உள்ள நிலைமையிது தான்—நம பிக்கையே யில்லாமல் பிரிந்து கிடக்கும் கூட்டங்கள், அபாரமாக ஸ்வயநலம் வாய்ந்தவர்கள், நமது நெற்றியில் குறி இப்படிப் போடுவதா? அப்படி போடுவதா என்று அநேக நூற்றாண்டுகளாகச் சண்டையிட்டுக் கொண்டிருப்பவர்கள், ஒரு மனிதனுடைய பார்வையாவது எனது ஆகாரத்தைக் கெடுத்து விடுகிறதா? இல்லையா என்றது போன்ற நெருக்கடியான விஷயங்களைப்பற்றி, புத்தகங்களின் பின் புத்தகங்களாக எழுதுபவர்கள்! சென்ற சில நூற்றாண்டுகளாக நாம் இப்படி செய்து கொண்டு வருகிறோம். மூளைச்சக்தி முழுதும் இத்தகைய ஆச்சர்யமான, அழகிய கேள்விகளிலும் ஆராய்ச்சிகளிலும் செலுத்தப்பட் டிருக்கிற

ஒரு ஜாதியாரிடமிருந்து இதனினும் உயர்ந்ததாக எதையும் நாம் எதிர்பார்க்க முடியாது! நம்மைப் பற்றி நமக்கே வெட்கமாயில்லையா? ஆ, சில சமயங்களில் வெட்கப்படுகிறோம், ஆனால் இந்த விஷயங்களெல்லாம் அற்பமேயென்று, நாம் நினைத்த பொழுதிலும், நாம் அவற்றை விட்டுவிட முடியவில்லை. நாம் அநேக விஷயங்களை நினைக்கிறோம், அவற்றையொரு பொழுதும் செய்கிறதில்லை. கிளிபோன்று, நினைப்பது நமக்கு ஒரு வழக்கமாய் விட்டது; ஆனால் ஒருபொழுதும் செய்வது வழக்கமாகவில்லை. அதற்குக் காரணம் என்ன? சரீர பலவீனமே இந்த மாதிரி பலவீனமான மூளை எதையும் செய்ய வல்லதாயில்லை; நாம் அதை பலப்படுத்த வேண்டும். எல்லாவற்றிற்கும் முதலில் நமது வாலிபர்கள் பலமுள்ளவர்களா யிருக்கவேண்டும். மதம் பின்னர் வரும். எனது பால்ய நண்பர்களே, பலமுள்ளவர்களா யிருங்கள்; அதுதான் உங்களுக்கு நான் கூறும் புத்திமதி. கீதையைப் படிப்பதைப் பார்க்கிலும் உதைபந்தினால் நீங்கள் மோக்ஷத்தை சீக்கிரம் அணுகி விடுவீர்கள். இவை தைர்ய வார்த்தைகளாம், ஆனால் நான் அவற்றைச் சொல்ல வேண்டியிருக்கிறது. ஏனெனில் நான் உங்களை நேசிக்கிறேன். உங்களுடைய புஜங்கள், உங்களுடைய சதைகள் இன்னும் பலமுள்ளவைகளாயிருந்தால், நீங்கள் கீதையை இன்னும நன்றாய் அறிந்து கொள்வீர்கள். நெருப்பு எங்கேகடிக்கின்றது என்பது எனக்கு தெரி

யும். நான்கொஞ்சம் அநுபவம் அடைந்திருக்கிறேன். உங்களில் கொஞ்சம் பலமுள்ள இரத்தம் இருந்தால் நீங்கள் கிருஷ்ணனுடைய மகத்தான சமர்த்தையும் பராக்கிரம பலத்தையும் அறிந்து கொள்வீர்கள்.[1] உங்களுடைய சரீரம் உங்களுடைய கால்களின் மீது உறுதியாய் நின்று நீங்களும் மனிதர்களேயென்று உணர்கிறபொழுது நீங்கள் உபநிஷத்துக்களையும் ஆத்மாவின் மகிமையையும் நன்றாய் அறிந்துகொள்வீர்கள்.

682. நீ பெரியவனென்று உணர்ந்துகொள், நீ பெரியவனாய் விடுகிறாய்.

683. நாம் நம்பிக்கையை இழந்துவிட்டோம்; ஆங்கிலேய புருஷனையும் ஸ்திரீயையும்விட நம்மிடம் நம்பிக்கை குறைவாயிருக்கிறது. ஆயிரம்மடங்கு குறைவாயிருக்கிறது. இவைதெளிவான வார்த்தைகள், நான் கூறுகிறேன், கூறாமலிருக்க முடியவில்லை. ஆங்கிலேய புருஷர்களும் ஸ்திரீகளும் நம்முடைய லக்ஷியங்களைப் பிடித்துக்கொண்டால், எப்படி பித்துப்பிடித்தவர்கள் போலாய்விடுகிறார்கள் என்பதைப் பார்க்கிறதில்லையா? அவர்கள் ஆளும் வகுப்பினராயிருந்தும் அவர்கள் தங்கள் சொந்த தேசத்தினர் கேலியும் பரிகாசமும் செய்தபொழுதிலும், நமது சொந்தமதத்தைப் போதிப்பதற்கு இந்தியாவுக்கு வருகிறார்கள். உங்களில் எத்தனைபேர் அப்படி செய்ய முடியும்? நீங்கள் ஏன் அப்படி செய்ய முடியவில்லை? உங்களுக்கு அது தெரியாதா? அவர்களைப்பார்க்கி

ளும் உங்களுக்கு அதிகம் தெரியும்; உங்களுக்கு வேண்டிய அளவைப்பார்க்கிலும் அதிக அறிவுள்ளவர்களாயிருக்கிறீர்கள், அதுதான் உங்களுடைய கஷ்டம்! உங்களுடைய ரத்தம் தண்ணீர்போன்று இருத்தலினாலே, உங்களுடைய மூளை வற்றிவிட்டது. உங்களுடைய சரீரம் பலவீனமாயிருக்கிறது! நீங்கள் சரீரத்தை மாற்றவேண்டும். சரீரபலவீனமே காரணம், வேறொன்றுமேயில்லை. சென்ற நூறுவருஷங்களாக நீங்கள் சீர்திருத்தங்களைப்பற்றியும் லக்ஷியங்களைப்பற்றியும் இவ்வெல்லா விஷயங்களைப்பற்றியும் பேசியிருக்கிறீர்கள்; அநுஷ்டானத்துக்கு வருகிறபொழுது, நீங்கள் எங்கும் காணப்படுகிறதில்லை;— கடைசியாக நீங்கள் உலகுமுழுதுக்கும் வெறுப்புஉண்டாக்கி விட்டீர்கள், சீர்திருத்தம் என்ற பெயரே ஒரு பரிகாச விஷயமாய்விட்டது! காரணமென்ன? உங்களுக்குத் தெரியாதா? உங்களுக்கு நன்றாகத்தெரியும் ஒரே காரணம் நீங்கள் பலவீனர்களாயிருக்கிறீர்கள், பலவீனர்களாயிருக்கிறீர்கள், பலவீனர்களாயிருக்கிறீர்கள் என்பதே. உங்களுடைய சரீரம் பலவீனமாயிருக்கிறது, உங்களுடைய மனம் பலவீனமாயிருக்கிறது, உங்களிடத்திலேயே உங்களுக்கு நம்பிக்கையில்லை; எத்தனையோ நூற்றாண்டுகளாக, ஓராயிரம் வருஷங்களாக ஜாதிகளும் அரசர்களும் அந்நியர்களும் உங்கள் சொந்த ஜனங்களும் செலுத்திவந்த அதிகொடூரமானசெய்கையானது, எனது சகோதரர்களே, உங்க

ளுடைய பலத்தையெல்லாம் எடுத்துவிட்டது! உங்களுடைய முதுகெலும்பு ஒடிந்துவிட்டது: நீங்கள் கிழேபோட்டு மிதிக்கப்படும் புழுக்கள் போன்றிருக்கிறீர்கள்! உங்களுக்கு எவர் பலம் அளிப்பார்? பலம், பலம், இதுதான் நமக்கு வேண்டியது என்று நான் உங்களுக்கு கூறுகிறேன். பலம்மடைவதற்கு முதலாவதுபடி உபநிஷத்துக்களைக் கைப்பிடித்து "நான் ஆத்மாவே" என்று நம்புவதுதான்.

684. ஸ்வதந்திரமே வளர்ச்சிக்கு முதலாவது நிபந்தனை. உங்களில் எவரேனும் "நான் இந்த ஸ்திரீயினுடைய அல்லது குழந்தையினுடைய மோக்ஷத்தை சம்பாதித்துக்கொடுப்பேன்" என்று கூறத்துணிந்தால் அது தப்பு, ஆயிரமடங்கு தப்பு. விதவை விஷயத்தைப்பற்றி நான் என்ன நினைக்கிறேனென்றும் ஸ்திரீ விஷயத்தைப்பற்றி நான் என்ன நினைக்கிறேன் என்றும் நான் அடிக்கடி கேட்கப்படுகிறேன். நான் ஒரேயடியாகப் பதில் சொல்லிவிடுகிறேன்,— அந்த மூடத்தனத்தைப்பற்றி நீ என்னைக்கேட்பதற்கு நான் என்ன, விதவையா? மறுபடியும் மறுபடியும் அந்தக் கேள்வியை நீ என்னிடம் கேட்பதற்கு நான் ஒரு ஸ்திரீயா? ஸ்திரீகளின் விஷயத்தை முடிவு செய்வதற்கு நீ யார்? ஒவ்வொரு விதவையின் மீதும் ஒவ்வொரு ஸ்திரீயின் மீதும் நீ ஆட்சிபுரிதற்கு நீ என்ன, ஈச்வரனோ? அவர்கள் தங்கள் விஷயங்களைத் தாங்களே தீர்த்துக்கொள்வார்கள். எவருக்கும் எதுவும்

உங்களால் செய்ய முடியுமென்று நினைக்க முயற்சி செய்யும் கொடுமையாளர்களே! கைகளை விரித்து விடுங்கள்! ஈச்வரன் எல்லோரையும் கவனித்துக் கொள்வார். உங்களுக்கு எல்லாம் தெரியுமென்று பாவித்துக்கொள்வதற்கு நீங்கள் யார்? ஏ, தெய்வ நிந்தனைக்காரர்களே, ஈச்வரன்மீது உங்களுக்குப் பாத்தியம் உண்டு என்று நீங்கள் எப்படி நினைக்கத் துணிகிறீர்கள்? ஏனென்றால், ஒவ்வொரு ஆத்மாவும் ஈச்வரனுடைய ஆத்மாவே யென்று உங்களுக்குத் தெரியாதா?

685. பிறர்மீது ஆட்சி செலுத்துவதினால் அவர்களுக்கு நீ ஏதேனும் நன்மை செய்ய முடியுமென்ற எண்ணத்தை விட்டுவிடுங்கள்.

686. பிரக்ஞைக்கு அப்பாலேயே நீரர்கள் தேடுகிறார்கள். புலன்களால் கட்டுப்படுத்தப் பட்டதே பிரக்ஞை. அதற்கப்பால், புலன்களுக்கப்பால், ஞான உலகத்து உண்மைகளை யடையும்பொருட்டு மனிதர்கள் செல்லவேண்டும். புலன்களின் எல்லைகளுக்கப்பால் செல்வதிலே ஜயம் பெறுகின்ற மனிதர்கள் இப்பொழுதும் உண்டு. இவர்கள் ரிஷிகள் எனப்படுகிறார்கள். ஏனெனில் அவர்கள் ஞான உண்மைகளை நேருக்கு நேர் காண்கிறார்கள்

687. இந்தியாவுக்கு வெளியேயுள்ள உலகமில்லாமல் நம்மால் இருக்க முடியாது. நம்மால் முடியுமென்று நாம் நினைத்தது நமது மூடத்தனம். நாம்

ஓராயிரம் வருஷத்திய அடிமைத்தனத்தினால் அந்தக் குற்றத்துக்கு அபராதம் செலுத்திவிட்டோம். இதர ஜன சமூகங்களுடனே விஷயங்களை யொப்பிட்டுப் பார்க்க நாம் வெளியே செல்லாததே நம்மைச் சுற்றிலும் நடைபெற்றுவருகின்ற. வேலைப்பாடுகளைக் குறிக்கவில்லை. இந்திய மனத்தின் இந்த வீழ்ச்சிக்கு ஒரு பெருங்காரணமா யிருந்திருக்கிறது. நாம் அபராதம் செலுத்திவிட்டோம். நாம இனிமேல் அப்படி செய்யக்கூடாது. இந்தியர்கள் இந்தியாவுக்கு வெளியே போகக்கூடாதென்ற மூட எண்ணங்களெல்லாம் குழந்தைத்தனமானவை.

668. "இந்தியாவிலுள்ள எந்த ஆசிரியருடைய பெயரையும் நிச்சயிப்பது எவ்வளவு கடினமாயிருக்கிறது" என்று ஒருதரம் என்னிடம் சொல்லப்பட்டது; அதற்கு நான் "அது இந்திய எண்ணம்" என்று மறுமொழி கூறினேன். இந்திய ஆசிரியர்கள் தற்காலத்திய ஆசிரியர்களைப் போன்றவர்களல்லர். இக்காலத்து ஆசிரியர்கள் தங்கள் எண்ணங்களில் நூற்றுக்குத் தொண்ணூற்றை திருடுகிறார்கள்; நூற்றுக்கு பத்து மாத்திரம் அவர்களுக்குச் சொந்தம்; 'இந்த எண்ணங்களுக்கு நானே பொறுப்பாளி' என்று அவர்கள் ஒரு முகவுரை எழுதிச் சொல்லிவிடுகிறார்கள். மனுஷ்யவர்க்கத்தின் ஹிருதயங்களில் நெருக்கடியான பலன்களை யுண்டாக்குகின்ற அந்தப் பெரிய மகத்துக்கள் தங்களுடைய பெயர்களைக்கூடப்

போடாமல் தங்களுடைய புத்தகங்களை எழுதி, சந்ததியாருக்கு வைத்துவிட்டு அமைதியாய் மரித்து விடுவதில் திருப்தியடைந்து விட்டார்கள். நமது தத்துவ சாஸ்திரங்களை எழுதியவர்களை யார் அறிவார்? நமது புராணங்களை எழுதியவர்களை யார் அறிவார்?

689. நமக்கு வேண்டியது ரத்தத்திலே பலம். நரம்புகளிலே பலம். இரும்புச்சதைகளும் எஃகு நரம்புகளும், மிருதுவான உபயோகமற்ற எண்ணங்களுமாகிய இவற்றையெல்லாம் நீக்கிவிடுங்கள். எல்லா ரகஸ்யத்தையும் நீக்கி விடுங்கள். மதத்திலே ரகஸ்யமில்லை. வேதாந்தத்திலாவது அல்லது வேதங்களிலாவது அல்லது சம்ஹிதைகளிலாவது அல்லது புராணங்களிலாவது ஏதாவது ரகஸ்யம் உண்டா? பூர்விக காலத்து மகாத்மாக்கள் தங்களுடைய மதத்தைப் போதிப்பதற்கு எந்த ரகஸ்ய சபைகளை ஏற்படுத்தினார்கள்? மனுஷ்யவர்க்கத்துக்குத் தங்களுடைய சிறந்த உண்மைகளைக் கொடுப்பதற்கு அவர்களால் உபயோகிக்கப்பட்டதாக என்ன கைத்தந்திரங்கள் பதிவு செய்யப்பட்டிருக்கின்றன? ரகஸ்யத்தை நாடுதலும் மூட நம்பிக்கையும் எப்பொழுதும் பலவீனக் குறிகளாம். இவை எப்பொழுதும் வீழ்ச்சியினதும் மரணத்தினதும் அறிகுறிகளாம். ஆகையால், அவற்றைப்பற்றி ஜாக்கிரதையாயிருங்கள்; பலமுள்ளவர்களாயிருங்கள்; உங்களுடைய கால்களி

லேயே நில்லுங்கள். பெரிய விஷயங்கள், மிக மிக
ஆச்சர்யமான விஷயங்கள் அங்கேயிருக்கின்றன.
பிரகிருதியைப்பற்றி நமக்குள்ள எண்ணங்கள் செல்
கிறவரையில் நாம் அவற்றைப் பிரகிருதிக்கதீதமான
விஷயங்களென்று கூறலாம். ஆனால் இந்த விஷயங்
களில் ஒன்றேனும் ரகஸ்யமல்ல. மத உண்மைகள்
இரகஸ்யங்களென்றாவது அல்லது ஹிமோத்கிரியின்
பனிச் சிகரங்களிலேயுள்ள இரகஸ்ய சபைகளின்
சொத்து என்றாவது இந்தப்பூமியிலே ஒருபொழுதும்
போதிக்கப்படவில்லை. நான் ஹிமோத்கிரியில்
இருந்திருக்கிறேன். நீங்கள் அங்கே யிருந்ததில்லை.
உங்களுடைய வீடுகளிலிருந்து அது எத்தனையோ
நூறு மைல் தூரம் இருக்கிறது. நான் சந்யாசி;
சென்ற பதினைந்து வருஷங்களாக நான் சுற்றிக்
கொண்டிருக்கிறேன். இந்த இரகஸ்ய சபைகள் எங்கு
மில்லை. இந்த மூட நம்பிக்கைகளின் பின்னே ஓடா
தீர்கள். நீங்கள் பழுத்த நாஸ்திகர்களாய் விட்டால்,
உங்களுக்கும் நல்லது, ஜாதிக்கும் நல்லது. ஏனென்
றால் உங்களுக்குப் பலமிருக்கும், ஆனால் இவை வீழ்ச்சி
யும் மரணமுமாம். பலவான்கள் இந்த மூட நம்பிக்
கைகளிலே தங்களுடைய காலத்தைக் கழிப்பதுபற்றி
உலகிலுள்ள மிகமிக அழுகிய மூடத்தனங்களுக்கெல்
லாம் நியாயங் கூறுவதற்கு உபமானக் கதைகள்
உண்டு பண்ணுவதிலே காலத்தைக் கழிப்பது பற்றி,
மனுஷ்யவர்க்கத்துக்கே அவமானம். தைர்யமா

யிருங்கள்; அம்மாதிரி நியாயம் கூற முயற்சிக்காதீர்கள்.

690. மாறுதலற்ற ஏக வஸ்துவை நாம் அனுபூதியில் அறியும்படி செய்வது எதுவோ அதுவே மதமாம். அதீதமான உண்மைகளை யநுபவத்தில் அறிகிறவன், ஆத்மாவைத் தன்னுடைய இயற்கையிலே அறிகிறவன், ஈச்வரனை நேருக்கு நேர் பார்க்கிறவன், ஒவ்வொன்றிலும் கடவுளையே பார்க்கிறவன் ரிஷியாய்விடுகிறான். நீ ரிஷியாகிறவரையில் உங்களுக்கு மதவாழ்க்கையில்லை. அப்பொழுது தான் மதமானது உங்களுக்கு ஆரம்பிக்கிறது, இப்பொழுது ஆரம்பம் மாத்திரம் தான். அப்பொழுது மதம் உங்களுக்கு உதயமாகிறது. இப்பொழுது நீங்கள் புத்தி விளையாட்டுக்களையும் சரீரவதைகளையும் மாத்திரம் அனுபவித்துக் கொண்டிருக்கிறீர்கள்.

691. அளவுக்குமிகுந்த பேச்சினால், மிக மிக உயர்ந்த புத்திகளினால் கூட, சாஸ்திரங்களின் ஆராய்ச்சியினால் கூட ஆத்மா அடையப்பட முடியாத்து. சாஸ்திரங்களே அப்படி கூறுகின்றன.

692. ஜீவரத்தம் பலமுள்ளதாயும் பரிசுத்தமாயும் இருந்தால், அந்தச் சரீரத்தில் வியாதிப்புழு ஒன்றும் இருக்கமுடியாது. நமது ஜீவரத்தம் ஆத்மஞானமாம். அது தெளிவாக ஓடினால், அது பலமாகவும் பரிசுத்தமாகவும் ஊக்கத்துடனும் ஓடினால், எல்லாம்சரியாகும்; ராஜீயக்குறைகளும், சமுதாயக்குறை

களும் வேறு எந்த லௌகிகக் குறைகளும், பூமியினுடைய வறுமைகூட, அந்த ரத்தம் சுத்தமாயிருந்தால், எல்லாம் சொஸ்தப்படுத்தப்பட்டு விடும். ஏனெனில் வியாதிப் பூச்சி வெளியே எறியப்பட்டு விட்டால், ரத்தத்தினுள்ளே எதனாலும் நுழைய முடியாது. தற்காலத்து வைத்தியத்திலிருந்து ஒரு உவமையெடுத்துக் கூறுவோம். ஒரு வியாதியை உற்பத்தி பண்ணுவதற்கு, வெளியே ஏதேனும் விஷக் கிருமி யிருக்கவேண்டும், சரீரத்தினுடைய ஸ்திதியும் அதற்குத் தயாரா யிருக்கவேண்டும். ஆக இந்த இரண்டு காரணங்களும் இருக்கவேண்டும் என்பதை நாம் அறிவோம். சரீரமானது கிருமிகளை ஏற்றுக் கொள்வதற்குள்ள ஸ்திதியிலிருந்தா லொழிய, கிருமிகள் நுழைந்து விருத்தியடையும்படியாக சரீரமானது ஒரு தாழ்ந்த ஸ்திதியை யடைந்திருந்தாலொழிய சரீரத்திலே வியாதி யுண்டுபண்ணுதற்கு உலகில எந்தக் கிருமிக்கும் சக்தி கிடையாது. உண்மையில், லக்ஷக் கணக்கான கிருமிகள் ஒவ்வொருவருடைய சரீரத்தினூடும் இடைவிடாமல் சென்று கொண்டிருக்கின்றன; ஆனால் அது பலமுள்ளதாயிருக்கும் வரையில், அது அவற்றை பொருபொழுதும் அறிகிறதில்லை. சரீரம் பலவீனமாயிருக்கிற பொழுதே இந்தக் கிருமிகள் அதையடைந்து, வியாதியை உண்டுபண்ணுகின்றன. அப்படியேதான் ஜாதீய வாழ்க்கையிலும்.

693. வழக்கங்கள் விஷயத்திலே, பற்பல வித்தியாசங்கள் உள்ளனவென்று தெரிகிறது. ஜாட் என்னும் ஜாதியார் மகம்மதியர்களுக்குள்ளும் கிறிஸ்தவர்களுக்குள்ளும் விவாகம் செய்து கொண்டால் கூட, ஜாதிப்பிரஷ்டம் செய்யப்படுகிறதில்லை. அவர்கள் தடையில்லாமல் எந்த ஹிந்து க்ஷேத்திரத்தினுள்ளும் நுழையமுடியும். பஞ்சாபிலே அநேக கிராமங்களில் பன்றி தின்றவன் ஹிந்துவெனக் கருதப்படுவதில்லை. நேபாளத்திலே பிராஹ்மணன் நான்கு வர்ணங்களிலும் விவாகம் செய்து கொள்ளலாம்; வங்காளத்திலோ, பிராஹ்மணன் தன்னுடைய சொந்த ஜாதியின் உட்பிரிவுகளுக்குள்ளே கூட விவாகம் செய்துகொள்ள முடியாது.

694. நீங்கள் ஆயிரக்கணக்கான சபைகளை, இருபதினாயிரம் ராஜீய மகாநாடுகளை, ஐம்பதினாயிரம் ஸ்தாபனங்களை ஏற்படுத்தலாம். எல்லோருக்குமாக நினைக்கின்ற அந்த அநுதாபம், அந்த அன்பு, அந்த ஹிருதயம் இருந்தாலொழிய இவை பிரயோசனமில்லை. புத்தருடைய ஹிருதயம் இந்தியாவுக்குள் இன்னுமொரு முறை வந்தாலொழிய, கிருஷ்ண பரமாத்மாவினுடைய வார்த்தைகள் அநுபவத்தில் கொண்டுவரப்பட்டாலொழிய நமக்கு நம்பிக்கை கிடையாது.

695. நாம் ஈச்வரனுடைய குழந்தைகளாயிருக்கிறோம்; நாம் அகண்ட, திவ்யாக்கினியின் பொறி

களாம். நாம் எப்படி ஒன்றுமில்லாதவர்களாயிருக்க முடியும்? நாம் எல்லாமாயிருக்கிறோம்; எல்லாம் செய்வதற்குத் தயாராயிருக்கிறோம், நாம் எல்லாம் செய்யமுடியும், மனிதன் எல்லாம் செய்யவேண்டும். இந்தத் தன்னம்பிக்கை நமது முன்னோர்களின் ஹிருதயங்களில் இருந்தது. இந்தத் தன்னம்பிக்கையே நாகரிகப்போக்கில் மேன்மேலும் முன்னே அவர்களைப் பிடித்துத் தள்ளியகாரண சக்தியாயிருந்தது. வீழ்ச்சி ஏற்பட்டிருந்தால், குறை ஏற்பட்டிருந்தால், எனது வார்த்தைகளைக் கவனியுங்கள். நமது ஜனங்கள் இந்தத் தன்னம்பிக்கையை என்று இழந்தார்களோ அன்று இந்த வீழ்ச்சி ஆரம்பித்தது என்பதை நீங்கள் காண்பீர்கள். ஒருவன் தன்னம்பிக்கையை இழத்தலென்பது ஈச்வரனிடத்தில் நம்பிக்கை யிழத்தலாம்.

696. மரித்தபொழுது, தனது மனத்தை நோக்கி அதனுடைய பராக்கிரமச் செய்கைகளெல்லாவற்றையும் அதனுடைய பராக்கிரம நினைப்புக்கள் எல்லாவற்றையும் ஞாபகப்படுத்திக்கொள்ளும்படி கேட்டுக்கொண்ட மகாத்மாவினுடைய அழகிய திருஷ்டாந்தத்தை ஞாபகப்படுத்திக்கொள்ளுங்கள். அங்கே அவர் அதனுடைய பலவீனத்தையெல்லாம் அதனுடைய முட்டாள்தனத்தையெல்லாம் ஞாபகப்படுத்திக்கொள்ளும்படி தமது மனத்துக்குப் போதித்ததாக நீங்கள் காணவில்லை. மூடத்தனங்கள் இருக்கின்றன, பலவீனம் இருக்கத்தான்வேண்டும். ஆனால் உங்

களுடைய உண்மையான இயற்கையை எப்பொழுதும் ஞாபகப்படுத்திக் கொள்ளுங்கள்,--பலவீனத்தை சொஸ்தப்படுத்துவதற்கு அது ஒன்றே வழி. மூடத்தனங்களை மாற்றுவதற்கு அது ஒன்றேவழி.

697. ஒரு முனையிலேயுள்ள லக்ஷியம் பிராஹ்மணனும்; மறுமுனையிலேயுள்ள லக்ஷியம் சண்டாளனுமாம்; வேலை முழுதும் சண்டாளனை பிராஹ்மணனுக உயர்த்துவதேயாம்.

698. இங்கு (இந்தியாவில்) தான் வறுமையைக் குற்றமாக நினைக்காத, வறுமையைப் பாபமாகக் கருதாத ஜாதியுள்ளது. இங்கு தான் வறுமையைக் குற்றமென்று கருதாதது மாத்திரமல்ல; வறுமையைப் பெருமையாகக் கொண்டுள்ள ஜாதியுள்ளது; பிச்சைக்காரனுடைய பூமியிலே மிகமிகச் சிரேஷ்டமானவருடைய உடையாம்.

699. நாம் வெளியில் செல்லாததே, நாம் இதர ஜன சமூகங்களுடன் குறிப்புக்களை ஒத்திட்டுப்பாராததே, இதுதான் ஒரு பெரிய காரணமாயிருந்துவருகிறது. நமது வீழ்ச்சிக்கு அதுவே ஒரு பெரியகாரணமாயிருந்துவருகிறது. அந்தச் சிறிய கலக்கம், இந்தியாவில் நீங்கள் பார்க்கிற சிறிய வாழ்க்கை ராஜாராம மோகனராய் அந்தத் தனித்தன்மையாகிற சுவர்களை யுடைத்த நாளிலிருந்து ஆரம்பிக்கிறதென்பதை உங்களில் ஒவ்வொருவரும் அறிவீர்கள்.

700. மேனாட்டு ஜாதியாரால் வெளிப்படுத்தப்பட்டு நீங்கள் பார்க்கின்ற பிரபஞ்சிக சக்தியெல்லாம் இந்தச் ச்ரத்தையின் பலனேயாகும்; ஏனென்றால் அவர்கள் தங்களுடைய சதைகளிலே நம்பிக்கை வைக்கிறார்கள்; நீங்கள் உங்களுடைய ஆத்மாவிலே நம்பிக்கைவைத்தால், அது எவ்வளவு அதிகமாக வேலை செய்யும்.

701. எதைப்பற்றியும் பயப்படாதே; நீ ஆச்சரியமான வேலை செய்வாய். நீ பயப்படுகிற நிமிஷத்திலேயே, நீ ஒன்றுக்கு மற்றவனாகிவிடுகிறாய். உலகில் துன்பத்துக்குப் பெருங் காரணமாயுள்ளது பயமேயாம். எல்லா மூடநம்பிக்கைகளிலும் மிகமிகப் பெரியது பயமேயாம். நமது துன்பங்களுக்கெல்லாம் காரணமாயுள்ளது பயமேயாம், ஒரு நிமிஷத்தில் கூட மோக்ஷமளிப்பது பயமின்மையாம். ஆகையால் எழுந்திருங்கள், விழித்துக்கொள்ளுங்கள், லக்ஷியத்தை யடைகிறவரையில் நிற்காதீர்கள்.

702 உபநிஷத்துக்கள் அநேகமாம், நூற்றெட்டு என்று சொல்லப்படுகின்றன; ஆனால் இன்னும் அதிக முண்டென்று சிலர் கூறுகின்றனர். அவற்றுள் சில சமீபத்தில் உண்டாக்கப்பட்டன. திருஷ்டாந்தமாக ஒன்று அல்லோபநிஷத் என்பதாம்; அதிலே அல்லா ஸ்தோத்திரம் பண்ணப்பட்டிருக்கிறார். மகம்மது ரஜுலுல்லா எனப்படுகிறார். அக்பருடைய அரசாட்சி காலத்திலே ஹிந்துக்களையும் மகம்

மதியர்களையும் ஒன்று சேர்ப்பதற்காக இது எழுதப்பட்டதென்று நான் கேள்விப்படுகிறேன் ; சில வேளைகளிலே, ஸம்ஹிதைகளிலுள்ள அல்லா அல்லது அல்லா போன்ற ஏதேனும் வார்த்தையை அவர்கள் பிடித்துக்கொள்கிறார்கள். ஆகையால், இந்த அல்லோபநிஷத்தில் மகம்மத் ரஜஸல்லாவே யாம். அது என்ன பொருளாயினும் சரி.

703. மதத்தின் மூலமாக அளிக்கப்பட்டால், ஹிந்துவானவன் ராஜீய விஷயத்தையும் அறிந்துகொள்ள முடியும் ; ஜாதீய நியாயம் மதத்தின் மூலமாகவே வரவேண்டும், ஒவ்வொன்றும் மதத்தின் மூலமாகவே வரமுடியும்.

704. நீங்கள் ஹிந்துக்கள், வாழ்க்கை நித்தியமென்றுள்ள உள்ளுணர்ச்சி நம்பிக்கை உங்களில் இருக்கிறது. சில வேளைகளில் பாலர்கள் என்னிடம் நாஸ்திகத்தைப்பற்றிப் பேச வருகிறார்கள் ; ஒரு ஹிந்து நாஸ்திகனாக முடியுமென்று நான் நம்பவில்லை. அவன் ஐரோப்பிய புஸ்தகங்களை வாசிக்கலாம், தான் ஜடவாதியென்று நம்பிக்கொள்ளலாம் ; ஆனால் அது சொற்பகாலத்துக்குத் தான். அது உன்னுடைய இரத்தத்தில் இல்லை உன்னுடைய அமைப்பில் இல்லாததை நீ நம்பமுடியாது ; அது உனக்கு உபயோகமற்ற வேலை. அம்மாதிரி விஷயத்தை முயற்சிக்காதே. நான் சிறுபையனாயிருந்தபொழுது ஒரு தரம் முயற்சித்தேன் ; ஆனால் அது முடியவில்லை.

வாழ்க்கை சொற்பமானது, ஆனால் ஆத்மா அழிவற்றது, நித்தியமானது; மரணமென்ற ஒரு விஷயம் நிச்சயமானதினாலே, நாம் ஒரு பெரிய லக்ஷியத்தையெடுத்து, நமது ஜீவிதம் முழுதையும் அதற்குக் கொடுப்போம்.

705. இந்தியாவிலேயுள்ள காலாடிகள் (போக்கிரிகள்) தயாராகக் கொடுக்கப்பட்டதைத் தயாராகப் பெற்றுக்கொண்டு திருப்தியடைந்து சமாதானமும் திருப்தியுமுள்ள வாழ்க்கை வாழ்ந்துவந்தார்கள்; மேனாட்டிலேயுள்ள காலாடியானவன் எளியோராலயத்துக்குச் செல்ல மனமில்லாமல்— ஏனெனில் மனிதன் ஆகாரத்தைப்பார்க்கிலும் ஸ்வதந்திரத்தை நேசிக்கிறான்— சமுதாய விரோதியாய், திருடனாகி விடவே, நியாயஸ்தலம், போலீஸ், சிறைச்சாலைகள், மற்றும் ஸ்தாபனங்கள் இவையெல்லாம் அவசியமாயிற்று. நாகரிகம் என்ற வியாதியுள்ளவரையில், வறுமையிருக்கத் தான் வேண்டும்; ஆகையால் தான் நிவிருத்தி அவசியமாகிறது.

706 நீ சொல்ல வேண்டியதைச் சொல், உலகம் அதை விரும்புகிறது; ஆனால் நீ மற்ற ஜனங்களைப் பற்றி என்ன நினைக்கிறாயென்பதைக் கேட்பதற்கு உலகுக்கு நேரமில்லை.

707. எனது யோசனை பிரமாதமாய்த் தோன்றலாம்; ஆனால் அது மிகவும் அவசியமாம். பணம் எங்கேயென்று நீ கேட்கலாம். பணம் அவசியமில்லை.

பணம் பிரமாதமில்லை. எனது ஜீவிதத்தில் சென்ற பன்னிரண்டு வருஷங்களாக அடுத்த வேளை ஆகாரம் எங்கேயிருந்து கிடைக்குமென்று நான் அறியாம லிருந்தேன். ஆனால் பணமும் மற்றும் எல்லாம், நான் விரும்புகிற ஒவ்வொன்றும் வரத்தான் வேண்டும். ஏனெனில் அவை எனது அடிமைகள்; நான் அவர் களுடைய அடிமையல்லன். பணமும் மற்றும் ஒவ் வொன்றும் வரத்தான் வேண்டும். வரத்தான் வேண் டும்— அதுதான் வார்த்தை. மனிதர்கள் எங்கே? அதுதான் கேள்வி.

708. நீங்கள் உங்களிடத்திலேயே அபாரமான நம்பிக்கை வைத்துக்கொள்ளுங்கள். நான் குழந் தையாயிருந்த பொழுது எனக்கிருந்த நம்பிக்கை யைப்போல, நான் அதை இப்பொழுது வேலை செய்து வருகிறேன். நித்திய சக்தி உங்களுடைய ஆத்மாவில் இருக்கிறதென்று உங்களில் ஒவ்வொரு வரும் உங்களிலேயே அந்த நம்பிக்கையை வைத்துக் கொள்ளுங்கள். நீங்கள் இந்தியா முழுதையும் புநர் உத்தாரணம் செய்வீர்கள்.

709. நாம் தெரிந்தோ, தெரியாமலோ, நாம் வேதாந்தத்தையே நினைக்கிறோம்; நாம் வேதாந்தத்தி லேயே வாழ்கிறோம்; நாம் வேதாந்தத்தையே சுவா சிக்கிறோம்; நாம் வேதாந்தத்தில் மரிக்கிறோம்; ஒவ் வொரு ஹிந்துவும் அப்படியே செய்கிறான்.

710. வேதங்கள் ஒருபொழுதும் எழுதப்பட்டவையே யல்ல என்பதே கருத்து. அவை எப்பொழுதேனும் உற்பத்தியானவை யல்லவென்பதே கருத்து. தங்களுடைய சாஸ்திரங்கள் சரித்திர நிருபணத்துக் குள்பட்டவையாதலினாலே உண்மையாமென்று ஒரு கிறிஸ்தவப் பாதிரியார் என்னிடம் ஒருதரம் சொன்னார். அதற்கு நான் "என்னுடையது சரித்திர நிருபணத்துக் கப்பாற்பட்டது; ஆகையினால் அவை உண்மையாம்; உங்களுடையவை சரித்திர சம்பந்தமுள்ளவையா யிருக்கிறதினாலே சமீபத்தில் ஒரு மனிதனால் செய்யப்பட்டவை உங்களுடையது மனுஷ்யனால் செய்யப்பட்டது, என்னுடையது அப்படியல்ல; அவை சரித்திர சம்பந்தமுள்ளதாயில்லாததே அவை யுண்மை யென்பதற்கு அத்தாக்ஷியாம் என்று மொழி கூறினேன்.

711. மகம்மதிய அரசாக்ஷி காலம் முழுதிலும், சைதன்யரைத் தவிர, மதாசார்யர்கள் எல்லோரும் தென்னிந்தியாவிலேயே பிறந்தார்கள்; இப்பொழுது இந்தியாவை உண்மையில் ஆட்சிபுரிந்து வருவது தென்னிந்தியாவின் புத்தி சக்தியேயாம்; ஏனெனில் சைதன்யர் கூட மாத்வர்களுடைய கட்சியைச் சேர்ந்தவர்.

712 நீ என்ன வேண்டுமோ அதை உண்ணலாம். ஆகாரம் ஒன்றே சத்துவத்தைப் பரிசுத்தப் படுத்துமானால் குரங்குக்குப் பாலும் சோறும் என்

றென்றும் கொடுத்து வளருங்கள். அது யோகியாய் விடுமா? அப்பொழுது பசுக்களும் மான்களும் பெரிய யோகிகளாய் விடும். கூறப்பட்டபடி, அடிக்கடி ஸ்நாநம் செய்வதினால் மோக்ஷம் அடைய முடியுமானால், மீன்கள் முதலில் மோக்ஷமடையும்.

713. இந்தத் தேசத்திலே இன்று நான்கு ஜாதிகள் எங்கேயுள்ளன? எனக்கு மறுமொழி கூறுங்கள்; நான்கு ஜாதிகளை நான் பார்க்கிறதில்லை. தலையில்லாமல் தலை வலி யென்று நமது வங்காளி பழமொழி கூறுகிறது போல நீங்கள் இந்த வர்ணாச்ரமத்தை இங்கே உண்டுபண்ண விரும்புகிறீர்கள். இங்கு நான்கு ஜாதிகள் இல்லை. நான் பிராஹ்மண ஜாதியையுமே பார்க்கிறேன். க்ஷத்திரியர்களும் வைச்யர்களும் இருந்தால், அவர்கள் எங்கே? பிராஹ்மணர்களாகிய நீங்கள் அவர்களை ஒவ்வொரு ஹிந்துவும் செய்யவேண்டிய மாதிரி - எக்ஞோபவீதத்தை எடுத்துக்கொண்டு வேதங்களை படிக்குமாறு ஏன் ஆக்ஞாபிக்கவில்லை? வைச்யர்களும் க்ஷத்திரியர்களுமில்லாவிட்டால், பிராஹ்மணர்களும் சூத்திரர்களுமேயிருந்தால், சூத்திரர்கள் மாத்திரம் உள்ள ஒரு தேசத்திலே பிராஹ்மணன் வசிக்கக் கூடாதென்று சாஸ்திரங்கள் கூறுகின்றன; ஆகையால் மூட்டை கட்டிக்கொண்டு போய் விடுங்கள்! நீங்கள் சென்ற ஆயிரம் வருஷங்களாக இருக்கிறது போல, மிலேச்ச ஆகாரத்தை யுண்டு கொண்டும் மிலேச்ச அர

சாகரத்தின் மீது இருந்து கொண்டும் இருக்கிற ஜனங்களைப்பற்றி சாஸ்திரங்கள் என்ன கூறுகின்றன வென்பது உங்களுக்குத் தெரியுமா? அதற்குப்பிராயச் சித்தம் என்னவென்று தெரியுமா? தன் கைகளாலே யே தன்னை எரித்துக்கொள்ளுதலே பிராயச்சித்தம். நீங்கள் ஆரியர்களெனப் பெயர் வைத்துக்கொண்டு ஆஷாடபூதிகளாயிருக்க விரும்புகிறீர்களா? மகா அலெக்ஸாண்டருடனே ஒரு பிராம்மணன் சென் றான். அவன் தான் ஒரு மிலேச்சனுடைய ஆகா ரத்தை யுண்டு விட்டதினாலே தன்னைத் தானே எரித்துக்கொண்டு விட்டான்; உங்களுக்கு சாஸ்திரங் களிலே நம்பிக்கையிருந்தால், அது போல நீங்கள் உங்களை முதலில் எரித்துக் கொள்ளுங்கள். அது போன்று செய்யுங்கள். ஜன சமூகம் முழுதும் உங்க ளின் பாதங்களினடியில் இருக்கும்.

714. ஈச்வரன் இன்று ஜகத்தாக ஆகவில்லை, ஆனால் ஜகத் இல்லை, ஈச்வரன் இருக்கிறார்.

715. கிருஷ்ணசர்ப்பம் கடித்தால், அது தன் னுடைய விஷத்தை வியாதியஸ்தனிடமிருந்து உறிஞ்சி யெடுத்து விடுமானால், அவன் பிழைத்து விடுவா னென்று வங்காளத்திலே ஒரு பழைய மூட நம்பிக்கை யுண்டு. நல்லது பிராம்மணன் தன்னுடைய விஷத் தைத் தானே யுறிஞ்சி யெடுக்கவேண்டும். பிராம் மணரல்லாத ஜாதியாருக்கு நான் கூறுகிறேன். பொறுங்கள், அவசரப்படாதீர்கள். பிராம்மண

ளுடன் போராடுவதற்கு ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் புறப்பட்டு விடாதீர்கள்; ஏனெனில் நான் நிரூபித்தபடி, நீங்கள் உங்களுடைய சொந்தக் குற்றத்தினாலேயே துன்புற்றுக் கொண்டிருக்கிறீர்கள். ஆத்மஞானத்தையும் சம்ஸ்கிருத பாஷையையும் அலக்ஷியம்செய்யும்படி உங்களிடம் சொன்னவர் எவர்? இதுவரையில் நீங்கள் என்ன செய்து கொண்டிருந்தீர்கள்? ஏன் உதாசீனமாயிருந்தீர்கள்? உங்களைப்பார்க்கிலும் வேறு சிலருக்கு அதிகம் மூளையும் அதிகம் சக்தியும் அதிகம் சமர்த்தும் இருந்ததென்றால் ஏன் இப்பொழுது நீங்கள் வினைகுறித்துக் கோபமடைகிறீர்கள்? பத்திரிகைகளிலே வீண்வாதம் செய்து, போராடி உங்களுடைய சக்திகளை செலவழித்துக் கொள்வதற்குப் பதிலாக, உங்களுடைய சொந்த வீடுகளிலேயே சண்டையிட்டு, சச்சரவு செய்துகொள்வதற்குப் பதிலாக—இப்படி செய்தல் பாபகரமாம்—பிராஹ்மணனுக்குள்ள வித்தையைச் சம்பாதிப்பதிலே உங்களுடைய சக்திகளையெல்லாம் உபயோகித்துக் கொள்ளுங்கள்; விஷயம் முடிந்துவிடும். நீங்கள் ஏன் சம்ஸ்கிருத வித்துவான்களாகிறதில்லை? இந்தியாவிலுள்ள எல்லா ஜாதிகளுக்கும் சம்ஸ்கிருதக் கல்வியை அளிப்பதற்காக நீங்கள் ஏன் லக்ஷக்கணக்காகச் செலவழிக்கிறதில்லை? அதுதான் கேள்வி. இவ்விஷயங்களை நீங்கள் செய்கிற நிமிஷத்திலேயே நீங்

கள் பிராஹ்மணனுக்குச் சமமாகிறீர்கள். இந்தியாவில் அதுதான் சக்தியடைவதற்குள்ள ரகஸ்யம்.

716. இந்தியாவில் சம்ஸ்கிருதமும் கௌரவமும் ஒன்றாயிருக்கின்றன. உங்களுக்கு அவையுண்டாய் விட்டால் உங்களுக்கு விரோதமாக எவரும் எதுவும சொல்லத் துணியார். அதுவே ஒரு ரகஸ்யம்; அதை யெடுத்துக் கொள்ளுங்கள். பழய அத்வைதியினுடைய உவமையை உபயோகித்தால், ஜகத்முழுதும் ஒருவித தன் மயக்க ஸ்திதியிலே யிருக்கிறது. சக்தியாயுள்ளது திடசித்தமே. திடசித்தமுள்ள மனிதனே தன்னைச் சுற்றிலும் ஒரு ஒளியை வீசிக் கொண்டு தன்னுடைய மனத்திலுள்ள அதே சலன ஸ்திதிக்கு மற்றெல்லா ஜனங்களையும் கொண்டு வருகிறான். அத்தகைய ராக்ஷத மனிதர்கள் தோன்றுகிறார்கள். கருத்து என்ன? சக்தி வாய்ந்தவர் ஒருவர் தோன்றுகிறபொழுது, அவருடைய வசிகரத்துவம் அவருடைய நினைப்புக்களை நமக்குள் புகுத்தி விடுகிறது; நம்மில் அநேகர் ஒரே நினைப்புக்களையுடைத்தானவர்களாகிறோம். இவ்விதமாக நாம் சக்தி வாய்ந்தவர்களாகிறோம். ஸ்தாபனங்கள் எவ்வளவு சக்தி வாய்ந்தனவா யிருக்கின்றன? ஸ்தாபனங்கள் பிராபஞ்சிகமென்று கூறுதீர்கள். திருஷ்டாந்தமாக, நான்கு கோடி ஆங்கிலேயர்கள் இங்குள்ள முப்பது கோடி ஜனங்களை யாள்வது ஏன்? மனோதர்ம நியாயம் என்ன? இந்த நான்கு கோடி ஜனங்களும் தங்க

ளுடைய சித்தங்களை ஒன்று சேர்க்கிறார்கள். அது அகண்ட சக்தியாகிறது: முப்பது கோடியாகிற உங்களுக்கு ஒவ்வொருவருக்கும் பிறரிடத்திலிருந்து வேறான சித்தமிருக்கிறது. ஆகையால், ஒரு பெரிய வருங்காலத்து இந்தியாவை யுண்டுபண்ணுதற்கு ரகஸ்யம் முழுதும் ஸ்தாபனத்திலும் சக்தியைச் சேர்ப்பதிலும், சித்தங்களை ஒன்று படுத்துவதிலுமேயுள்ளன. முன்னரே என்து மனத்தின் முன்னே அதர்வணவேத சம்ஹிதையின் ஆச்சர்யமான சுலோகங்களுள் ஒன்று கிளம்புகிறது. அது "நீங்கள் எல்லோரும் ஒரே மனத்தினராயிருங்கள்; நீங்கள் எல்லாரும் ஒரே நினைப்புடையவர்களா யிருங்கள்; ஏனென்றால் பழய காலங்களிலே தேவர்கள் ஒரே மனத்தினரா யிருந்ததினாலே எக்ஞம் பெற்றுக் கொள்வதற்குத் தகுந்தவர்களானார்கள். மனிதர்களால் தேவர்கள் உபாசிக்கப்படுவது ஏனெனில், அவர்கள் ஒரே மனத்தினரா யிருந்தார்கள்" என்று கூறுகிறது. ஒரே மனமுடையதாயிருத்தல் ஜனசமுதாயத்தின் ரகஸ்யமாம்.

717. ஆத்மீக சக்தி செலுத்தப்படக் கூடிய ஒரே மார்க்கம் அன்பேயாம்.

718. ராமாநுஜர், சைதன்யர், கபீர் இவர்கள் இந்தியாவிலுள்ள தாழ்ந்த வகுப்பினர்களை யுயர்த்துவதற்குச் செய்த முயற்சிகள் அந்தப் பெரிய தீர்க்கதரிசிகளுடைய வாழ்நாட்களிலே அற்புதமான பலன்

கள் அடையப்பட்டனவென்று நிரூபிக்கின்றன; ஆயினும் பின்னர் அடைந்த தவறுதல்களுக்கு நியாயம் கூறவேண்டியிருக்கிறது. அந்த மகாத்மாக்கள் இறந்து அநேகமாக ஒரு நூற்றாண்டுக்குள்ளேயே அவர்களுடைய உபதேசங்களின் பலன் நின்று விட்டதேனென்பதற்குக் காரணம் காட்ட வேண்டியிருக்கிறது. ரகஸ்யம் இதோ இருக்கிறது. அவர்கள் தாழ்ந்த வகுப்பினரை உயர்த்தினார்கள், இவர்கள் மேலே வர வேண்டுமென்று மனப்பூர்வமாய் விரும்பினார்கள்; ஆனால் சாதாரண ஜனங்களுக்குள்ளே ஸம்ஸ்கிருத பாஷையைப் பரப்புவதற்குத் தங்களுடைய சக்திகளைச் செலுத்தவில்லை. உத்தமராம் புத்தர்கூட பொது ஜனங்கள் சம்ஸ்கிருத பாஷையைப் படிக்காமல் தடுத்தபொழுது ஒரு தவறு செய்தார். அவர் பலன்களை வேகமாயும் உடனேயும் விரும்பினார். அந்தக் காலத்துப் பாஷையாகிற பாலியில் மொழி பெயர்த்து போதித்தார். அது பெருமையானது தான்; அவர் ஜனங்களுடைய பாஷையிலே பேசினார்; ஜனங்கள் அவர் சொன்னதையறிந்து கொண்டார்கள். அது பெரியது தான். அது எண்ணங்களைச் சீக்கிரத்தில் பரப்பிற்று, வெகு தூரம் வியாபிக்கும்படி செய்தது; ஆனால் அதனுடன் கூட ஸம்ஸ்கிருதமும் பரவியிருக்க வேண்டும். அறிவு உண்டாயிற்று, ஆனால் அங்கே கௌரவமில்லை. நாக

ரிகம் இல்லை. அடிகளை யெதிர்த்து நிற்பதே நாகரீகமே யொழிய, அறிவுக் கூட்டமல்ல.

719. ஜாதிகளுக்குள் போராடிக் கொள்வதில் பயனில்லை அதனால் என்ன நன்மை ஏற்படும். அது நம்மை யின்னும் அதிகமாகப் பிரித்து விடும், இன்னும் அதிகமாகப் பலவீனப்படுத்தும், இன்னும் அதிகமாகக் கீழே வீழ்த்திவிடும். தனிச் சுதந்திரங்களும் தனியுரிமைகளும் பாராட்டி வந்த நாட்கள் போய் விட்டன.

720. பிராம்மணர்களுக்கு நான் கூறுகிறேன்,—"உங்கள் முன்னோர்கள் பெரியவர்களென்றும் பிறப்பினால் பெரியவர்களென்றும் நீங்கள் கர்வமடைதல் வீணேயாம்; அதை யுதறியெறிந்து விடுங்கள். உங்களுடைய சாஸ்திரங்களில் கூறியிருக்கிறபடியுள்ள பிராம்மணத் தன்மை உங்களிடம் இப்பொழுது இல்லை. ஏனென்றால், நீங்கள் இதனை நெடுநாட்களாக மிலேச்ச அரசர்களின் கீழ் வசித்து வந்து விட்டீர்கள். நீங்கள் உங்களுடைய முன்னோர்களுடைய வார்த்தையில் கொஞ்சமேனும் நம்பிக்கை வைக்கிறவர்களாயிருந்தால் இந்த நிமிஷத்திலேயே சென்று துஷா உமிகளிலே கொளுத்தப்பட்ட மெதுவான அக்கினியிலே விழுந்து பிராயச்சித்தம் செய்து கொள்ளுங்கள். குமரிலபட்டர் பவுத்தர்களைக் கொல்லும் பொருட்டு முதலில் பௌத்தர்களுடைய சிஷ்யனாகி, பின்னர் அவர்களைக் கொன்றார். கடைசியாகத் தாம்

செய்த பாபத்துக்குப் பிராயச்சித்தமாக துஷானலத்திலே விழுந்து விட்டார். அப்படிச் செய்யப் போதிய தைரியம் உங்களுக்கு இல்லையானால், உங்களுடைய பலவீனத்தை ஒப்புக்கொள்ளுங்கள், உதவி புரியக் கரத்தை நீட்டுங்கள், எல்லோருக்கும் அறிவுக் கதவுகளைத் திறந்து விடுங்கள், கீழே போட்டு மிதிக்கப்படுகின்ற பொது ஜனங்களுக்கு அவர்களுடைய நியாய்மான பாத்தியதைகளையும் ஸ்வதந்திரங்களையும் இன்னுமொருமுறை கொடுங்கள்."

721. உலகினர் ஜீவிதத்தை நேசிக்கின்றனர்; சந்யாசி மரணத்தை நேசிக்கின்றான்.

722. மரணத்தை நேசிப்பதென்றால் என்ன? நாம் மரிக்க வேண்டும், அது நிச்சயம்; அப்படியானால் நாம் ஒரு காரியத்தின் பொருட்டு மரிப்போம்.

723. பலமே யுருவாக வந்தவன் போன்றும் ஆனால் ஒரு ஸ்திரீயினுடைய ஹிருதயத்தையுடைத்தாயு மிருப்பவனே உண்மையான மனிதன்.

724. சுதந்திரங்களும் உரிமைகளும் மற்ற விஷயங்களும் நட்பின் மூலமாகவே உண்டாக முடியும்; சம அந்தஸ்து வாய்ந்த இருவர்களுக்குள்ளேயே நட்பு எதிர்பார்க்கப்பட முடியும். இருவரில் ஒருவன் பிச்சைக்காரனாயிருந்தால் என்ன நட்பு இருக்க முடியும்?

725. முடிவற்ற நம்பிக்கை முடிவற்ற ஆசையை உண்டுபண்ணுகிறது.

726. நமக்கு வேண்டியது யாதெனில், ஜடவுலகத்திலே அத்வைதத்தைக் கொஞ்சம் அநுபவத்திற் கொண்டு வருதலேயொழிய, அவ்வளவு ஆத்மஞானமல்ல. முதலாவது, ஆகாரம்; பின்னர் மதம்.

727. இங்கு இரண்டு குற்றங்கள் இருக்கின்றன; முதலாவது, நமது பலவீனம்; இரண்டாவது, நமது பகைமை, நமது வரண்ட ஹிருதயங்கள். நீங்கள் லக்ஷக்கணக்கான கொள்கைகளைப் பேசலாம்; உங்களுக்குள் கோடிக்கணக்கான வகுப்புக்கள் இருக்கலாம்; ஆ, ஆனால், உணர்வதற்கு உங்களுடைய வேதம் உங்களுக்குப் போதிக்கிறதுபோல அவர்களுக்காக உணர்வதற்கு உங்களுக்கு ஹிருதயம் உண்டாகிறவரையில், அவர்கள் உங்களுடைய சரீரங்களின் பாகங்களேயென்று நீங்கள் காண்கிறவரையில் நீங்களும் அவர்களும், எளியவர்களும் தனவந்தர்களும், சாதுவும் பாபியும் நீங்கள் பிரஹ்மம் என்று சொல்கிற ஒரு அகண்ட வஸ்துவினுடைய பாகங்களேயாமென்று நீங்கள் அனுபவத்திலறிந்து கொள்கிறவரையில் அதெல்லாம் பயனில்லை.

728. இரண்டு உள்ளவரையில் பயம் நீங்குவதில்லை. ஒன்று இன்னொன்றைப் பார்க்காதபொழுது, இன்னொன்றை உணராதபொழுதுதான், அதெல்லாம் ஒன்றாயிருக்கும் பொழுதுதான்—அப்பொழுது

தான் பயம் நீங்குகிறது, அப்பொழுதுதான் மரணம் போய்விடுகிறது, அப்பொழுது தான் சம்சாரம் மறைந்துவிடுகிறது.

729. நீ முழுவதுமாயிருக்கிற பொழுதுதான், நீ அமரத்தன்மை வாய்ந்தவனாகிறாய். நீ ஜகத்தாகும் பொழுதுதான் பயமற்றவனாயும் மரணமற்றவனாயும் ஆகிறாய்.

730. நீ உனக்குத்தானே என்ன சொல்லிக் கொள்கிறாயோ அதையே நீ நம்புகிறாய்.

731. ஒரு வஸ்துவை பொருளென்றும் குண மென்றும் பிரித்தல் தத்துவ சாஸ்திரிகளுடைய மூளை களிலேயுள்ள ஜடாதீதமான ஒன்று; ஏனெனில் வெளியே ஒரு கார்யமும் இருக்கமுடியாது.

732. பொய்யானதைத திருத்துவதற்கு ஒரே மார்க்கம்; யாதெனில் உண்மையானதை யளிப்பதே யாம்.

733. போலித்தன்மை, கோழையான போலித் தன்மை ஒருபொழுதும் அபிவிருத்திக்கு மார்க்க மாகாது. அது மனிதனில் பயங்கரமான வீழ்ச் சிக்கு அறிகுறியாம். ஒருவன் தன்னைத்தானே வெறுக்க ஆரம்பித்து விட்டால், கடைசியடி வந்து விட்டது. மேனாடு கூறுகிறது: "செய், செய்தலினால் உனது சக்தியைக் காண்பி." இந்தியா கூறுகிறது: "துன்பங்களைச் சகித்தலினால் உனது சக்தியைக் காண்பி." ஒரு மனிதன் எவ்வளவு அதிகமாக

உடைத்தாயிருக்கலா மென்பதை மேனாடு தீர்மானித்திருக்கிறது. ஒரு மனிதன் எவ்வளவு கொஞ்சம் உடைத்தாயிருக்கலா மென்பதை இந்தியா தீர்மானித்திருக்கிறது.

734. மிக மிக விநோதமான விஷயம் யாதெனில் அந்நாட்களிலுள்ள யுத்த விதியாம். பகலில் சண்டை முடிந்து மாலையானவுடனே எதிர்கக்ஷிகள் நல்ல நண்பர்களாயிருப்பார்கள்; ஒருவர் மற்றவருடைய கூடாரங்கட்குச் செல்லுதல்கூட உண்டு; ஆயினும், காலையானவுடனே, மறுபடியும் அவர்கள் ஒருவரோடொருவர் யுத்தம் செய்ய ஆரம்பித்து விடுவார்கள். மகம்மதியர்களுடைய படையெடுப்புக்காலம் வரையில் ஹிந்துக்கள் அனுஷ்டித்துவந்த விநோதமான குணம் அது. மறுபடியும் குதிரையின்மேல் இருக்கும் ஒருவன் ஒரு காலாட்படை வீரனை யடிக்கக்கூடாது. ஆயுதத்திலே விஷம் சேர்க்கக்கூடாது; சரிசமமல்லாத போராட்டத்திலாவது, அயோக்கியமாகவாவது எதிரியைத் தோற்கடிக்கக் கூடாது. எவரேனும் இந்த விதிகளை விலகிநடந்தால், அவர் அவமானத்துக்குட்படுத்தப்பட்டு, விலக்கப்பட்டு விடுவார். க்ஷத்திரியர்கள் அம்மாதிரி பயிற்று விக்கப்பட்டிருந்தார்கள். அந்நியர்களுடைய படையெடுப்பு மத்திய ஆசியாவிலிருந்து உண்டானபொழுது, ஹிந்துக்கள் படையெடுத்தவர்களை அதேமாதிரிதான் நடத்தினார்கள். அவர்கள் அவர்களை அநேகம்தடவை தோற்கடித்

தார்கள், அநேக தடவைகளில் அவர்களுக்கு வெகுமதிகள் முதலிய கொடுத்து அவர்களை அவர்களுடைய தேசத்துக்குத் திருப்பியனுப்பினார்கள். ஏற்பட்டிருந்த சட்டம் யாதெனில், அவர்கள் வேறெவருடைய தேசத்தையும் பிடுங்கிக்கொள்ளக் கூடாது என்பதே. ஒருவன் தோற்கடிக்கப்பட்டால், அவனுடைய அந்தஸ்துக்குத் தக்கவாறு சன்மானம் செய்து, அவனையவனுடைய தேசத்துக்குத் திருப்பி அனுப்பவேண்டும்.

735. மதமென்பது பேச்சன்று, அல்லது கோட்பாடுகளன்று, அல்லது கொள்கைகளன்று, கக்ஷிவாதமுமல்ல. மதமானது வகுப்புக்களிலும் சபைகளிலுமிருக்க முடியாது. அது ஆத்மாவுக்கும் ஈசுவரனுக்குமுள்ள சம்பந்தமே, அது எப்படி ஒரு சபையாக ஆக்கப்படமுடியும்?

736 மதமானது க்ஷேத்திரங்கள் கட்டுவதிலாவது, ஜபாலயங்கள் கட்டுவதிலாவது பொதுப்பிரார்த்தனைகட்குச் செல்வதிலாவது இல்லை. அது புத்தகங்களில் அல்லது ஸ்தாபனங்களில் காணப்படுகிறதில்லை. மதமானது அநுபவத்திலேயே யுள்ளது.

737. உண்மையானது ஒன்றேயாயும் அதே காலத்தில் அநேகமாயும் இருக்கலாமென்ற ஒரே உண்மையை வெவ்வேறு நிலைமைகளிலிருந்து பார்க்க நாம் வெவ்வேறு தோற்றங்களை யடையலாமென்ற

இந்த மத்திய ரகஸ்யத்தை யறிந்துகொள்வதே செய்யப்பட வேண்டியது.

738. புறத்தேயுள்ள சக்தி எதுவும் எவ்வித செல்வாக்கையும் செலுத்த முடியாதபொழுது, தான் எவ்வித மாறுதலையும் உண்டுபண்ண முடியாத பொழுதுதான், ஸ்வதந்திரம் சாத்தியமாம். எல்லா நியந்தனைகளுக்குமப்பால், எல்லா நியதிகளுக்குமப்பால், எல்லாக் காரணகார்ய பந்தங்களுக்குமப்பால் உள்ள வஸ்துவுக்கே ஸ்வதந்திரம் சாத்தியமாம். வேறு வார்த்தைகளில் சொன்னால், மாறுதலற்ற தொன்றே ஸ்வதந்திரமாயிருக்கக் கூடும்; ஆகையால், அம்ருதத்தன்மை வாய்ந்தது.

739. நாடகமும் சங்கீதமும் மதமென்றே கருதப்படுகின்றன. எந்தப் பாட்டும்—அது காமப்பாட்டாயிருந்தாலும் சரியே, வேறாயிருந்தாலும் சரியே—மனிதனுடைய ஆத்மா முழுதும் அந்தப் பாட்டில் லயித்திருந்தால், அவன் மோக்ஷமடைந்து விடுகிறான்; அவன் வேறொன்றும் செய்ய வேண்டியதில்லை. அது நிஷ்டையைப் போலவே அதே லக்ஷியத்துக்கு இட்டுச் செல்கிறது என்று சொல்லப்படுகிறது.

740. எது ஜகத் விஷயத்திலே உண்மையாயுள்ளதோ, அது அதன் ஒவ்வொரு பாகத்தின் விஷயத்திலும் உண்மையே.

741. தன்னிடத்தில் தானே நம்பிக்கை வைக்க முடியாத மனிதன் வேறெதிலாவது நம்பிக்கை வைக்க முடியுமென்று எப்படி எதிர்பார்க்கக் கூடும்?

742. அவர்கள் (அவதார புருஷர்கள்) பேசுகிறபொழுது, உலகமானது கேட்டுத் தான் தீரவேண்டும். அவர்கள் பேசுகிறபொழுது, ஒவ்வொரு வார்த்தையும் நேராக வருகிறது; அது ஒரு வெடிக்குண்டு போல் வெடிக்கின்றது; பின்னை சக்தியில்லா விட்டால் வார்த்தையில் யாது உள்ளது?

743. மதமென்பது பேச்சல்ல, கொள்கையல்ல, புத்தி சம்மதமல்ல. அது நமது ஹிருதயங்களின் ஹிருதயத்திலே ஏற்படுகின்ற அனுபவமாகும்; அது ஈச்வரனை ஸ்பர்சித்தல், அது பரமாத்மாவுடனும் அதன் வெளிப்பாடுகள் எல்லாவற்றுடனும் சம்பந்தப் பட்டுள்ள ஆத்மாவே நான் என்று உணர்தல், அறிதலாம்.

744. தவறுதல்களின் மூலமாகவே நாம் மேன்மேலும் அறிவுடையவர்களாகிறோம்.

745. புத்தருடைய செய்தியை — அது ஒரு அபாரமான செய்தி — கேளுங்கள். நமது ஹிருதயத்திலே அதற்கு ஒரு இடமுண்டு. புத்தர் கூறுகிறார் "ஸ்வய நலத்தை வேரோடு களைந்து விடுங்கள், உங்களை ஸ்வய நலமுள்ளவர்களாக்குகின்ற ஒவ்வொன்றையும் வேரோடு களைந்துவிடுங்கள். மனைவி, மக்கள், குடும்பம் என்பது ஒன்றும் வேண்டாம்;

உலகினராயிராதீர்கள்; பரிபூர்வமாய் ஸ்வயநல மற்றவர்களாய் விடுங்கள்!!

746. கிருஷ்ணன் கூறுகிறார்:— "உனது கர்மத்திலே தீமையிருந்தாலும் கூட பயப்படாதே; ஏனெனில் தீமையேயில்லாத வேலையே கிடையாது." "ஈச்வரனிடத்து அதைச் சமர்ப்பித்து விடு; பலன்களை எதிர்பாராதே."

747. அநேகருக்கு அவர்கள் ஈச்வரனிடத்தில் நம்பிக்கை வைத்தால் மார்க்கமானது மிகவும் சுலபமாய் விடுகிறது.

748. ஸ்வய நலமற்றுச் செய்கை செய்தலின் மூலமாகவே பரிபூர்ணத்துவம் உண்டாகின்றது.

749. ஒரு சுருங்கிய எல்லைக்குள் நெடுநாள் அடைத்து வைக்கப்படக்கூடிய சக்தி உலகில் எதுவுமேயில்லை.

750. உலகுமுழுதிலும் ஆலோசனையற்ற பொது ஜனங்களுடைய மதங்கள் ஜகத்துக்கு வெளியேயுள்ள வரும், தேவலோகத்தில் வசிப்பவரும் அவ்விடத்திலிருந்து அரசாள்பவரும் தீயவர்களைத் தண்டிப்பவரும் நல்லவர்களை சன்மானிப்பவரும் மற்றுமான ஒரு கடவுளைப்பற்றியதாகவே இருக்கவேண்டும். அப்படித்தான் இருந்து வந்திருக்கின்றன.

751. அவச்யமாயுள்ளது பரிசுத்தமாம்; அவ்வொரு விஷயமே.

752. பிரகிருதி முழுதிலும் ஒருதரம் நேரிடுகிறது முன்னமே நேரிட்டிருக்க வேண்டும்; வரும் காலத்திலும் நேரிடவேண்டும். பிரகிருதியில் நியதியினால் கட்டுப்படாத ஒன்றுமேயில்லை. அதாவது, ஒருதரம் என்ன நேரிடுகிறதோ, அது நேரிட்டுக் கொண்டுதான் இருக்கவேண்டும், நேரிட்டுக்கொண்டுதான் இருந்திருக்க வேண்டும்.

753. இந்தியாவிலே மதத்தைப்பற்றியுள்ள புத்தகங்களிலே இந்த அநுபவ எண்ணத்தைப்பற்றிக் கூறாத புத்தகமே கிடையாது. மனிதன் ஈச்வரனை யறியவேண்டும், ஈச்வரனை யுணரவேண்டும், ஈச்வரனைப் பார்க்கவேண்டும், ஈச்வரனுடன் பேசவேண்டும். அதுதான் மதம்.

754. இவ்வுலகில் உண்மையானது கழித்தலில் அல்ல, கூட்டலிலேயே காணப்படுகின்றது.

755. உண்மையான மதமானது மனுஷ்யர்களுடைய போதனையினாலாவது புத்தகங்கள் படித்தலினாலாவது உண்டாகிறதில்லை; அது பரிசுத்தமும் விரதகன்மையுமுள்ள செய்கையினால் நம்முள் உள்ள ஆத்மாவில் உண்டாகின்ற எழுச்சியேயாம்.

756. மரணமென்பது அவஸ்தையின் மாறுதலேயாம்.

757. லக்ஷியத்தினுடைய சக்தி அனுபவ சாத்தியத்திலேயுள்ளது.

758. லக்ஷியத்தினுடைய உண்மையனுபவ சாத்தியத்திலேயுள்ளது.

759. அனுபவ சாத்தியத்தினுடைய ஜீவிதம் லக்ஷியத்திலேயுள்ளது.

760. க்ஷத்திரியத்தன்மை— நாம் அதன் மூலமாகவே பிராஹ்மணத்தன்மைக்குச் செல்லல் வேண்டும். முன் ஜன்மங்களிலே சிலர் சென்றிருக்கலாம்; ஆனால் இக்காலம் அதை நிரூபிக்கவேண்டும்.

761. இந்தியாவின் உத்தமோத்தம லக்ஷியம் பிராஹ்மணத் தன்மையடைதலேயாம். சொத்துக்களில்லை, ஸ்வயநலமில்லை, எந்தச்சட்டங்கட்கும் கீழ்ப்பட்டவர்களில்லை, சன்மார்க்கத்துக்குத் தவிர, எவ்வரசனுக்கும் கீழ்ப்பட்டவர்களில்லை.

762. பெரிய கார்யங்களைச் செய்பவர்கள் உரிமை பாராட்டுகிறதில்லை, உபயோகமற்ற சோம்பேறி மூடர்களே உரிமை பாராட்டுகின்றனர்.

763. எந்த மனிதனும் எந்த ஜன சமுகமும் ஸ்தூல சமத்துவமில்லாமல் ஸ்தூல ஸ்வதந்திரத்தையும் மன சமத்துவமில்லாமல் மன சுதந்திரத்தையும் அடைய முயற்சிக்க முடியாது.

764. அஞ்ஞானம், சமத்துவமின்மை, ஆசை இம்மூன்றும் மனுஷ்ய துக்கத்துக்குக் காரணங்களாம்.

765 அகண்டமாக, பிரஹ்ம வஸ்து ஒன்றே உண்மையானது; அந்யோந்ய சம்பந்த உண்மையாக, ஒரே பிரஹ்ம வஸ்துவின் வெவ்வேறு வெளிப்பாடு

களின்மேல் ஏற்படுத்தப்பட்டுள்ள வெவ்வேறு வகுப்புக்களெல்லாம், இந்தியாவிலாகட்டும், வேறெங்கேனுமாகட்டும். உண்மை தான்.

766. வித்தியாசம் மாதிரியிலேயேயில்லை, அளவிலேயே யுள்ளது.

767. மனிதன் பாபியென்று கூறாதே. "அவன் ஒரு தேவனென்று அவனிடம் சொல்லு. ஒருபிசாசு இருந்தாலும்கூட எப்பொழுதும் ஈச்வரனை தியானிப்பதே நமது கடமை, பிசாசை தியானிப்பதல்ல.

768. வேதாந்த சிம்ஹம் கர்ச்சிக்கட்டும். நரிகள் தங்களுடைய பொந்துகளுக்கு ஓடிப்போய் விடும்.

769. ஒருமதமானது பயன் பெறத்தக்கதாக இருக்க வேண்டுமானல், உற்சாகம் அவச்யமாம்.

770. மேனேக்கிச் செல்லும் அபிவிருத்தியைத் தடுப்பது அல்லது கீழ்நோக்கிவீழும் வீழ்ச்சிக்கு அநுகூலமாயிருப்பது எதுவோ அது பாபமாம். மேலேவந்து சமரசப்படுவதிலே உதவி புரிவது எதுவோ அதுவே புண்ணியமாம்.

771. கல்வியெனப்படுவது யாதெனில் மனுஷ்யனில் முன்னமேயுள்ள பரிபூர்ணத்துவத்தை வெளிப்படச் செய்தலேயாம்.

772. மதமென்பது யாதெனில், மனுஷ்யனில் முன்னமேயுள்ள தெய்வீகத்துவத்தை வெளிப்படுத்துதலேயாம்.

773. நமது தாழ்ந்தவகுப்பினருக்குச் செய்யப்பட்டக்கூடிய ஒரே ஊழியம் யாதெனில், அவர்களுக்குக் கல்வியளித்தலேயாம்; அவர்கள் இழந்துவிட்ட வியஷ்டித்தன்மையை விருத்தி செய்தலேயாம்.

774. கொடு, எடு, இதுதான் நியதி.

775. அன்பே ஜீவிதம், பகைமையே மரணம்.

776. விரிதலே ஜீவிதம், குவிதலே மரணம்.

777. நன்மை செய்வதே ஜீவிதம், பிறருக்கு நன்மை செய்யாதிருத்தலே மரணம்.

778. வளர்ச்சி, அதாவது விரிதல், அதாவது அன்பு, இதைத் தவிர, ஜீவிதம் என்றால் என்ன? எல்லா அன்பும் ஜீவிதமேயாம்; அது ஒன்றே ஜீவிதத்தின் நியதி; எல்லா ஸ்வய நலமும் மரணமேயாம்; இது இங்கும் சரி, இனிமேலும் சரி, உண்மையேயாம்.

779. ஜாக்கிரதை! உண்மையல்லாத ஒவ்வொன்றையும்பற்றி ஜாக்கிரதையாயிருங்கள்; உண்மையைப் பற்றி நில்லுங்கள், நாம் ஜயிப்போம், மெல்லவாயிருக்கலாம், ஆனல் நிச்சயம்.

780. அளவற்ற பொறுமை வகித்துக்கொள்ளுங்கள், ஜயம் உங்களுடையதே.

781. விசித்திரதை, அதாவது ஜாதி, இதுவே சிருஷ்டி.

782. பொதுவாக, எல்லா அறிவும் அபரஞானம், பரஞானம் என்று இருவகுப்புக்களாகப்

பிரிக்கப்பட்டிருக்கின்றது. ஒன்று மரிக்கும் வஸ்துக்களைப் பற்றியது; மற்றது ஆத்மஞானத்தைப் பற்றியது.

783. நாம் அசாதாரணமான, பிரக்ஞாதீத அருள் என்பது சாதாரண பிரக்ஞையின் ஓர் உயர்ந்த அபிவிருத்தியின் பலனேயாகும். நெடுங்காலம் இடைவிடாமற் செய்த முயற்சியினால் அடையப்படுவதாகும்.

784. அகண்ட பரிபூர்ணத்துவம், வெளிப்படுத்தப்படா விட்டாலும், ஒவ்வொருவரிடத்தும் உள்ளது.

785. எவனொருவன் எப்பொழுதும் எல்லா விஷயங்களிலும் இன்னொருவனால் ரக்ஷிக்கப்பட்டு வருகிறானோ, அவனுடைய தற்காப்புச் சக்தியானது ஒருபொழுதும் பரிபூர்ணமாய் வெளிப்பட முடியாது. மிகமிகப் பலமுள்ள வாலிபனும் எப்பொழுதும் அவனுடைய பெற்றோர்களால் குழந்தையைப்போலவே கருதப்பட்டுவந்தால் குழந்தையாகவேயிருந்து விடுகிறான்.

786. ஒவ்வொரு மனுஷ்ய ஹிருதயமும் இந்திரியாதீத ஆத்மீக உலகத்துடனே போக்குவரவு செய்து கொள்ளவும் அதிலிருந்து உதவிபெறவும் எப்பொழுதும் ஆவலுள்ளதாயிருக்கிறது.

787. ஜீவித வளர்ச்சியுடனேயே அதேகாலத்தில் மரணத்தின் விதையும் விதைக்கப்படுகிறது.

788. தனித்தனி வீடுகளுக்கு எந்த விதி பொருந்துகிறதோ, அது சமுதாயம் முழுதுக்கும் பொருந்துகிறது ; ஏனெனில் சமுதாயமென்பது தனித்தனி வீடுகளின் கூட்டம்தானே.

789, அறிவேஸ்வதந்திரம், அன்பேஸ்வதந்திரம்.

790. மூன்று மண்கட்டிகளையும் ஒரு சில குச்சிகளையும் வைத்துக்கொண்டு, இந்தத் தேசத்து (இந்தியா) சமையற்காரன் ஆக்குகின்ற அதிருசியான சோறும் குழம்பும் வேறெங்கும் கிடைக்காது. ஒரு ரூபாய் பெறும்படியான பழய காலத்துச் சாதாரணத் தறியொன்றை வைத்துக்கொண்டு, குழியிலே கால்களை வைத்துக்கொண்டு கஜம் இருபது ரூபாய் விலை பெறும்படியான நயம் துணிகளை இந்தத் தேசத்திலே தான் செய்ய முடியும். ஒரு கிழிந்த பாய், மண்விளக்கு, அது விளக்கெண்ணெயால் ஏற்றப்பட்டது — இவை போன்ற பொருள்களை வைத்துக்கொண்டு ஆச்சர்யமான வித்துவான்கள் இந்தத் தேசத்திலேயே உண்டாயிருக்கிறார்கள். அவலக்ஷணமும் அங்கப்பழுதுமுள்ள மனைவியினிடத்து எல்லாவற்றையும் பொறுத்துப்போகும் ஒருவித பற்றுதலும் உபயோகமற்றவனும் போக்கிரியாயும் உள்ள புருஷனிடத்து ஆயுள் முழுதும் செலுத்தப்படும் பக்தியும் இந்தத் தேசத்திலே தான் சாத்தியம்.

791. (ஞான விஷயத்திலே) இங்கிலாந்து, ஐரோப்பா, அமெரிக்கா இவற்றை ஜயிப்பது,— இது

ஒன்றே இப்பொழுது நமது பரம மந்திரமாயிருக்க வேண்டும்; அதிலேயே தேசத்து நன்மையுள்ளது.

792. அரை நூற்றாண்டாக ஆசாரச் சீர்திருத்தத்தைப்பற்றி ஒரு பெரிய "தடபுடல்" நடந்து வருகிறது. இந்தச் சென்ற பத்து வருஷங்களாக, இந்தியாவின் பலபல இடங்களினூடும் யாத்திரை செய்ததில், தேசத்தில் ஆசாரச் சீர்திருத்தச் சபைகள் நிரம்பியிருக்கக் கண்டேன். ஆனால், எவருடைய ரத்தத்தை உறிஞ்சி "கனவான்கள்" எனப்படுகிற ஜனங்கள் கனவான்களானார்களோ, இன்னும் கனவான்களாயிருக்கிறார்களோ, அவர்களுக்காக ஒரு சபையையும் நான் காணவில்லை.

793. கற்றுக் கொள்வதற்கு ஒன்றுமேயில்லையென்று நினைத்திருக்கிற மனிதன் அல்லது ஜனசமூகம் மரணத்தின் வாய்களிலே முன்னரே யிருக்கிறது.

794. ஆத்ம நேசமே ஆத்மத் தியாகத்துக்கு முதலாவது குரு.

795. ஞானம், அறிவு, ஐச்வர்யம், மனிதர், பலம், பராக்கிரமம், இன்னும் பிரகிருதி நம்மிடத்தில் ஒன்று சேர்த்து வைக்கிற எல்லாம், அவச்யம் நேரிடுகிறபொழுது, வியாபகம் செய்வதற்காகவே தான்.

796. சக்தியைச் சேர்த்தல் அதைப் பரப்புவது எவ்வளவு அவச்யமோ அவ்வளவு அவச்யமாம்; சொல்லப் போனால் இன்னும் அதிக அவச்யமாம்.

ஹிருதயத்திலே ரத்தம் சேர்தல் ஜீவிதத்துக்கு நீக்க முடியாத ஒரு நிபந்தனையாம் — சரீரம் முழுதும் அது வியாபிக்காமலிருந்தால், அது மரணமாம்.

797. லௌகிக அறிவும் ஆத்ம ஞானமும் நேர் எதிரியான விஷயங்களல்ல; ஆனால் ஒரே விஷயமே யாம் — ஒரே அகண்ட அறிவேயாம் — மிகமிகத் தாழ்ந்த அணுவிலிருந்து மிகமிக உத்கிருஷ்டமான பிரஹ்ம வஸ்துவரையில் அது எங்கும் நிறைந்து வியாபித்திருக்கிறது — அவை படிப்படி யபிவிருத்தியாம் வெவ்வேறு நிலைமைகளிலே அதே அறிவாயிருக்கிறது.

798. காலத்தினுடையவும் இடத்தினுடையவும் பிரதிகூலத்துவம்கூட மனிதனுடைய பலத்தினாலும் உறுதியினாலும் நன்றாக ஜயிக்கப்பட முடியும்.

799. மனுஷ்ய ஆத்மா அகண்ட அறிவுக்கு ஆதாரஸ்தானமாம்; வெளியேயிருந்து எது அதை ஒளிரச்செய்ய முடியும்?

800 அக்கினியை (ஆத்திரத்தை) உடைத்தாயிருங்கள், எங்கும் பரப்புங்கள். வேலை செய், வேலை செய். தலைமை வகிக்கும்பொழுது, ஊழியனாயிரு, ஸ்வயநலமற்றிரு; ஒரு ஸ்நேகிதன் இன்னொருவனைத் தனியாக தூஷித்தால் அந்த நண்பனுடைய பேச்சை யொருபொழுதும் கேட்காதே. எல்லையற்ற பொறுமையை வகித்துக்கொள், ஜயம் உன்னுடையது.

801. ஒருவன் உண்மையில் எதையடைவதற்கு யோக்கியதையுள்ளவனாயிருக்கிறானோ, அதை அவன் பெறாது தடுக்கக்கூடிய சக்தி பிரபஞ்சத்திலேயில்லை யென்று நம்புகிறேன்.

802. ஞானம் எல்லாம் சரிதான், ஆனால் அது வரண்ட புத்தியாய்விடுமென்ற அபாயமுள்ளது. அன்பு பெரிதுதான், சிறந்ததுதான்; ஆனால் அது பொருளற்ற உணர்ச்சியாக மரித்துவிடும்.

803. நாமரூப முடையதெல்லாம் நாமரூபமே யில்லாத ஏல்லாவற்றுக்கும் கீழ்ப்பட்டதாம்.

804. ஹிந்துஜாதி முழுதும் அழிந்து, ஒரு புதிய ஜாதி பூமியிலே நுழைந்து கொண்டாலொழிய— கிழக்கே அல்லது மேற்கே முயற்சிக்கலாம்— அத்தகைய ஒரு விஷயம் ஒருபொழுதும் உண்டாகாது. இந்தியா, தான் மரிக்கிறவரையில், ஒருபொழுதும் ஐரோப்பாவாக ஆகமுடியாது.

805. எல்லாப்பூவுலகு அன்பும் சரீரம், சரீரம், சரீரம், இதிலிருந்தே உண்டாகிறது. ஆண், பெண் என்ற வேற்றுமையில்லை, உடைமைகளில்லை; இவை நீங்கும்பொழுது, ஞானதிருஷ்டி யுண்டாகின்றது, ஆத்மாவானது தனது அகண்ட சக்தியைத் திரும்பவும் அடைகிறது.

806. ஒவ்வொரு புதிய நினைப்பும் எதிர்ப்பை யுண்டாக்கத்தான் வேண்டும்,— நாகரிகமுள்ளவர்களிடத்திலே மரியாதையுடன் கூடிய பரிகாசத்தை

யும், காட்டுமிராண்டிக்குணமுள்ள இழிந்தவர்களிடத்திலே ஊளைக் கூச்சல்களையும் ஆபாசமான நிந்தனைகளையும் உண்டாக்கத்தான் செய்யும்.

807. ஜட சாஸ்திரமானது உலகின் செழிப்பை மாத்திரம் அளிக்கமுடியும், ஆத்மீக சாஸ்திரமானது நித்திய வாழ்க்கைக்கேயாம்.

808. ஜீவிதமும் மரணமும் கலந்த, நன்மையும் தீமையும் கலந்த, அறிவும் அறிவின்மையும் கலந்த இந்தக் கலப்பு மாயையெனப்படுகிறது.

809. சூர்யன் நமது தலைக்குமேலிருக்கிறபொழுதுதான் சாயையே கிடையாது.

810. என்து பிதா ஒரு பிதாவர்யிருந்தார்; ஆயினும் எனது அன்பர்களில் எவரும் வக்கீலாவது எனக்குப் பிடிக்கவில்லை. எனது குரு அதை (எவரும் வக்கீல் உத்தியோகம் வகிப்பதை) வெறுத்தார்; எந்தக் குடும்பத்தில் அநேகர் வக்கீல்களாயிருக்கிறார்களோ அந்தக் குடும்பமானது துக்கத்தையடைவது நிச்சயம் என்று நான் நம்புகிறேன்.

811. ஜீவிதமென்பது ஒரு தொடர்ச்சிப் போராட்டங்களும் மயக்கத் தெளிவுகளுமேயாம்.

812. மனுஷ்யவர்க்கத்துக்கு உதவி செய்ய விரும்புகிறவர்கள் தங்களுடைய சொந்த சுகத்தையும் துக்கத்தையும், பெயரையும் கீர்த்தியையும், எல்லாவித ஸ்வய நலங்களையும் எடுத்து ஒரு மூட்டையாகக் கட்டி, அவற்றைக் கடலுக்குள்ளே யெறிந்து விட்டு,

பின்னர் ஈச்வரனிடம் வரவேண்டும். ஆசார்யர்களனைவரும் சொன்னதும் செய்ததும் அதுதான்.

813. சாதாரண மனிதனுடைய கடமை யாதெனில் ஜனசமூதாயமாகிற "ஈச்வர" னுடைய ஆக்ஞைகளுக்குக் கீழ்ப்படிதலேயாம், ஆனால் ஜோதி புத்திரர்கள் ஒருபொழுதும் அப்படி செய்கிறதில்லை.

814. நம்முடைய தாய் நாட்டுக்கு ஹிந்து மதம், மகம்மதிய மதம் ஆகிற இரண்டு பெரிய கோட்பாடுகளினுடையவும் சேர்க்கையே — வேதாந்த மூளையும் இஸ்லாம் சரீரமும் — இது ஒன்றே நம்பிக்கை.

815. இது ஒரு வேடிக்கையான உலகம், நீ பார்த்தவர்களுக்குள்ளே மிகமிக வேடிக்கையானவைபயன் அவனே — அகண்ட அன்பனே! வேடிக்கை, அல்லவா? சகோதரத்துவம் அல்லது விளையாட்டுத் தோழமைத்துவம் — உலகமாகிற இந்த விளையாட்டு நிலத்திலே விளையாட விடப்பட்டிருக்கும் துள்ளி விளையாடும் குழந்தைகளின் ஒரு பள்ளிக்கூடம்! அல்லவா? எவரை ஸ்தோத்திரம் செய்வது, எவரைக் குறைகூறுவது, அதெல்லாம் அவருடைய விளையாட்டே. அவர்கள் நியாயம் விரும்புகிறார்கள்; ஆனால் அவரை எப்படி நியாயங்களினால் விரித்துக் கூறமுடியும்? அவர் மூளையற்றவர், அவருக்கு நியாயமேயில்லை. அவர் சிறு மூளைகளுடனும் யுக்தியுடனும் கூடிய நம்மை முட்டாள்களாக்குகிறார்.

816. மதத்தினுடைய ரகஸ்யம் கொள்கைகளில் இல்லை, ஆனால் அநுஷ்டானத்தில் இருக்கிறது. நன்மையா யிருப்பதும் நன்மையைச் செய்வதும் — அது தான் மதம் முழுதும்.

817. சத்தியத்தையும் அன்பையும் உண்மையையும் எதிர்ப்பதற்கு எதனாலும் முடியாது. நீ உண்மையுள்ளவனா யிருக்கிறாயா? மரணம் வரினும் கூட ஸ்வய நலமற்றிருக்கிறாயா? அன்புள்ளவனாயிருக்கிறாயா? அப்படியாயின், பயப்படாதே, மரணத்தைக் கண்டு கூட பயப்படாதே.

818. ஒரு லௌகீகப் புழுபோன்றிருப்பதினும் சத்தியத்தைப் போதித்துக்கொண்டு, கடமையாகிற களத்திலே மரிப்பது மேன்மையே, மிகமிக மேன்மையே.

819. சங்கீதம் மிகமிக சிரேஷ்டமான கலையாம்; அறிந்துகொள்பவர்களுக்கு அதுவே மிகமிக சிரேஷ்டமான உபாசனையாம்.

820. எனக்கு ராஜீய விஷயத்தில் நம்பிக்கை கிடையாது. ஈச்வரனும் சத்தியமுமே உலகிலுள்ள ராஜீய விஷயமாம், மற்றதெல்லாம் அற்பமேயாம்.

821. நீ உன்னையே தலைவனாக முன்னே வைத்துக்கொண்டால், உனக்கு உதவி செய்வதற்கு எவரும் வரமாட்டார்கள்...... நீ ஜயமடைய விரும்பினால் முதலில் "நான்" என்பதைக் கொன்றுவிடு.

822. தைர்யத்தை யிழந்துவிடாதே, உன்னுடைய குருவிடத்து உனக்குள்ள நம்பிக்கையை இழந்துவிடாதே, ஈச்வரனிடத்துள்ள நம்பிக்கையை இழந்துவிடாதே. இம்மூன்றும் உன்னிடமுள்ளவரையில், உனக்குத் தீங்குசெய்ய எதனாலும் முடியாது.

823. ஏகத்துவமென்பது சிருஷ்டிக்கு முன்னே; அநேகத்துவம்தான் சிருஷ்டியென்பது.

824. எவருடைய ஹிருதயமானது ஏழைகளின் பொருட்டு இரத்தம் சொரிகின்றதோ (அநுதாபப் படுகிறதோ) அவரை நான் மகாத்மா என்று கூறுகிறேன்; இல்லையேல், அவன் துராத்மாவே.

825. அடிமை யென்றாலும் கொடுங்கோலன் என்றாலும் ஒரு பொருளே.

826. இது (உலகு) துன்பப் பள்ளிக்கூடம்; மகாத்மாக்களும் தீர்க்கதரிசிகளும் அநுதாபம், பொறுமை, எல்லாவற்றுக்கும் மேலாக, பிரபஞ்சமே நமது காலடியில் துகள் துகளாகப் போனாலும் கூட நடுங்காத, அசையாத இரும்புச் சங்கற்பம் இவற்றைப் பயில்வதற்குள்ள பள்ளிக்கூடமுமாகும்.

827. தனவந்தர்கள் எனப்படுபவர்களை நம்பாதே, அவர்கள் உயிருடன் கூடியுள்ளவர்களாயிருப்பதைப் பார்க்கிலும் அதிகம் மரித்தவர்களாயிருக்கிறார்கள். நம்பிக்கை உங்களிடத்தில் — வணக்கமுள்ளவர்களிடத்தில், தாழ்ந்தவர்களிடத்தில் ஆனால் நம்பிக்கையுள்ளவர்களிடத்தில் உள்ளது. ஈச்வர

ளிடத்தில் நம்பிக்கை வையுங்கள்; அது தந்திரமன்று, ஒன்றுமில்லை. துன்புறுபவர்களுக்காக இரங்குங்கள், உதவிக்கு மேலே பாருங்கள் — அது வரத்தான் செய்யும்.

828. தனவந்தர்கள், பெரியோர்கள் எனப்படுபவர்களை எதிர்பாராதீர்கள்; ஹிருதயத்தில் ஈரமில்லாமல், புத்திசாலித் தனத்தை மாத்திரம் வைத்துக்கொண்டு எழுதுகின்றவர்களையும் அவர்களுடைய துன்னிய சமாச்சாரப் பத்திரிகை வியாசங்களையும் லக்ஷியம் செய்யாதீர்கள். நம்பிக்கை — அநுதாபம், அதிதீவிர நம்பிக்கையும் அதிதீவிர அநுதாபமும்! ஜீவிதம் பெரிதன்று, மரணம் பெரிதன்று — பசி பெரிதன்று, குளிர் பெரிதன்று. ஈச்வரனுக்கு மேன்மையுண்டாவதாக — மேலே செல்லுங்கள், ஈச்வரனே நமது சைந்யாதிபதி. எவர் விழுகிறாரென்று பார்ப்பதற்குப் பின்புறம் திரும்பிப் பாராதீர்கள், முன்னே செல்லுங்கள், — மேலே செல்லுங்கள்!

829. ஆசியா நாகரிகவித்து இட்டது, ஐரோப்பா மனிதனை விருத்தி செய்தது, அமெரிக்கா ஸ்திரீயையும் பொது ஜனங்களையும் விருத்திசெய்து வருகிறது.

830. நீ ஏழையென்று நினைக்காதே; பணம் சக்தியன்று, ஆனால் நன்மையே, பரிசுத்தமே. உலகு முழுதும் அது அப்படித்தான் இருக்கிறது என்பதை வந்து பாருங்கள்.

831. உண்மையான "சக்தி—உபாசகன்" யார் என்று உனக்குத் தெரியுமா? ஈச்வரன் ஜகத்திலே சர்வ வியாபகமுள்ள சக்தியாயிருக்கிறானென்பதை அவனே அறிகிறான். அந்தச் சக்தியின் வெளிப்பாட்டை ஸ்திரீகளிடத்தில் அவனே பார்க்கிறான்.

832. இந்தியாவின் உள்ளேயும் புறம்பேயும் மனுஷ்யவர்க்கம் அபிவிருத்தி செய்திருக்கிற சிறந்த எண்ணங்களை மிகமிக இழிந்தவர்களுடைய, மிகமிக எளியவர்களுடைய வீடுகளுக்குக் கொண்டு போய் அளித்து, அவர்கள் தாங்களே யோசிக்கும்படி விட்டு விட வேண்டுமென்பதே எனது கருத்து.

833. ஜாதியிருந்தாலும் சரி, ஜாதியில்லாவிட்டாலும் சரி, கொள்கையிருந்தாலும் சரி, கொள்கையில்லாவிட்டாலும் சரி, ஸ்வதந்திர நினைப்பாம் சக்தியையும் தனிப்பட்ட மனிதனுடைய செய்கையையும் தடுக்கின்ற எந்த மனிதனும் அல்லது வகுப்பும் அல்லது ஜாதியும் அல்லது ஜனசமூகமும் அல்லது அமைப்பும்—அந்தச் சக்தி பிறருக்கு இம்சைசெய்யாவிட்டால் கூட,—பைசாசத்தன்மை வாய்ந்ததே. அழிந்து போகத்தான் வேண்டும்.

834. சிறந்த எண்ணங்களை வொவ்வொருவருடைய வீட்டுக்கும் கொண்டுவந்து, பின்னர் புருஷர்களும் ஸ்திரீகளும் தங்களுடைய சொந்தவிதியைத் தீர்மானித்துக் கொள்ளும்படி விட்டு விடுதற்கு ஒரு யந்திரத்தைச் சலனப்படுத்தி விடவேண்டுமென்பதே.

835. உங்களில்தானே நீங்கள் நம்பிக்கை வைத்துக்கொள்ளுங்கள், பெரிய திட நிச்சயங்களே பெருஞ் செயல்களுக்குத் தாய்களாகும்.

836. ஒரு ஜாதியும் ஒரு வேதமும் சமாதானமும் சமரசமும் ஏற்படும்பொழுது ஸத்யயுகம் உண்டாகுமென்று நான் நம்புகிறேன்.

837 பெருத்த கார்யங்கள் பெருத்த தியாகங்களினாலேயே செய்யப்படக் கூடும்.

838 மரணம் வரினும்கூட ஸ்வயநலமற்றிருந்து, வேலை செய்.

839. ஜீவிதத்துக்கு ஒரே அடையாளம் சலனமும் வளர்ச்சியுமென்பதை ஞாபகப்படுத்திக்கொள்.

840 சத்தியத்தையும் அன்பையும் உண்மையையும் எதிர்ப்பதற்கு எதனாலும் முடியாது. நீ உண்மையாயிருக்கிறாயா? மரணம் வரினும் ஸ்வயநலமற்றிருக்கிறாயா? அன்புடனிருக்கிறாயா? அப்படியானால் பயப்படாதே, மரணம் வரினும் பயப்படாதே.

841. ஆசியாக்கண்டத்தினர் உலகிலே மிகமிக தர்மசிந்தைவாய்ந்த ஜாதியார் என்று நான் உண்மையாக நம்புகிறேன்; ஆனால் அவர்கள் மிகவும் எளியவர்கள்.

842. ஹிந்து சமுதாயத்தை யபிவிருத்தி செய்வதற்கு மதத்தை யழிக்கவேண்டிய அவசியமில்லையென்றும், சமுதாயத்தினுடைய இந்த ஸ்திதி மதம்

காரணமாக ஏற்பட்டதல்லென்றும், ஆனால் மதம் எப்படி யநுஷ்டிக்கப்படவேண்டுமோ அந்த மாதிரி சமுதாயத்திலே அநுஷ்டிக்கப்பட வில்லையென்றும் நான் கூறுகிறேன்.

843. தற்கால ஹிந்து சமுதாயமானது ஆத்மீக புருஷர்களுக்கே ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. மற்ற எல்லோரையும் ஈவிரக்கமேயில்லாமல் நசுக்கி விடுகிறது. ஏன்? உலகத்தை அதன் அற்பவிளையாட்டுக்களுடன் கொஞ்சம் போகிக்க விரும்புகிறவர்கள் எங்கே செல்வார்கள்? நமது மதம் எல்லோரையும் எடுத்துக் கொள்கிறதுபோல, நமது சமுதாயமும் எடுத்துக்கொள்ள வேண்டும்.

844. விதவையினுடைய கண்ணீரைத் துடைக்க முடியாத அல்லது அநாதைப்பையனுடைய வாயில் ஒரு ரொட்டித்துண்டு அளிக்க முடியாத கடவுளை அல்லது மதத்தை நான் நம்புகிறதில்லை.

845. உன்னிடம் அன்பு இருக்கிறதா?— நீ சர்வசக்தி வாய்ந்தவன். நீ பரிபூர்ணமாய் சுயநலமற்றிருக்கிறாயா? அப்படியானால் நீ எதிர்க்கப்பட முடியாதவனாயிருக்கிறாய். எங்கும் விலைபோவது நன்னொழுக்கமே. ஈச்வரனே கடலின் ஆழங்களிலேயுள்ள தமது குழந்தைகளை ரக்ஷிக்கின்றார்.

846. கண் நெற்றியிலேயே உள்ளது, பின்புறத்தி லில்லை. ஆதலால் திரும்பிப்பாராது மேலே செல்வாய்.

847. எல்லாம் நன்றாய்விடும் என்று நிச்சயமாயிருக்கிறபொழுது மூடர்களும் எழுந்து நிற்கலாம், பயங்காளிகளும் தீரர்களுடைய தன்மையை அடைந்துகொள்ளலாம்; ஆனால் உண்மையான வீரன் மௌனமாக வேலை செய்கிறான்.

848. நான் ஈச்வரனிடத்தில் நம்பிக்கைவைக்கிறேன், நான் மனிதனிடத்தில் நம்பிக்கைவைக்கிறேன். துன்புறுபவர்களுக்கு உதவி புரிவதில் நான் நம்புகிறேன், பிறரை ரட்சிக்கும்பொருட்டு நரகத்துக்கும் செல்வதில் எனக்கு நம்பிக்கையுண்டு.

849. எந்த மனிதனும், எந்த ஜனசமூகமும் பிறரைப் பகைத்துக்கொண்டு உயிர் வாழமுடியாது.

850. என்றைய தினம் மிலேச்சன் என்ற பதத்தை இந்தியர்கள் உண்டுபண்ணி, பிறருடன் உள்ள சம்பந்தத்தை நிறுத்திவிட்டார்களோ அன்றைய தினமே இந்தியாவின் வீழ்ச்சி தீர்மானிக்கப்பட்டது.

851. ஜடாதீத மூடத்தனத்தினால் உனது மூளையைக் குழப்பிக்கொள்ளாதே, உனது பிடிவாதத்தினால் பிறரையும் தொந்தரவு செய்யாதே.

852 பொறாமையே அடிமைப் படுத்தப்பட்டிருக்கும் ஒவ்வொரு ஜாதியினுடையவும் துர்க்குணம் பொறாமையும் ஒற்றுமைக்குறைவுமே அடிமைத்தனத்துக்குக் காரணமாகி, அதை நீடித்திருக்கும்படி செய்கின்றது.

853. வேலை செய்வதில் திருப்தியடை; எல்லா வற்றுக்கும் மேலாக, உனக்குத்தானே நீ உண்மையா யிரு.

854. சத்தியத்தின் ஒரு வார்த்தைகூட ஒரு பொழுதும் விற்கமுடியாது; யுகக்கணக்காக அது குப்பையின் கீழ் மறைக்கப்பட்டிருக்கலாம், ஆனல் சீக்கிரத்திலாவது பின்னராவது வெளிப்படத்தான் செய்யும். சத்தியம் அழிவற்றது, புண்ணியம் அழி வற்றது, பரிசுத்தம் அழிவற்றது.

855. பரிசுத்தமாயிரு — ஈச்வரனிடத்தில் நம் பிக்கைவை, எப்பொழுதும் அவரையே சார்ந்திரு, நீ நல்லபாதையில் இருக்கிறாய்; எதுவும் உனக்கு விரோதமாக நிற்கமுடியாது.

856. எவருடைய ஹிருதயம் எளியவர்களுக் காக இரத்தம் சொரிகின்றதோ, அவரை நான் மகாத்மா என்று கூறுகிறேன், இல்லையேல் அவன் துராத்மாவே.

857. லக்ஷக்கணக்கானவர்கள் பசித்தும் அறி யாமையிலும் வாழ்ந்து கொண்டிருக்கும் வரையில், அவர்களுடைய செலவில் படிப்பிக்கப்பெற்றும் அவர் களைப்பற்றி அணுவளவும் கவலைப்படாதிருப்பவனை நான் துரோகியென்று கூறுகிறேன்.

858 எளியவர்களை நசுக்கி அவர்களுடைய பணத்தையெல்லாம் பெற்றுக்கொண்டு நேர்த்தியாக உலாவித்திரிபவர்களை, இப்பொழுது பசியால் வருந்

தும் காட்டு மிராண்டிகளைவிட மேம்படாத ஸ்திதியிலிருக்கும் இருபதுகோடி ஜனங்களுக்கு ஒன்றுமே செய்யாமலிருக்கிற வரையில், இழிந்த ஜனங்கள் என்று கூறுகிறேன்.

859. உண்மையான ஞானி எங்கும் விசாலமான ஹிருதய முடையவனுயிருக்கிறன்.

860. எவன் நன்றாக அடங்கி வேலைசெய்ய முடியுமோ அவனே மிகமிகச் சிறந்த அரசன்.

861. மரணம் வரினும் உண்மையாயிரு!

862. மிகமிக சிரேஷ்டமாயுள்ளது வாழ்க்கையே; ஜனங்களுடைய ஹிருதயத்தைக் கலக்குவதற்கும் அது ஒன்றேதான் வழி.

863. சோம்பேறித்தனத்தை உதறியெறிந்துவிடு; இங்குள்ள அல்லது இனிமேல் எதிர்பார்க்கப்படுகிற போகங்களனைத்தையும் உதறி யெறிந்துவிடு.

864. ஒவ்வொரு ஜீவனும் ஒரு நட்சத்திரமாம்; ஒவ்வொரு நட்சத்திரமும் அந்த அகண்டமான, நீல நிறமான, அந்த நித்திய ஆகாயமான ஈச்வரனிடத்திலே வைக்கப்பட்டிருக்கின்றன.

865. எனக்குத் தாழ்மையில் நம்பிக்கையில்லை. நான் சமதர் சத்துவத்தில் நம்புகிறேன்.

866. சாதாரண மனிதனுடைய கடமையாவது அவனுடைய "கடவுளா"கிய ஜனசமுகத்தின் கட்டளைகளுக்குக் கீழ்ப்படிந்து நடத்தலாம்; ஆனல்

ஞானபுத்திரர்கள் ஒருபொழுதும் அப்படி செய்கிற தில்லை. இது ஒரு நித்திய நியதி.

867. எல்லா நட்பும், எல்லா அன்பும் ஒரு கட்டுப்பாடே.

868. சூர்யனுக்குக் கீழே அல்லது மேலே எனக்கு வேலையென்று ஒன்று கிடையாது.

869. ஸ்வதந்திரம்— முக்தி— இதுவே எனது மதமெல்லாம்; அதையடக்க முயல்கின்ற ஒவ்வொன்றையும் நான் எதிர்த்து அல்லது அதினின்றும் ஓடி நீக்கிவிடுவேன்.

870. உலகமென்று ஜனங்கள் சொல்கின்ற மூடத்தனமாம் இந்த வலைப்பின்னலினின்றும் உன்னால் முடியுமானல் வெளியே வந்துவிடு.

871. ஹிருதயத்தை இழந்துவிடாதே; உனது குருவிடத்து உனக்குள்ள நம்பிக்கையை இழந்துவிடாதே, ஈச்வரனிடத்துள்ள நம்பிக்கையை இழந்துவிடாதே.

872. உலகத்தன்மையும் ஈச்வரத் தன்மையும் ஒன்ருகச் செல்லமுடியாது.

873. அளவற்ற பொறுமையும் அளவற்ற பரிசுத்தமும் முடிவற்ற விடாமுயற்சியும் ஒரு நற்கார்யத்தில் ஜயமடைவதற்குள்ள ரகஸ்யமாம்.

874. கேள்வி:-பிரதானமான உண்மையென்ன?

ஸ்வாமிகளின் மறுமொழி:— அந்தர்க்கதமாயுள்ள ஈச்வரத்துவமே; ஒவ்வொரு ஜீவனும், எவ்

வளவு இழிந்த தன்மையிலிருந்தாலும், ஈச்வரத்து வத்தினுடைய வெளிப்பாடேயாம். ஈச்வரத்தன்மை மூடுண்டு, காட்சியினின்றும் மறைபட்டுக்கிடக்கின்றது. இந்திய சிப்பாய்க் கலகத்திலே நடந்த ஒரு விஷயத்தை இப்பொழுது ஞாபகப்படுத்துகிறேன். எத்தனையோ வருஷங்களாக நித்தியமௌன விரதத்தைக் கைக்கொண்டிருந்த ஒரு சாமியார் ஒரு முகம் மதியனாலே கத்தியினால் குத்தப்பட்டார். அவர்கள் (சிப்பாய்கள்) கொலைபாதகனை அவர் முன்னே இழுத்துக்கொண்டு வந்து "ஸ்வாமி, ஒருவார்த்தை சொல்லுங்கள், அவனைக் கொன்றுவிடுகிறோம்" என்று கூச்சலிட்டார்கள். அநேகவருஷ மௌனத்துக்குப் பின்னர், அவர் மௌன வாயைத்திறந்து, தமது கடைசி மூச்சுடனே எனது குழந்தைகாள், நீங்களெல்லோரும் உண்மையை அறியவில்லை. அந்த மனிதன் கடவுளே' என்றார். இதனால் நாம் அறியவேண்டிய பெரியபாடம் யாதெனில், எல்லாவற்றுக்கும் பின்னே ஏகத்துவம் ஒன்று உள்ளது என்பதாம்.

875. சமுதாயம் அல்லது ராஜீயம் முதலிய எல்லா அமைப்புக்களுக்கும் அஸ்திவாரம் மனிதனுடைய நல்லெண்ணத்தின் மீது இருக்கிறது. ஜனப்பிரதிநிதி சபை இதை அல்லது அதைச் சட்டமாக்கிவிட்டதினாலேயே எந்த ஜனசமுகமும் பெரியதாக அல்லது நல்லதாக ஆகிறதில்லை. ஆனால் அந்தச்

சமுகத்தின் மனிதர்கள் நல்லவர்களாயும் பெரியவர்களாயுமிருப்பதினாலேயே ஆகிறது.

876. கேள்வி:—பெரியதொரு ராணுவசக்தியை யுடைத்தாயிராமல் எந்த ஜனசமுகமாவது எப்பொழுதாவது பெருமை பெற்றிருந்திருக்கிறதா?

ஸ்வாமிகளின் மறுமொழி:—இருந்திருக்கிறது. சீனு பெருமை பெற்றிருந்திருக்கிறது. இதர தேசங்களுக்குள், நான் சீன தேசத்திலும் ஜப்பானிலும் யாத்திரை செய்திருக்கிறேன். இன்று சீனதேசம் ஒரு ஒழுங்கற்ற வெறுங்கூட்டம் போன்றிருக்கிறது; ஆனால் அது பெருமைபெற்றிருந்த காலத்திலே, எந்த ஜனசமுகமும் இன்னும் அறியாத மிகமிகச் சிறந்த அமைப்பை அது உடைத்தாயிருந்தது. நாம் தற் காலத்தியவை என்று கூறுகின்ற தந்திரங்களிலும் உபாயங்களிலும் அநேகம் சீனர்களாலே நூற்றுக் கணக்கான வருஷங்களாகவும் ஆயிரக்கணக்கான வருஷங்களாகவும் கூட அநுஷ்டிக்கப்பட்டு வந்தன.

877. கேள்வி:—ஏன் அது ஒழுங்கற்றுப்போயிற்று?

ஸ்வாமிகளின் மறுமொழி:—ஏனென்றால் அது அமைப்புக்கேற்ற மனிதர்களை யுற்பத்தி செய்ய முடியவில்லை. ஜனப்பிரதிநிதி சபையின் சட்டம் ஒன்றினாலே மனிதர்களை நல்லவர்களாக்க முடியாது என்ற பழமொழி உங்களுக்கு உண்டு; சீனர்கள்

அதை உங்களுக்கு முன்னமேயே அநுபவத்தில் பார்த்துவிட்டார்கள்.

878. கேள்வி:—அத்வைத சாஸ்திரத்தின்படி, முக்தியென்பதன் தாத்பர்யம் என்ன? அது பிரக்ஞை யோடு கூடிய ஒரு ஸ்திதியா? அத்வைத முக்திக்கும் பௌத்த நிர்வாணத்துக்கும் ஏதேனும் வித்தியாசம் உண்டா?

ஸ்வாமிகளின் மறுமொழி:—முக்தியிலே ஒரு வித பிரக்ஞையுண்டு; அதை நாங்கள் பிரக்ஞாதீத அவஸ்தையென்று கூறுகிறோம். அது உங்களுடைய தற்காலப் பிரக்ஞையினின்றும் வித்தியாசப்படுகிறது. முக்தியிலே பிரக்ஞையில்லை யென்று சொல்வது தர்க்க விரோதமாம். பிரக்ஞை மூன்று விதப்படும்; மந்தம், மத்தியதரம், அத்தியந்தப்பிரகாசம். சலனம் தீவிரமாயிருக்கிறபொழுது, பார்வையே ஒளிமழுங் கிப்போமாறு பிரகாசம் மிகவும் சக்தியுள்ளதாயிருக் கிறது. கார்யத்திலே மிகமிக மந்தமான விளக்குகளைப் போல பயனற்றதாயிருக்கிறது. பௌத்தர்கள் என்ன சொன்னபொழுதிலும், பௌத்த நிர்வாணத்துக்கும் அந்த அளவு பிரக்ஞையிருந்து தான் தீரவேண்டும். முக்தியைப்பற்றி எங்களுக்குள்ள கருத்தாவது ஸ்வ பாவத்தில் உடன்பாட்டு முறையினதாம். ஆனால் பௌத்த நிர்வாணத்துக்கும் எதிர்மறையான கருத்து இருக்கிறது.

879. கேள்வி:—பந்தமற்ற பிரஹ்மம் உலக சிருஷ்டி வெளிப்படும் பொருட்டு, பந்தத்தை ஏன் அடையவேண்டும்?

ஸ்வாமிகளின் மறுமொழி:—கேள்வியே தர்க்க விரோதமானது,—பிரஹ்மம் அவாங்மான லோகரோசரம்; பொருள் யாதெனில், வாக்கினாலும் மனத்தினாலும் கிரகிக்கப்பட முடியாதது. தேசம், காலம், காரணகார்ய நியாயம் இவற்றுக்கப்பாலுள்ளது. மனுஷ்ய மனத்தினால் கருதப்பட முடியாதது; தர்க்கமும் விசாரணையுமாகிற தொழில் தேச,கால, காரணகார்யப் பிரதேசத்தினுள்ளேயே உள்ளது. விஷயம் அப்படியிருக்க, மனுஷ்ய மனத்தின் கற்பனையாம் சாத்தியங்களுக் கப்பாலுள்ளவற்றைப்பற்றிக் கேள்வி கேட்பது வீண் முயற்சியாம்.

880. கேள்வி:— ஆங்கிலேயர்களுடைய தன்மையில் தாங்கள் கவனித்த விசேஷ குணம் யாது?

ஸ்வாமிகளின் மறுமொழி:— ஆங்கிலேயன் எதிலாவது நம்பிக்கை வைத்து விட்டால், உடனே அநுபவ பூர்வமாக அதை வேலை செய்யச் சென்று விடுகிறான். அநுபவத்தில் வேலை செய்வதற்கு அவனுக்கு அபார சக்தியிருக்கிறது. ஆங்கிலேய புருஷன் அல்லது ஸ்திரீ இவர்களுக்கு மேம்பட்ட மனுஷ்ய ராசி உலகை முழுதிலும் இல்லை. அதுதான் நான் அவர்களிடம் நம்பிக்கை வைப்பதற்கு உண்மையான காரணம். ஜான்புல் (ஆங்கிலேயன்) வியவகரிப்

பதற்கு ஒரு கெட்டி மண்டையை உடையுவன்தான். ஒரு எண்ணம் அவனுடைய மூளையினுள் செல்லுகிற வளையில், நீ அதை மேலே தள்ளித் தள்ளிப்புகுத்த வேண்டும்; ஒருதரம் அது அங்கே போய்விட்டால், அது வெளியே வருகிறதில்லை. இங்கிலாந்திலே, எனக்கு விரோதமாக ஒருபாதிரியும் அல்லது எவரும் ஒன்றும் சொன்னதில்லை. ஒருவரும் என்மீது அவதூறு சொல்ல முயன்றதில்லை. எனது நண்பர்களிற் பலர் இங்கிலாந்து கோயிலைச் சேர்ந்தவர்களாயிருப்பது எனக்கு ஆச்சர்யமாயிருக்கிறது. இந்தப் பாதிரிகள் இங்கிலாந்திலுள்ள உயர்வகுப்புக்களிலிருந்து வருகிறதில்லையென்று நான் அறிகிறேன். ஜாதியென்பது இங்குபோலவே அங்கும் கடுமையாகத்தான் இருக்கிறது; ஆங்கிலேய கோயிலைச் சேர்ந்தவர்கள் உயர்வகுப்பைச் சேர்ந்தவர்கள்.

881. கேள்வி:— உங்கள் பொது ஜனங்களின் அபிவிருத்திக்கு நீங்கள் என்ன செய்யலாமென்று நினைக்கிறீர்கள்? ஸ்வாமிகளின் மறுமொழி:— நாம் அவர்களுக்கு லௌகிகப் படிப்பைக் கொடுக்கவேண்டும். நமது முன்னோர்களால் ஏற்படுத்தப்பட்ட திட்டத்தை நாங்கள் பின்பற்ற வேண்டும். அதாவது, எல்லா லக்ஷியங்களையும் மெல்ல பொது ஜனங்களுக்குள்ளே கொண்டு வர வேண்டும். மெல்ல அவர்களை மேலே உயர்த்தி விடுங்கள். அவர்களை சமத்து

வத்துக்கு உயர்த்தி விடுங்கள். மதத்தின் மூலமாக லௌகிக அறிவையும் கொடுங்கள்.

882. ஒரு அணுவுக்கு ஆதரவாக ஜகத்முழுவதி னுடையவும் சக்தியிருக்கிறது.

883. விதவைகளுக்குக் கிடைக்கின்ற புருஷர் களின் தொகையினால் தீர்மானிக்கப்படுகின்ற நம் பிக்கையையுடைய ஒரு ஜனசமூகத்தை நான் இனி மேல் பார்க்கப் போகிறேன்.

884. இந்தியாவின் ஜாதீய லட்சியங்கள் தியாக மும் ஸேவையுமாம். அந்த மார்க்கங்களிலே அதைத் தீவிரப்படுத்து, மற்றவை தாமேயுண்டாகும்.

885. ஹிந்துமதம் மனுஷ்ய ஜீவனுக்கு ஒரே தர்மத்தைத் தான் குறிப்பிடுகிறது. அநித்தியத்தி னிடையே நித்தியத்தை ஸ்வரூபவத்தில் அறிய வேண்டியதே.

886. கேள்வி:— இந்தத் தேசத்து ஸ்திரீகளுக் குத் தாங்கள் என்ன சொல்வீர்கள்?

ஸ்வாமிகளின் மறுமொழி:— இந்தத் தேசத்து ஸ்திரீகளுக்கு நான் புருஷர்களுக்குச் சொல்வதையே சொல்வேன். இந்தியாவில் நம்பிக்கை வையுங்கள், நமது இந்திய மதத்தில் நம்பிக்கை வையுங்கள். பல மாயும், நம்பிக்கையுள்ளவர்களாயும் வெட்கப்படாத வர்களாயும் இருங்கள்; கொஞ்சம் எடுத்துக்கொள்ள வேண்டியிருக்கிறதென்றாலும், உலகிலுள்ள வேறெந்த ஜனங்களைப் பார்க்கிலும் ஹிந்துக்களிடம் எதேஷ்ட

மாகக் கொடுப்பதற்கும் இருக்கின்றது என்பதை ஞாபகப்படுத்திக் கொள்ளுங்கள்.

887. முகம்மதியர்கள் இந்தியாவுக்கு முதலில் வந்தபொழுது நாம் — மிகமிகப் பூர்வீக முகம்மதியச் சரித்திர கர்த்தாவாகிய பேரிஷ்டா யென்பவர் கூறு கிறதென்று நினைக்கிறேன் — அறுபது கோடி ஹிந்துக்கள் இருந்ததாகச் சொல்லப்படுகிறது. இப்பொழுது நாம் ஏறக்குறைய இருபது கோடியே இருக்கிறோம்.

888. நமது மதத்தின் சாராம்சமானது இந்த இஷ்ட (தேவதா) ஸ்வதந்திரத்திலேயுள்ளது.

889. பிரகிருதியின் நியாயமானது ஒரே மாதிரி கடுமையாயும் ஈவிரக்கமற்றதாயும் உள்ளது.

890. மிகமிக அநுபவ பூர்வமான மனிதன் வாழ்க்கையை நல்லதென்றும் கூறமாட்டான், தீயதென்றும் கூறமாட்டான்.

891. ஸ்வயநல மற்ற தன்மையின் அளவே எங்கும் ஜயத்தின் அளவைக் குறிப்பிடுகிறது.

892. எதைப்பற்றியும் கவலைப்படா திருக்கிறவனுக்கு எல்லாம் வந்து சேரும்.

893. இந்த ஜீவிதத்தில் பெருத்த நன்மையாவது யாதெனில், கடும் பிரயாசையே. அதன் மூலமாகத்தான் நாம் செல்லல் வேண்டும்,— ஸ்வர்க்கத்துக்கு ஏதேனும் பாதையிருந்தால், அது நரகத்தின் மூலமாகவேயுள்ளது.

894. அவரே எல்லாம். அவர் — அவள் — மாதா விளையாடுகிறாள்; நாம் இந்த லீலையில் அவளுடைய சகாக்கள், பொம்மைகள் போன்றிருக்கின்றோம்! இங்கே அவள் இப்பொழுது ஒருவரைப் பிச்சைக்கார உடையில் வைக்கிறாள், மறுநிமிஷத்தில் மகாத்மாவினுடைய உடையில் வைக்கிறாள், மறுபடியும் பைசாசத்தின் உடையில் வைக்கிறாள். நாம் ஞானமாதாவுக்கு அவளுடைய லீலையில் உதவி செய்வதற்கு வெவ்வேறு உடைகளைத் தரித்துக் கொள்கிறோம்.

895. காரணங்கள் சேர்ந்து கார்யமாகின்றதே சேர்க்கையாகும்.

896. அற்பமேனும் அகங்காரமுள்ள வரையில், உண்மை நமது மனத்தினுள் ஒருபொழுதும் எற்படாது.

897. சந்யாஸி எந்த மதத்தையும் சார்ந்திருக்க முடியாது; ஏனெனில் அவனுடைய ஜீவிதம் எல்லா மதங்களினின்றும் எடுத்துக் கொள்கின்ற ஸ்வதந்திர நினைப்போடு கூடிய ஒரு ஜீவிதமாம்; அவனுடைய வாழ்க்கை ஸ்வாநுபூதி வாழ்க்கையாம்; கொள்கையும் நம்பிக்கையும் கொண்ட வாழ்க்கையன்று; பிடிவாத வாழ்க்கையுமன்று.

898. தனவந்தர்களுக்கு மர்யாதை செலுத்தி, அவர்களிடத்து ஆதரவை நாடிக் காத்து நிற்பது நம்துதேசத்துச் சந்யாசக்கூட்டங்களெல்லாவற்றுக்கு

முள்ள கெடுதலாம். உண்மையான சந்யாசி அதைக் கண்டிப்பாக நீக்கிவிடவேண்டும். அத்தகையநடத்தை உலகத்தை தியஜித்து விட்டவன் என்று கூறிக்கொள் பவனைப் பார்க்கிலும் விலைமாதுக்கே உரித்தமானது.

899. "என்னைத் தொடாதே" என்பது உனது கொள்கையாயும் சமையற்பானை உனது தேவதையாயும் உள்ளவரையில், நீ ஆத்மீக விஷயத்தில் உயர முடியாது.

900. முதலில் பூமியை ஆத்மீக எண்ணங்களினால் நிரப்பிவிடுங்கள்; பின்னர் மற்ற எண்ணங்கள் பின் தொடரும். ஆத்மீக தானமும் ஞானதானமுமே மிகமிகச் சிரேஷ்டமானவை. ஏனென்றால் அவை அநேக பிறப்புக்களினின்றும் ரக்ஷிக்கின்றது; அடுத்த தானம் லௌகிக அறிவு; இது மனுஷ்ய ராசிகளின் கண்களை அந்த ஆத்மீக அறிவுக்குத் திறந்து விடுகிறதினால்: அடுத்த ஜீவனைக் காப்பாற்றுதல், நான்காவது அன்னதானம்.

901. (புகை குடிப்பதற்கு) புகையிலை தயார் செய்து கொடுத்தும் ஒருவனுக்கு ஸேவை செய்வது லக்ஷக்கணக்கான தியானங்களைப்பார்க்கிலும் பெரிது என்று மனிதன் அறிந்து கொள்ளும்படியான ஒரு காலம் ஏற்படுகிறது.

902. ஸ்வாநுபூதி, சாதுக்களுடைய சகவாசத்திலே இடைவிடாது வசித்தலினால், கால் திறைவிலே ஏற்படும்.

903. குரு சிஷ்யனுடைய பாபச் சுமையைச் சுமக்க வேண்டியிருக்கிறது: சக்தியிருந்த ஆசார்யர்களுடைய சரீரத்திலேகூட வியாதிகளும் மற்றும் தோன்றுவதற்குக் காரணம் அதுவே.

904. எவர் மூலமாக ஈச்வர சக்தி வேலை செய்கிறதோ அவரே ஆசார்யர்.

905. எல்லா ஜீவர்களும் விளையாடுகிறார்கள்; சிலர் தெரிந்து கொண்டும், சிலர் தெரிந்துகொள்ளாமலும் விளையாடுகிறார்கள்; தெரிந்து கொண்டு விளையாடுவதற்குக் கற்றுக் கொள்ளுதலே மதமாம்.

906. ஜீவிதமென்பது மரணத்தின் சாயை, மரணமென்பது ஜீவிதத்தின் சாயை.

907. ஈச்வரன் எல்லா இடத்தையும் மத்தியமாகவும் சுற்றளவு எங்குமேயில்லாமலுமுள்ள ஒரு வட்டமாம்.

908 ஜீவன் என்பது சுற்றளவு எங்குமேயில்லாமல் ஆனால் ஏதோ ஒரு சரீரத்தில் மத்தியத்தைக் கொண்ட ஒரு வட்டமாம்.

909. ஞானமென்பது கொள்கையற்ற தன்மையாம்: ஆனால் கொள்கைகளை அது இகழ்கிறது என்பதன்று பொருள்.

910. உலகத்திலே வசித்தும் உலகத்தைச் சார்ந்திராமலிருப்பதே தியாகத்தின் உண்மையான பரிசோதனை.

911. மிகமிகச் சிரேஷ்டமானதை, எப்பொழுதும் மிகமிகச் சிரேஷ்டமானதையே நாடு. ஏனெனில் மிகமிகச் சிரேஷ்டமானதிலேயே நித்தியாநந்தம் உள்ளது. நான் வேட்டையாடினால் சிம்ஹத்தை வேட்டையாடுவேன். நான் கொள்ளையடித்தால், அரசனுடைய பொக்கிஷத்தைக் கொள்ளையடிப்பேன். மிகமிகச் சிரேஷ்டமானதையே நாடு.

912. சகோதரா, ஏன் அழுகிறாய்? உனக்கு மரணமும் இல்லை, வியாதியும் இல்லை. சகோதரா, ஏன் அழுகிறாய்? உனக்குத் துக்கமும் இல்லை, துர்ப்பாக்கியமும் இல்லை. சகோதரா, ஏன் அழுகிறாய்? உனக்கு மாறுதலுமில்லை, மரணமுமில்லை. நீ அகண்ட சத்தா மாத்திரமாயுள்ள வஸ்து.

913. புநர் ஜன்மமென்பது பிரகிருதியின் அபிவிருத்தியும் உள்ளேயுள்ள ஈச்வரனுடைய வெளிப்பாடுமேயாம்.

914. நமக்குத் தீமையைப்பற்றிய கொள்கையே கிடையாது. நாம் அதை அஞ்ஞானமென்கிறோம்.

915. நிர்வாணமானது இங்கே இப்பொழுதே அடையப்பட முடியுமென்று, நாம் அதை யடைவதற்கு மரணம் வரையில் காத்திருக்க வேண்டியதில்லையென்று வேதாந்தம் கூறுகிறது.

916. ஈச்வரனிலும் முக்தியிலும் நாம் ஆரம்பித்தோம்; முக்தியும் ஈச்வரனுமே முடிவாய்விடும்.

917. எந்த சமுதாயத்திலே அளவுக்கு மிஞ்சி சட்டங்கள் இருக்கின்றனவோ, அந்தச் சமுதாயம் சீக்கிரம் மரித்துவிடு மென்பதற்கு அது ஒரு நிச்சயமான அடையாளம்.

918. உண்மையான ஆநந்தம் ஈச்வரனே. அன்பே கடவுள், ஸ்வதந்திரமே கடவுள்; பந்தமாயுள்ள எதுவும் கடவுளல்ல.

919. நமக்கு வேண்டியது நியதியன்று, ஆனால் நியதியை உடைத்தெறிவதற்குள்ள சக்தி நாம் நியதி ப்ரஷ்டர்களாயிருக்க விரும்புகிறோம். நீ நியதிகளால் கட்டுப்பட்டால், நீ ஒரு களிமண் கட்டியாவாய். நீ நியதிக்கு மேல்பட்டவனா அல்லவா? என்பதன்று கேள்வி; ஆனால் நாம் நியதிக்கு மேற்பட்டவர்கள் என்ற நினைப்பு,—அதையே மனுஷ்ய வர்க்கத்தின் சரித்திரம் முழுதும் அஸ்திவாரமாகக் கொண்டிருக்கின்றது.

920. கேள்வி:—மாயை அல்லது அஞ்ஞானம் ஏன் இருக்கின்றது?

ஸ்வாமிகளின் மறுமொழி:—ஏன்,— என்பது காரணகார்ய எல்லைக்கப்பால் கேட்கப்படக் கூடாதது. மாயைக்குள்ளேயே அது கேட்கப்படக்கூடும். அந்தக் கேள்வி தார்க்கீகமாய் கேட்கப்படுகிற பொழுது நாம் அதற்கு மறுமொழியளிப்போம் என்று கூறுகிறோம். அதற்கு முன், மறுமொழியளிப்பதற்கு நமக்கு பாத்தியதையில்லை.

921. மனிதன் அகண்ட வஸ்துவை யறிவதற்கு முக்கியமான வழி எது?

ஸ்வாமிகளின் மறுமொழி:-இரண்டுவழிகள் உண்டென்று நாம் கூறுகின்றோம். ஒன்று உடன்பாடானது, மற்றது எதிர்மறையானது. உடன்பாடானது யாதெனில், எதன் மூலமாக பிரபஞ்சம் நடைபெற்றுக் கொண்டிருக்கிறதோ அது,—அன்பாம் வழி. இந்த அன்பு வட்டம் எல்லையில்லாமல் அதிகரிக்கப்பட்டுக் கொண்டே போனால், நாம் சமஷ்டியன்பை யடைகிறோம். மற்றது "நேதி," "நேதி,"-"இது அன்று," "இது அன்று,"— மனத்தை வெளியே இழுக்க முயற்சிக்கின்ற ஒவ்வொரு அலையையும் நிறுத்துதலாம்; கடைசியாக மனம் மரித்துவிடுகிறது; உண்மைப்பொருள் துலங்குகிறது. நாம் அதை சமாதி அல்லது பிரக்ஞாதீத அவஸ்தை என்று கூறுகிறோம்.

922. கேள்வி :— அப்படியானல், அது தன்மையை முன்னிலையில் லயப்படுத்தியதாகுமே!

ஸ்வாமிகளின் மறுமொழி :— முன்னிலையைத் தன்மையில் லயப்படுத்துதல், தன்மையை முன்னிலையில் லயப்படுத்துதல் அன்று. உண்மையில் இந்த உலகம் மரிக்கிறது, நான் எஞ்சுகிறேன். நான் ஒருவனே எஞ்சியுள்ளவன்.

923. கேள்வி :— அந்த பிரக்ஞாதீத அவஸ்தையை நீங்கள் அடைவதானல், நீங்கள் அதைப் பற்றிச் சொல்ல முடியுமா?

ஸ்வாமிகளின் மறுமொழி:— முடியாது; ஆனால் நாம் அதை பலன்களால் அறியலாம். ஒரு மூடன், நித்திரை செய்துவிட்டு, நித்திரை விழித்து வெளியே வரும்பொழுது மூடனாகவோ அல்லது இன்னும் கெட்ட ஸ்திதியிலோ வருகிறான். ஆனால் இன்னொருவன் தியானவஸ்தையில் செல்கிறான்; அவன் வெளியே வருகிறபொழுது, அவன் ஒரு தத்துவ ஞானியாக, ஒரு மகரிஷியாக, ஒரு பெரியோனாக இருக்கிறான். இந்த இரண்டு அவஸ்தைகளுக்குமுள்ள வித்தியாசத்தை அது காண்பிக்கிறது.

924. கேள்வி:— யோகி காண்பிக்கக் கூடிய வெளிப்பாடுகள் இன்னவையென்று தாங்கள் ஸ்தூலமாகச் சொல்ல முடியுமா?

ஸ்வாமிகளின் மறுமொழி:— வேறெந்த சாஸ்திரத்துக்கும் அளிக்கப்படுகிற, வஸ்து பரிசோதனை செய்து பார்ப்பதற்குப் போதிய நாகரிக நம்பிக்கையைத் தவிர, தன்னுடைய சாஸ்திரத்திலே (அநாவச்யமான நம்பிக்கையோ அல்லது விச்வாசமோ வைக்க வேண்டுமென்று யோகி விரும்புகிறதில்லை. யோகியினுடைய லக்ஷியம் அபாரமானது மனோசக்தியினால் செய்யப்படக்கூடிய தாழ்ந்த விஷயங்களை நான் பார்த்திருக்கிறேன்; ஆகையால், மிகமிக உயர்ந்த விஷயங்கள் செய்யப்படக் கூடுமென்று நம்பாமலிருப்பதற்கு எனக்குப் பாத்தியதையில்லை. யோகியினுடைய லக்ஷியமானது சர்வக்ஞத்துவத்தினா

லும் சர்வ சக்தித்துவத்திலும் நித்திய சாந்தியை யும் அன்பையும் அடைவதாம். ஒரு கிருஷ்ண சர்ப் பத்தினல் கடிக்கப்பட்டு, பூமியிலே கீழே விழுந்து விட்ட ஒரு யோகி எனக்குத் தெரியும். மாலையில் அவர் மறுபடியும் உயிர்த் தெழுந்தார்; நேர்ந்த தென்னவென்று கேட்கப்பட்டபொழுது, "எனது அன்பனிடமிருந்து ஒரு தூதன் வந்தான்" என்று அவர் கூறினர். எல்லாப் பகைமையும் கோபமும் பொறாமையும் இந்த மனுஷ்யனிடத்தில் எரிபட்டுப் போயின. அவரை எதிர்க்க யாவராலும் எதனுலும் முடியாது; அவர் எப்பொழுதும் அகண்ட அன்பாக வேயிருக்கிறர்; அவர் தமது அன்பாம் சக்தியில் சர்வ சக்தராயிருக்கிறர். அவர்தாம் உண்மையான யோகி. வெவ்வேறு விஷயங்களை வெளிப்படுத்துதல் வழி யிலே யதேச்சையாக நேரிடுபவை. யோகி அடைய விரும்புவது அது அன்று. யோகியைத் தவிர, மற் றெவ்வொரு மனிதனும் அடிமையேயென்று கூறு கிறன். அவன் (மனிதன்) ஆகாரத்துக்கு, காற்றுக்கு, தனது மனைவிக்கு, தனது குழந்தைகளுக்கு, ஒரு நாணயத்துக்கு அடிமையாயிருக்கிறன். ஜன சமூகத் துக்கு அடிமை, பெயருக்கும் கீர்த்திக்கும் அடிமை, இவ்வுலகிலுள்ள ஓராயிரம் விஷயங்களுக்கு அடிமை.

925. கேள்வி:— பிரக்ஞாதீத அவஸ்தையாம் இந்த எண்ணத்துக்கும் இந்தியாவின் ஔஷ்ணத்துக் கும் சம்பந்தமில்லையா?

ஸ்வாமிஜியின் மறுமொழி:—நான் அப்படி நினைக்கவில்லை; ஏனென்றால் இந்தத் தத்துவஞான மெல்லாம் கடல் மட்டத்துக்குப் பதினையாயிரம் அடிக்கு மேலே, ஹிமோத்கிரியிலே, அநேகமாக துருவ சீதோஷ்ண ஸ்திதியிலே விசாரணை செய்யப் பட்டது.

926. கேள்வி:—சீதளமான தேசத்திலே ஜய மடைவது அநுபவ சாத்தியமா?

ஸ்வாமிகளின் மறுமொழி:—அது அநுபவ சாத்தியமே. இவ்வுலகில் அநுபவ சாத்தியமான விஷயம் அது ஒன்றுதான். நீங்கள், உங்களில் ஒவ்வொருவரும் பிறவியிலேயே வேதாந்தியென்று நாங்கள் கூறுகிறோம். நீ ஜீவித்திருக்கின்ற ஒவ்வொரு நிமிஷத்திலும் ஒவ்வொன்றுடனும் உனக்குள்ள ஒற்றுமையை நீ பகிரங்கப்படுத்திவருகிறாய். உலகை நோக்கி உனது ஹிருதயம் செல்லுகின்ற ஒவ்வொரு காலத்திலும் நீ ஒரு உண்மையான வேதாந்தியாயிருக்கிறாய், உனக்கு அது தெரியவில்லை. அவ்வளவுதானே என் என்று அறியாமல் நீ நல்லொழுக்க முடையவனாயிருக்கிறாய்; பகுத்துப்பார்த்து, அறிவுடனே நல்லொழுக்கத்துட னிருக்கும்படி மனிதனுக்குப் போதித்த தத்துவ சாஸ்திரம் வேதாந்தமே. அது சர்வ மதங்களினுடைய சாராம்சமாம்.

927. நாகரிக மென்பது மனிதனிடத்துள்ள தெய்விகத் தன்மையை வெளிப்படுத்துவதேயாம்.

928. கேள்வி:—வேதங்களிலே விசேஷம் யாது?

ஸ்வாமிகளின் மறுமொழி:— வேதங்களிலே ஒரு விசேஷம் என்னவென்றால், அவற்றைக் கடந்து செல்லவேண்டுமென்று திரும்பத்திரும்பக் கூறுகின்ற சாஸ்திரங்கள் அவைதாம். வேதங்கள் குழந்தைமனத்திற்காக எழுதப்பட்டனவென்று வேதங்களே கூறுகின்றன; நீ வளர்ந்து விடுகிறபொழுது, நீ அவற்றைக் கடந்து செல்லல் வேண்டும்.

929. கேள்வி:—குரு வென்று நாம் யாரைக் கூப்பிடலாம்?

ஸ்வாமிகளின் மறுமொழி:-உனது முற்காலத்தையும் பிற்காலத்தையும் கூறக்கூடியவர் எவரோ அவரே குரு.

930. கேள்வி:—மனுஷ்ய ஜன்மத்திலிருந்து கீழ் பிறப்படைதல் சாத்தியமா?

ஸ்வாமிகளின் மறுமொழி:—சாத்தியம் தான். புநர் ஜன்மம் கர்மத்தைச் சார்ந்திருக்கிறது. மிருகத் தன்மை போன்ற கர்மத்தை ஒருவன் குவித்துக்கொள்வானானால், அவன் அதனிடம் இழுக்கப் படுவான்.

931. கேள்வி:—நமது மிகமிக உத்கிருஷ்டமான லக்ஷியம் யாதாயிருக்க வேண்டும்?

ஸ்வாமிகளின் மறுமொழி:—தியாகமே.

932. கேள்வி:—ஈச்வர கிருபையின்றியே முக்தியடைய முடியுமா?

ஸ்வாமிகளின் மறுமொழி:—முக்திக்கும் ஈச்வரனுக்கும் சம்பந்தமேகிடையாது. ஸ்வதந்திரம் முன்னேயே உள்ளது.

933. கேள்வி:—மாயாவாதமானது அத்வைத வாதத்திலிருந்து வேறானதா?

ஸ்வாமிகளின் மறுமொழி:—இல்லை. அவை ஒன்றேதான். அத்வைத வாதத்துக்கு மாயாவாதத்தைத் தவிர வேறு வியாயமேயில்லை.

934. நமது மனத்தினுடையவும், சரீரத்தினுடையவும் சக்திகளில் எதையும் தகுந்தபடி உபயோகித்தால் அது புண்ணியமாகிறது; தகாத முறையில் உபயோகித்தால், அல்லது வீணாக்கப்பட்டால், அது பாபமாகிறது.

935. கால, தேச, காரணமே மாயை எனப்படுவது.

936. கர்ம ரகஸ்யங்களுள் ஒன்று யாதெனில், கூடுமானவரையில் எதிர்ப்பேயில்லாத வழியில் செல்லுதலாம்.

937. ஒழுக்கம் ஏற்படும்படியான, மனோபலம் அதிகரிக்கும்படியான, புத்தி விசாலமாகும்படியான, மனிதன் தன் காலிலேதானே எழுந்திருந்து நிற்கும்படியான, அத்தகைய கல்வி நமக்கு வேண்டும்.

938. அதயார்ச்சர்யமான வாசாலக சக்தி, ஈச்வராநுபூதியடைய வேண்டுமென்ற ஒரே எண்ணத்துடன் பன்னிரண்டு வருஷகாலம் எவன் இடை

விடாத பிரஹ்மச்சர்யத்தை யநுஷ்டித்து வருகின்றானோ, அவனுக்கு உண்டாகின்றது.

939. கேள்வி:—நமது பையன்களுக்கு எப்படி கல்வியளிப்பது ?

ஸ்வாமிகளின் மறுமொழி:—குரு குலவாசம்.

940. கேள்வி:—எப்படி ?

ஸ்வாமிகளின் மறுமொழி:—முன் இருந்த மாதிரியே. ஆனால் இந்தப் படிப்போடுகூட தற்கால மேனாட்டுச் சாஸ்திரமும் சேர்க்கப்பட வேண்டும். இவையிரண்டும் அவச்யமாயுள்ளன.

941. கேள்வி:—தற்காலத்துச் சர்வகலாசாலை முறையில் என்ன குறையுள்ளது ?

ஸ்வாமிகளின் மறுமொழி;—அது அநேகமாக குறைகளே நிறைந்ததாக இருக்கிறது. என், அது குமாஸ்தாக்களை யுண்டுபண்ணுவதற்கு ஒரு தகுந்த யந்திரமாயிருக்கிறதைத் தவிர, வேறொன்று மில்லை. அம்மட்டோடு இருந்தாலும் பாதகமில்லை. ஆனால் அப்படியன்று ! மனிதர்கள் சரத்தையையும் நம்பிக்கையையும் எப்படி யிழந்து வருகிறார்களென்பதைப் பார். கீதை இடையில் சேர்க்கப்பட்டதே யென்றும் வேதங்கள் பட்டிக்காட்டுப் பாடல்களே யென்றும் அவர்கள் கூற விரும்புகிறார்கள் ! இந்தியாவுக்கு வெளியேயுள்ள விஷயங்களையும் ஜன சமூகங்களையும் பற்றி வெகு விவரமாகத் தெரிந்து கொள்வதற்கு அவர்கள் விரும்புவார்கள் ; ஆனால், பதினென்காவது

தலைமுறைக்குப் போவானேன், ஏழாவது தலைமுறை வரையில் அவர்களுடைய சொந்த முன்னோர்களுடைய பெயர்களையேனும் கேட்டால் அவர்கள் அறியார்கள்!

942. ஒரு சமயத்தில் தக்ஷிணேச்வராலயத்தில் விஷ்ணு பூஜைசெய்து கொண்டிருந்த பிராஹ்மணன் அந்த விக்கிரகத்தினுடைய காலை ஒடித்துவிட்டான். பண்டிதர்கள் தங்கள் அபிப்பிராயங்களைத்தெரிவிக்கும்படி கூட்டப்பட்டார்கள்; அவர்கள் பழய கிரந்தங்களையும் எழுத்துப் பிரதிகளையும் திருப்பித்திருப்பிப் பார்த்து, சாஸ்திரங்களிலே இந்தப் பின்னமான விக்கிரகத்தின் உபாசனை யநுமதிக்கப்படவில்லையென்றும் ஒரு புதிய விக்கிரகமே பிரதிஷ்டிக்கப்பட வேண்டுமென்றும் கூறினார்கள். இதன் பலனாக ஒரு பெருங்குழப்பமுண்டாயிற்று. கடைசியாக ஸ்ரீ ராமகிருஷ்ணர் கூப்பிடப்பட்டார். அவர் விஷயத்தைத்தெரிந்து கொண்டு, "புருஷன் நொண்டியாய் விட்டால், ஸ்திரீ புருஷனை விட்டுவிடுகிறாளா?" என்று கேட்டார். என்ன நடந்தது? பண்டிதர்கள் மறுமொழியளிக்க முடியவில்லை; அவர்களுடைய சாஸ்திர வியாக்கியானங்களும் அறிவு நிரம்பிய உரைகளுமெல்லாம் இந்தச்சாதாரணச் சொல்லின் சக்திக்கு எதிர் நிற்க முடியவில்லை.

943. முக்கியமான விஷயம்—தியாகமே; தியாகமில்லாமல் எவரும் பிறருக்கு உழைப்பதிலே தமது ஹிருதயம் முழுமையும் கொடுத்துவிட முடியாது.

944. நீ மரிக்கத்தான் வேண்டும்; ஆனல் மரிப்பதற்காக ஒரு பெரும் லக்ஷியத்தை வைத்துக்கொள். வாழ்க்கையில் ஒரு பெருத்த லக்ஷியத்தைவைத்துக் கொண்டு மரிப்பது இன்னும் மேல்.

945. அன்பின் பரிபூரணுநுபூதியிலே சரீரத்தைப்பற்றிய ஞாபகம்கூட இருக்கிறதில்லை.

946. ஒருவன் பரிபூர்ண ஞானியானலொழிய, பக்தியின் அநுபவம் அவனுக்கு உண்டாகாது.

947. தேசம் உயர்ந்த ஸ்திதிக்குக்கொண்டுவரப்பட வேண்டும்! மகாவீரனுடைய உபாசனை யநுஷ்டிக்கப்பட வேண்டும்; சக்திபூஜை நமது தினசரியநுஷ்டானத்தில் ஒருபாகமாக வேண்டும்; ஸ்ரீராமச்சந்திரன் ஒவ்வொரு வீட்டிலும் பூஜிக்கப்பட வேண்டும். அதிலேதான் நன்மையுள்ளது, தேசத்தினுடைய நன்மையுள்ளது; வேறு வழியில்லை.

949. ஒருநாள் தக்ஷிணேச்வர க்ஷேத்திர நந்தவனத்திலே என்னை ஹிருதயத்திலே தொட்டார்; எல்லாவற்றுக்கும் முதலாக—வீடுகள், அறைகள், கதவுகள், ஜன்னல்கள், தாழ்வாரங்கள், மரங்கள், சூர்யன், சந்திரன்,—எல்லாம் பிறக்கத் தொடங்கினதை, துண்டு துண்டாகச் சிதற அடிக்கப்பட்டதை, அணுக்களாகத் துகள் செய்யப்பட்டதை, கடைசியில் ஆகாசத்திலே சென்று லயமடைந்ததைக் காண ஆரம்பித்தேன். மெல்ல மெல்ல, ஆகாசமும் மறைந்தது; அதன் பின்னர் ஏனது அகங்காரப் பிரக்ஞை

யும் மறைந்தது; பின்னர் என்ன நடந்தது என்பது எனக்கு ஞாபகமில்லை. முதலில் பயந்துவிட்டேன்; அந்த நிலைமையிலிருந்து திரும்பிவந்து, வீடுகளையும் கதவுகளையும் ஜன்னல்களையும் தாழ்வாரங்களையும் மற்றப் பொருள்களையும் பார்க்க ஆரம்பித்தேன்.

950. இழிந்த காமகாஞ்சனத்தினால் கட்டுப்பட்டுக்கிடக்கும் ஜனங்கள் பிரஹ்மாநந்தத்தை யநுபவிக்க முடியாது.

951. ஈச்வர நாமோச்சாரணம், தியானம், உபாசனை, பரிசுத்த அக்கினியிலே ஆகுதி செய்தல், இவையெல்லாம் தியாகத்தை யுண்டுபண்ணுவதற்கேயாம்.

952. தியாகமே, தியாகம் ஒன்றே ஸ்வாநுபூதியெல்லாவற்றினுடையவும் மூலமந்திரம், உண்மையான ரகஸ்யம்.

953. கேள்வி.—பௌத்த மதமும் வைஷ்ணவ மதமும் "அஹிம்சா பரமோ தர்ம:" என்று ஏன் போதிக்கின்றன?

ஸ்வாமிகளின் மறுமொழி:—பௌத்த மதமும் வைஷ்ணவ மதமும் இரண்டு வெவ்வேறு விஷயங்கள் அல்ல. இந்தியாவிலே பௌத்த மதம் க்ஷீணதிசையடைந்தபொழுது, ஹிந்து மதம் அதிலிருந்து சில முக்கிய நல்லொழுக்கக் கொள்கைகளையெடுத்துத் தனக்குச் சொந்தமாக்கிக் கொண்டது; இவை இப்பொழுது வைஷ்ணவ மதம் என்று அறியப்பட்டுவருகின்றன. "அஹிம்சாः பர" தர்மமோ என்று

பௌத்த மதக்கொள்கை மிகவும் நல்லதே; ஆனால் போதுமான ஜனங்களுடைய பக்குவங்களைச் சிறிதும் கவனியாது சட்டத்தினால் எல்லோரும் அதை யநுஷ்டிக்கும்படி பலவந்தமாக முயற்சித்து, பௌத்த மதமானது இந்தியாவுக்கு அழிவைக்கொண்டு வந்து விட்டிருக்கிறது.

954. கேள்வி:—மச்சமும் மாம்சமும் உண்டால், மனிதனிடத்தில் ரஜஸ் அதிகரித்துவிடாதா?

ஸ்வாமிகளின் மறுமொழி:—உங்களுக்கு ரஜோகுணம் உண்டாக வேண்டுமென்று தான் நான் விரும்புகிறேன். இப்பொழுது ரஜஸ்தான் நிரம்பவும் வேண்டியிருக்கிறது. சத்துவ குணத்தோடு கூடியுள்ள மனிதர்கள் என்று நீங்கள் கருதுகின்றவர்களில் நூற்றுக்குத் தொண்ணூறு பெயர்களுக்கு மேல் மிகமிக ஆழமான தமஸில்தான் விழுந்துகிடக்கிறார்கள். அவர்களில் பதினாறில் ஒருபங்கேனும் உண்மையான சாத்விகர்களாயிருந்தால் போதும். இந்தத் தேசத்து ஜனங்கள் போஷிக்கப்பட வேண்டும்; உழுக்கப்படவேண்டும், எழுப்பப்படவேண்டும், இன்னும் அதிக சுறுசுறுப்பாக்கப்பட வேண்டும்.

955. மனிதன் பிரகிருதியை ஜயிக்கப் பிறந்திருக்கிறான், அதைப்பின்பற்றப் பிறக்கவில்லை.

956. பலம் நன்மையிலுள்ளது, பரிசுத்தத்திலுள்ளது.

957. ஜீசுக் என்பது முன்னிலைப்படுத்தப்பட்ட ஈச்வரனே.

958 நீ உன்னில்தானே நம்புகிறவரையில், ஈச்வரனிடத்தில் நம்பிக்கை வைக்கமுடியாது.

959. உண்மையானது ஓராயிரம் வெவ்வேறு வழிகளிலே உரைக்கப்படக்கூடும், ஆயினும் ஒவ்வொன்றும் உண்மையாயிருக்கக் கூடும்.

960 ஜடவஸ்து எதனாலும் கலக்கப்படாத மனிதன் அமரத் தன்மையடைந்து விடுகிறான்.

961. எல்லாவற்றையும் உண்மையின் பொருட்டு, தியஜித்து விடலாம், ஆனால் உண்மையை எதன் பொருட்டும் தியஜிக்க முடியாது.

962. ஈச்வரன் மனிதனாயிருக்கிறான்: மனிதன் மறுபடியும் ஈச்வரனாவான்.

963. இங்கேயே, இப்பொழுதே பரிபூர்ணத் தன்மை யடைவது அசாத்தியமானால், வேறெந்த ஜன்மத்திலும் நாம் பரிபூர்ணத்தன்மை படையமுடியு மென்பதற்குப் பிரமாணமே கிடையாது.

964. உண்மையான கிறிஸ்தவன் உண்மையான ஹிந்துவே; உண்மையான ஹிந்து உண்மையான கிறிஸ்தவனே.

965. ஆசை அளவற்றது, அதன் பூர்த்தி அளவுள்ளது. ஆசை ஒவ்வொருவரிடத்திலும் அளவற்றதாயிருக்கிறது, பூர்த்திசெய்யும் சக்தி வேறுபடுகின்றது.

966. பிற்கால மானது தற்காலத்தினுடைய விரிவேயாகும். அப்படியிருக்க முடியாது!

967. மரணம் எல்லா வஸ்துக்களுடைய முடிபாம், மாறுதல் எல்லா முன்னிலைப் பொருள்களினுடைய இயற்கையாம்.

968. ஸ்வதந்திரமே ஜகத்துக்கு நோக்கம் ஸ்வதந்திரமே அதன் லக்ஷியம்.

969. இந்த ஸ்வதந்திரமானது கர்மம், பக்தி, ஞானம் ஆகிற திரிவித உபாயங்களினால் அடைபடுகிறது.

(1) கர்மம்— பிறருக்கு உதவி செய்வதிலே இடைவிடாத முயற்சியும் பிறரை நேசித்தலும்.

(2) பக்தி— பிரார்த்தனையிலும் ஸ்துதியிலும் தியானத்திலும் உள்ளது.

(3) ஞானம்—சிஷ்டைக்குப்பின் உண்டாவது.

970. ஆசையதிகரிக்க அதிகரிக்க, சுகபோக சக்தியும் அதிகரிக்கிறது. அப்படியே துக்கானுபவ சக்தியும் அதிகரிக்கிறது.

971. எவன் (உலக) வஸ்துக்களிலே சுகத்தை நாடுகிறானோ அவன் அதை அடைவான்; ஆனால் அவன் அதோடுகூட துக்கத்தையும் எடுத்துக் கொள்ள வேண்டும்.

972. எல்லா முன்னிலைச் சுகமும் கடைசியில் துக்கத்தையேதான் உண்டுபண்ணும், ஏனென்றால் மரணம் அல்லது மாறுதல் உண்மையல்லவா?

973. பாபமும் இல்லை, புண்ணியமுமில்லை; அஞ்ஞானம் ஒன்றேயுள்ளது. அத்வைதாநுபவத்தினால் இந்த அஞ்ஞானம் நீக்கப்படுகிறது.

974. ஈச்வர கிருபையினால் சிஷ்யன் புத்தகங்கள் படிக்காமலே கூட வித்வானாய் விடுகிறான்.

975. நீ ஏதேனும் தீங்குசெய்ய விரும்பினால், உனது பெரியோர்களின் கண்ணுக்கு நேரே செய்.

976. உண்மையான மதமுள்ள இடத்திலே புத்தகப்படிப்பு நுழைவதற்கே இடமில்லை.

977. உபாசகர்களெல்லோரும் பொது ஜனங்களென்றும் சில தீரபுருஷர்களென்றும் பிரிக்கப்படுகிறார்கள்.

978. இந்த உலகமானது நாம் நம்மை பலப்படுத்திக்கொள்வதற்கு வருகின்ற பெரிய சிலம்பக்கூடமாகும்.

979. ஹிருதயமாகிற புத்தகம் எவனுக்குத் திறந்துள்ளதோ அவனுக்கு வேறு புத்தகங்கள் அவசியமில்லை.

980. ஜட அணுக்கள் இடத்திலே சேர்வதுபோல, மன அலைகள் காலத்திலே சேர்கின்றன.

981. தீமைக்குவித்து ஏது என்றால், நாம் சரீரங்கள் என்ற பிரமையேயாம். பாபமென்று ஒன்று இருந்தால், இதுதான் முதற்பாபம்.

966 மனிதன் ஒருபொழுதும் மரிக்கிறது மில்லை. ஒருபொழுதும் பிறக்கிறதுமில்லை ; சரீரங் களே மரிக்கின்றன.

983. ஒவ்வொரு வேலையும் பரிகாசம், எதிர்ப்பு, பின்னர் ஏற்றுக்கொள்ளுதல் ஆகியமூன்று அவஸ்தை களைக் கடந்து செல்லவேண்டியிருக்கிறது.

984. சத்தியமே எனது கடவுள், ஜகத்தே எனது தேசம். கடமையென்பதில் எனக்கு நம் பிக்கை கிடையாது. கடமையென்பது சம்சாரிக்கேற் பட்ட ஒரு சாபமாகும். சந்நியாசிக்கு அன்று. கடமை யென்பது ஏமாற்றமாம்.

985. ஈச்வரனும் சத்தியமுமே உலகில் ராஜீய விஷயங்கள், மற்றதெல்லாம் அற்பமே.

986. குருபக்தியே ஞான அபிவிருத்தி எல்லா வற்றுக்கும் அஸ்திவாரமாகும்.

987. குருபக்தனே உலகை ஜெயிப்பான்,—இது சரித்திரத்தில் ஒரு அத்தாட்சியாம்.

988. பொறாமையையும் ஸ்வயநலத்தையும் நீக்கி விடு, உண்மை, மனுஷ்யவர்க்கம், உனது தேசம் ஆகிய கார்யத்திலே கீழ்ப்படிந்திரு. என்றும் உண்மையா யிரு ; நீ உலகத்தை யசைப்பாய்.

989. ஜன சமுகங்களும், தனிமனிதர்களைப் போலவே, தங்களுக்குத் தாங்களே யுதவிசெய்து கொள்ளவேண்டும்.

990. பொறாமையே அடிமைகளெல்லாரிடத்தும் உள்ள ஒரு கெடுதல். நமது ஜன சமூகத்தினிடத்தும் உள்ள கெடுதல் அதுதான்.

991. ஒரு பூப்புழுவைப்போல மரிப்பதைப் பார்க்கிலும் உண்மையை போதித்துக்கொண்டு கடமையாகிற களத்திலே மரிப்பது மேலாம், எவ்வளவு மேலாம்.

992. பலம், ஆண்மை, க்ஷாத்ர—வீர்யம்+பிரஹம்—தேஜஸ்.

993. தியாகம்— அஹிம்சை— அழிக்காதிருத்தல், இவை குறைந்த லௌகீகத்தன்மையின் மூலமாகவும், குறைந்த எதிர்ப்பின் மூலமாகவும், குறைந்த அழிப்பின் மூலமாகவும் அடையப்பட வேண்டிய லக்ஷியங்களாம். லக்ஷியத்தைப் பார்வையில் வைத்துக்கொண்டு, அதைநோக்கி வேலைசெய். எதிர்ப்பு இல்லாமல், அழிக்காமல், இச்சையில்லாமல், எவரும் உலகிலே வாழமுடியாது.

994. சங்கீதமே மிகமிக உயர்ந்த கலையாம், அதையறிபவர்களுக்கு அது மிகமிக உயர்ந்த உபாசனையாம்.

995. ஒருபக்கத்திலே, பிடிவாத சமுதாயம் ஜடக் குவியல்போன்று இருக்கின்றது; மறுபக்கத்திலே அமைதியற்ற, பொறுமையற்ற, அக்கினி வீசும் சீர்திருத்தக்காரன்; நன்மைக்குவழி இவ்விரண்டுக்கும் நடுவேயுள்ளது.

996. எல்லோருடையவும் ஈச்வரனும் எந்த பிரத்தியேக புருஷனுயுமிருக்க முடியாது. அவர் சமஷ்டியாயிருக்க வேண்டும்.

997. நமது கொள்கை அன்பாயிருக்கவேண்டும் தயையாயிருக்கக் கூடாது.

998. ஒவ்வொரு புதிய நினைப்பும் எதிர்ப்பை யுண்டுபண்ண வேண்டும்,— நாகரிகர்களிடத்திலே விநயத்துடன் கூடிய பரிகாசத்தையும், காட்டு மிராண்டிகளிடத்திலே இழிந்த ஊளைக்கூச்சலையும் ஆபாசமான அவதூறுகளையும் உண்டுபண்ணும்.

999. ஆண், பெண் என்ற எண்ணத்தையும் உடைமைகளைப்பற்றிய எண்ணத்தையும் விட்டுவிடு. வேறு பந்தம்கிடையாது விவாகமும், ஆண் பெண் என்ற வித்யாசமும் பணமுமே உயிருடனுள்ள பைசாசங்கள்.

1000. ஸ்வதந்திரமென்பது, பணம் முதலியவற்றை நீயும் நானும் மோசமாகக் கையாள விரும்பிஞல் அதைத்தடுப்பதற்குத் தடைகள் இருக்கக்கூடாதென்பதன்று பொருள்; ஆனுல் அது, நமது சொந்த சரீரத்தை, புத்தியை அல்லது ஐச்வர்யத்தை பிறருக்கு எவ்வித தீங்கும் செய்யாமல் நமது இஷ்டப்பிரகாரம் உபயோகிப்பதற்கு அனுமதிக்கப்படுகிற நமது இயற்கைப் பாத்தியதையாம்.

1001. ஸ்தூலமாகவும், மானசீகமாகவும், ஆத்மீகமாகவும் ஒருவன் முக்தியை நோக்கி அபிவிருத்தி

யடைந்து சென்று பிறரும் அவ்வாறு செய்யும்படி பிறருக்கும் உதவிபுரிவதே மனிதன் செய்ய வேண்டிய பரமகைங்கர்யம்.

1002. ஒவ்வொருவருக்கும் நன்மை தீமையைப் பற்றி ஆலோசித்துத் தீர்மானித்துக் கொள்வதற்குச் சக்தியிருக்கிறது; ஆனால் எவன் தப்பிதங்களும் பிழைகளும் துக்கங்களுமே நிறைந்த சம்சார அலைகளுக்குச் சிறிதும் பயப்படாமல் ஒரு கையினாலே, கண்ணீரைத் துடைத்துவிட்டு, மறுகையினாலே, அசைவுறாது, நிவிர்த்திமார்க்கத்தைக் காண்பிக்கிறானோ அவனே வீரன்.

1003. நமது அழகிய, நம்பிக்கையுள்ள பையன்கள், விவாகமென்று கூறப்படுகின்ற இந்த மிருகத்தன்மையாம் பலிபீடத்திலே லக்ஷக்கணக்காக அவர்கள் கொலை செய்யப்படாவிட்டால், அவர்களிடம் எல்லாம் இருக்கிறது.

1004. எவர்மீதும் சார்ந்திருக்கிறவன் சத்தியமாகிற ஈச்வரனுக்குப் பணிவிடை செய்ய முடியாது. ஆத்மாவே! அமைதியாயிரு, ஏகாந்தத்திலிரு, ஈச்வரன் உன்னுடன் இருக்கிறார்.

ஸ்ரீ ஸ்வாமி விவேகாநந்தர் ஆத்மஞானாக்கினம்.

முற்றிற்று.

---